# கந்த புராணம்

(வசனம்)

வித்துவான்
எஸ். வி. முத்துக்கிருஷ்ண ரெட்டியாரவர்கள்



# கந்த புராணம்

## (வசனம்)

(திருத்தமான இரண்டாம் பதிப்பு)




இது

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயத்து மகா சந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ

சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்

மாணவர்

வித்துவான்

என். வி. முத்துக்கிருஷ்ண ரெட்டியாரவர்கள்

இயற்றியது.




உமாதேவன் கம்பெனி,
16, செம்புதாஸ் தெரு, சென்னை—1

இந்நூல் தெள்ளிய இனிய செந்தமிழ் நடையிலே கந்தபுராணச் செய்யுட்களின் கருத்துகளையும் முறைமையையும் தழுவிச் சுருக்கமாக வித்துவான் என். வி. முத்துக்கிருஷ்ண ரெட்டியாரவர்களால் எழுதப்பட்டுள்ளது. இதனைப் படிப்பவர் மனம் உருகி, அன்பு வயப்பட்டு, முருக தாசர்களாய் விளங்குவர் என்பது திண்ணம். இதனைப் பெண் பாலாரும் சிறுவரும் முதியரும் எளிதில் படித்து உணரலாம். இது தமிழழகு பூத்துச் சைவசித்தாந்த நறுமணம் வீசி, பத்தித் தேன் சொட்டி, ஞானக்கனிந்து நிற்றலைக்கண்டு அன்பர் களி துளும்புவர் என்பது ஒருதலை.

பதிப்பாளர்

# பொருளடக்கம்

## I. உற்பத்தி காண்டம்



## II. அசுர காண்டம்

## III. மகேந்திர காண்டம்



## IV. உயுத்த காண்டம்



## V. தேவ காண்டம்






## VI. தக்ஷ காண்டம்

# கந்த புராண வசனம்

## நூல் வரலாறு

### விநாயகர் காப்பு

'திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்!'

உலக காரணனாகிய சிவபெருமான் திருவருளால் தோன்றிய வேதம் முதலிய முதனூல்கள், முன்னொரு காலத்தில் ஆன்மாக்கள் செய்த தீவினையின் காரணமாகத் தலைதடுமாற்றங் கொண்டன. அதனால், திருமால் முதலிய தேவர்கள் ஒன்று கூடி, 'நாம் இவற்றை ஒழுங்குபடுத்துவது அசாத்தியமாகும்; ஆனதால், நாம் சிவபெருமான் சந்நிதியில் விண்ணப்பிப்போம்,' என்று, திருக்கைலையை அடைந்து, நந்தி தேவர் உத்தரவால் சிவ சந்நிதானம் அடைந்து, துதித்து நின்றார்கள்.

அதற்கிரங்கிய சிவபெருமான், 'உங்கள் அரசியல்கள் நன்றாய் நடக்கின்றனவோ?' என்று வினவ, அவர்கள், பெருமானை நோக்கி, 'இறைவரே, தேவரீர் கிருபையால் செவ்வனே நடக்கின்றன; ஆயினும், ஆன்மாக்கள் மாயையால் மூடப்பட்டுத் தேவரீரின் பரத்துவத்தை உறுதியாக எண்ணாமல், அதனை எங்கள்மேலேற்றி ஒப்பிடுகின்றார்கள்; அந்தணர் முதலியவர் தத்தம் வருணத்திற்கோதிய ஒழுக்கத்திற்றவறி நடக்கின்றனர். ஆதலால், இத்தீமைகள் ஒழிய அருள் புரியவேண்டும்,' என்று வேண்டினார்கள். சிவபெருமான், திருமாலை நோக்கி, 'திருமாலே, உன் கலைகளில் ஒன்றைக்கொண்டு வியாசமுனியாக அவதாரஞ் செய்து, வேதங்களை ஆராய்ந்து, நான்காகத் தொகுத்து, மாணாக்கராயினார்க்கு உபதேசிப்பாய்; வேதாகமங்களுக்கு மாறுபாடில்லாமல் பதினெண்புராணங்களையும் நந்திக்கு அருளினோம். அவன், சனற்குமாரனுக்கு உபதேசித்தான். நீ அவனிடத்தில் அப்புராணங்களைக் கேட்பாயாக,' என்றருளிச்செய்தனன். அவ்வருளைப் பெற்ற அனைவரும், தத்தம் பதி புகுந்திருந்தனர்.

பின்னர்த் திருமால், பிரமனது மரபில், பராசர முனிவன் யோசனை கந்தியைச்சேர, அவ்விருவர்க்குப் புதல்வனாய் அவதரித்துச் சிலநாள் கழித்துப் பதரி வனம் அடைந்து, இறைவன் திருவருளால் வேதாகமாதி பல கலைகளையும் ஓதாதுணர்ந்து, வாதராயணன் என்னுங் காரணப்பெயர் பெற்றிருந்தான். வேதங்களைத் தொகுத்தமையான் வேதவியாசன் எனப் பெயர் பெற்ற அவன், சனற்குமாரமுனிவனிடம் புராணம் பதினெட்டினையுங் கேட்டு, ஐயமறத் தன் மனத்தமைத்தான். வேதங்களை அறிந்த நுண்ணறிவால் வேதாந்த சூத்திரஞ்செய்து, அதை அவ்வேதங்களோடு பயிலவர், வைசம்பாயனர், சைமினி, சுமந்து என்னும் நால்வருக்கும் போதித்தருளினன். பிறகு வியாச முனிவன் ஆணையின்படி அந்நால்வரும், தம்மை வணங்கும் மாணாக்கருக்குப் பக்குவம் நோக்கி அவற்றை உணர்த்தி வந்தனர். வியாச பகவான் அருளால் வேதபுராணங்களெல்லாம் உலக முழுமையும் பரந்தன.

சூதமுனிவன், 'புராணம் பதினெட்டனுள் சிவபுராணம் பத்து; விஷ்ணுபுராணம் நான்கு; பிரமபுராணம் இரண்டு; சூரிய புராணம் ஒன்று; அக்கினி புராணம் ஒன்று. அச்சிவ புராணம் பத்தனுள் அறுமுகன் திருவவதாரம் முதலியவற்றைக் கூறும் கந்த புராணத்தைத் தொகை வகை விரியாற்கூறுவேன்,' என்று முனிவரை நோக்கிச் சொல்லத் தொடங்கினன் :

'தக்ஷப்பிரஜாபதிக்கு மகளாகிய தாக்ஷாயணி என்னும் இறைவியானவள், அப்பெயரை ஒழிக்கக் கருதி, மலையரசன் தவத்தால் அவன் விருப்பப்படி அவனுக்கு மகளாயவதரித்து, அவனிடம் வளர்ந்து வந்தாள்.

'காசிபமுனிவனுக்கு மாயையினிடம் சூரபன்மன் முதலிய மூவர் தோன்றிச் சிவபெருமானைக் குறித்துத் தவமியற்றிப் பெருஞ்செல்வம் அடைந்திருந்தனர். அவருள் சூரபன்மன் மகேந்திர நகரத்திலிருந்து ஆயிரத்தெட்டு அண்டங்களையும் கொடுங்கோன்மையால் ஆண்டு வந்தான். திருக்கைலையில் சனகர் முதலிய நால்வர்க்கும் மோனமாகிய ஞானநிலையினைக் காட்டிச் சிவபெருமான் அமர்ந்திருந்தருளினன். சூரன் கொடுஞ்செயல்களைப் பொறாத தேவர் சிலர், சிறைப்பட்டு மாழ்க, சிலர் மறைபட்டு நொந்து, பிரமனோடு கலந்து, மீனக்கொடியனை இறைவனது மோன நிலையைக் கலைக்கும்படி ஏவ, அவன் அத்தொழிலுக்கு முயன்று, சிவபெருமான் நெற்றிக்கண் தீயினால் சாம்பராயினன்.

'பிறகு சிவபெருமான் முனிவரெழுவரை அனுப்பி, இமாசலனிடம் பெண் பேசி, திருமணத்திற்குச் செல்லப் பூதகணங்கள் ஒருங்கு சூழ்ந்த பாரத்தினால் வட திசை தாழ, அது சமமாக அகத்தியனைத் தென்திசைக்குச் செலுத்தி, மலைமகளை மணந்து, மன்மதனை உயிர்ப்பித்தருளினான். அதன் பின் திருக்கைலாயத்தில் அமர்ந்தருளித் தன் ஆறு முகங்களினுமுள்ள ஆறு நெற்றிக்கண்களால் ஆறுதீப்பொறியுருவாய்க் குமார மூர்த்தியைத் தந்து, ஒன்பது வீரர்களையும், இலக்கம் தம்பிமார்களையும் அக்குமாரனுக்கு உதவியாகும்படி அம்மையின் காற்சிலம்பின் மணிகளினின்றுந் தோன்றச் செய்தான். குழந்தை வடிவாகி வளர்ந்த அக்குமரன், அற்புதத் திருவிளையாடல் பல புரிந்து, அறியாது அவமதித்துப் போர் புரிந்த தேவரைக்கொன்று, வியாழ பகவான் வேண்டுகையால் மீண்டும் அவரை எழுப்பித் தன் காட்சி தந்தருளினான்.

'பிறகு நாரதனியற்றிய வேள்வியிற்றோன்றிய தகரை, அஃது உலகினரை நலியாவண்ணம் வாகனமாக்கி அடக்கியும், பிரமன் ஓமெனும் பொருட்கு உரை தெரியாது மயங்க அவனைக் குட்டிச் சிறையிலிட்டுத் தான் சிருட்டித்தொழிலை நடாத்தியும், இறைவன் கேட்க அவனுக்கு ஆசானாய் எழுந்தருளி அப்பொருள் கூறியும், வழிபட்ட அகத்தியனுக்கு வேதாகமப் பொருளை உபதேசித்துமிருந்தான். பிறகு சிவபெருமான், 'சூரன் முதலியவரைக் கொன்று தேவர்களிடரைத் தீர்க்கக் கடவாய்,' என்ன, அவ்வாறே தாரகனைக் கொன்று, தேவர் பூஜை ஏற்றுத் தென்திசை நோக்கிச்சென்று, இறைவன் அமர்ந்த பதி பலவும் பூஜித்துத் திருச்சேய்ஞலூரிற் பெருமானை வணங்கிப் பாசுபதம் பெற்றுத் திருப்பரங்குன்றிற் செல்ல, சரவணப் பொய்கையில் மீன்களாயிருந்து தனதருளால் சாபம் நீங்கி அங்கு வசிக்கும் பராசரன் புதல்வர் அறுவரும் வந்தனர். பெருமான் அவரை நோக்கி, 'யாம் இங்கு வருவோம்; அச்சமயம் வேதாகமங்களின் முடிவுப் பொருள்களை உமக்கு அருளுவோம்,' என்று விடையளித்துப் பிறகு திருச்செந்தூரையடைந்து, சூராதிகள் வரலாற்றை வியாழபகவானாற் கேட்டு, வீரபாகுவைச் சூரனிடந் தூதனுப்பி, அச்சூரன் இசையாமையால் படைகொடு மகேந்திர நகரடைந்து, சூரன் கிளைஞர் முதலியவரைச் சங்கரித்துச் சூரன் மார்பையும் வேற்படையாற்பிளந்து நிற்க, அவன், மயிலுஞ்சேவலுமாய் உருவெடுத்து வர, மயிலை வாகனமாக்கியும், சேவலைக் கொடியாக்கியும் அருள் புரிந்தான்.

'மீண்டு சென்ற குமரன், திருச்செந்தூரிற் சிலநாள் தங்கிப் பின் பரங்குன்றடைந்து, அங்குத் தெய்வயானையம்மையைத் திருமணமுடித்துப் பராசரர் புதல்வருக்கு வேதாகம முடிவுணர்த்தி, இந்திரனுக்கு விண்ணரசீந்து, தேவசேனாபதி என்னுந் திருநாமங்கொண்டருளி, தெய்வயானையம்மையொடு திருக்கைலையடைந்து, இறைவனை வணங்கிக் கந்தகிரி அடைந்து, பின் தொண்டை நாட்டின்கணுள்ள திருத்தணிகை மாமலையை அடைந்தருளினன்.

'ஒரு நாள் நாரத முனிவன் சென்று வணங்கி, வள்ளி மலையில் மான் வயிற்றிற்பிறந்து வேடரால் வளர்க்கப்பட்டு வள்ளி நாயகியென்னுந் திருநாமத்தையடைந்துள்ள அப்பெண்ணின் அழகு முதலியவற்றை எடுத்துரைத்தான். அறுமுகன், அவளை மணம் புரிய விரும்பி, அம்மலையை அடைந்து, அவளுக்குப் பல திருவுருக்களைக் காட்டித் தமிழிற்குப் பரமாசாரியனாகிய தான், களவியற்பொருளை உண்மையெனக் காட்டுவான் போல அக்களவியலுக்கு இலக்கியங் காட்டத் துணிவுகொண்டு, களிறு தரு புணர்ச்சியால் வள்ளியைக் கொண்டு செல்ல, அதனையறிந்த வேடர்கள் தொடர்ந்து போர் செய்ய, அவர்களைத் தன் கொடிச்சேவலின் பேரொலியால் மயங்கி வீழ்ந்திறக்கச் செய்து, பின்னர் அம்மையால் அவர்களையெழுப்பி, அவளையுந் திருமணம் புரிந்து சென்று, அவளோடு தணிகை வரையில் சில பகல் வைகியருளினன்.

'பிறகு கந்தகிரியை அடைந்து தெய்வயானை, வள்ளிநாயகி ஆகிய இருவரும் கிரியா சத்தி, இச்சா சத்திகளாய் இரு புறம் வீற்றிருக்கத் திருக்கரத்தில் வேற்படையாகிய ஞானசத்தியை ஏந்தி எழுந்தருளியிருந்தான்.'

இங்ஙனம் சூதமுனிவன் கூற, அதனைக் கேட்ட முனிவர், 'இதனைப் பத்தியோடும் கேட்போம்; இது போல வேறு கதையைக் கேட்க விருப்பமில்லோம்; இதனைச் சுருக்கி உரைத்த அடிகள், விரித்துரைக்க வேண்டும்,' என்று பணிய, அவர்களது பணிவுக்கிரங்கிய சூதமுனிவன், குமாரக்கடவுளின் சரிதத்தை விரித்துக் கூறத்தொடங்கினன் :

உ

சிவமயம்

சண்முகக் கடவுள் துணை.

# கந்தபுராணம்



## I

## உற்பத்தி காண்டம்

### 1. திருக்கயிலாயப் படலம்

திருக்கயிலாய மலையானது தன்னை வழிபடும் அன்பருக்குப் பாசத்தை நீக்கி அருள் பாலிக்கும் இறைவனைப்போலத் தன்னை அடைந்தாரது ஒளியை மாற்றித் தனது சிறந்த ஒளியை வீசுவது; கங்காதரனாகிய சிவபெருமான் ஏறும் இடபமும், அவனது திருநீற்றுக் கோலமும், அவனைத் தெளிந்த அன்பரது உள்ளமும் போலத் திகழ்வது; தேன் பிலிற்றுங் கொன்றையும் வில்வமுஞ் செறிந்த நற்பூஞ்சோலையைச் சிரத்தினுடைமையானும், வான்யாறு தவழப்பெறும் வண்மையினானும், அன்று ஆலமுண்டவனை ஒத்தது. அது ஆயிரங்கோடி சந்திரர் ஒருங்கே உதித்தாற்போன்று ஒளி வீசி, நந்தி தேவனால் காவல் செய்யப் பட்டுள்ளது. இந்திரன் முதலிய தேவரும் முனிவரும் நெருங்கி நின்று வணங்குவதும், அரமகளிர் ஆடல் பாடல் புரிவதும், தன் சிகரத்தால் மேலுள்ள சுவர்க்க லோகங்களையும் அடியால் அதோ லோகங்களையும் ஊடுருவிச் செல்வதும் அதுவே.

அடி முடி காண்டற்கு அரிதாகிய அம்மலையினிடை மாற் றுயர்ந்த பொன்மலை போன்று மணித்தொகுதிகளின் ஒளி வீசப் பொற்கோயிலொன்று பொலிவுறும். அதனுள் மணி மண்டபமும், அதனிடை அரதனங் குயிற்றிய அரியாசனமும்

விளங்க, அதன்மேல் சருவலோக மாதாவாகிய உமாதேவியோடு இறைவனாகிய சிவபெருமான் வீற்றிருந்து, வழிபடும் அடியவருக்கு அனுக்கிரகத்தைச் செய்தருளுவன்.

## 2. பார்ப்பதிப் படலம்

அங்ஙனம் அமர்ந்திருக்குங்கால் உமையம்மை, பரமபதியை நோக்கி ஒன்றியம்பத் தொடங்கி, "நான் தேவரீரிடத்து அன்பில்லாத தக்ஷனுக்கு மகளாகித் தாக்ஷாயணி என்னும் பெயரை உடையளாய் இருப்பது எனக்கு மனக்கவலையை உண்டு பண்ணுகிறது. ஆதலின், அவன் சம்பந்தமாகிய இப் பெயரினை ஒழிக்க எண்ணினேன்," என்றனள்.

அதனைக் கேட்ட சிவபெருமான், "நீ கொண்ட கருத்து மிகவும் நன்று! அதற்கியைய் மலையரசன் நம்மாட்டு அன்பு மிகுதியால், உன்னைத் தன் மகளாகப்பெற்று எமக்குத் திருமணஞ் செய்துகொடுக்கக் காதலுடையனாய்க் கடுந்தவம் இயற்றுகின்றான். நீ அவனுக்குப் புதல்வியாகச் சென்று தவமியற்றுதி," என்றருளினன். அம்மையும் அவ்வாறே இமாசலத்திற்கேகி அதனிடத்துள்ள தாமரைத் தடாகத்தில் ஒரு தாமரை மலரின் மேல் குழந்தைத் திருவுருவங் கொண்டிருந்தனள்.

அதனருகே தவங்கிடந்த மலையரசன், அக்குழந்தையைக் கண்டு, தன் தவத்தின் பயனெனக் கருதி, கண்ணினில் அன்பு நீர் வார ஏந்திச் சென்று, தன் மனைவி மேனை என்பாளிடத்துக் கொடுக்க, அவளிடைத் தலையன்பு கிடந்தமையால், இரு தனமும் பால் சொரியப் பெற்றனள். பின்னர் மேனையானவள், அக்குழந்தையை அணிகளணிந்து அழகு பார்த்து ஆனந்தங் கொண்டு வளர்த்து வருங்கால், ஐந்தாண்டெல்லை அணுகியது. அப்பெண்கள் திலகம், "இறைவனை நோக்கித் தவஞ்செய்ய எண்ணினேன்; அவனையே நாயகனாகக் கருதினேன்; ஆதலின், இம்மலையின் ஒரு சார் தவச் சாலையிலிருந்து நோற்பேன்; ஆதலின், விடை தருவீர்," என்றாள். மலையரசன், "நீ ஐந்து வயதில் தவமியற்றலாகாது. உடல் வருந்தும்; வேண்டா," என்றனன். அம்மையானவள், 'இறைவனிடத்து வைத்த அன்பினைத் தடை செய்யற்க,' என்று அவன் இணங்குமாற்றாற்கூறி, விடை பெற்றுத் தவமுயன்றிருந்தாள். அவளைச் சூழத் தவத்திற்குக்

காவலாய்ப் பல சேடிமார்களிருக்கவும், வைகலும் அக்கிரியர சனும் மேனையும் சென்று அவளது தவத்தைப் போற்றிச் சென்றனர்.

இவ்வாறு அம்மை தவமியற்றத் திருக்கயிலேயிற் பிரிந்த பின்னர், சிவபெருமான் செய்தவற்றை இனிக் கூறத் தொடங்குவாம்: காசிப முனிவனுக்கு மாயையால் தோன்றிய சூரபன்மன் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் அரசு புரிந்து வந்தான். அக்காலத்தில் சனகனை முதலிட்ட முனிவர் நால்வரும் தவஞ் செய்து திருக்கயிலையை அடைந்து, நந்தி தேவன் ஆணையால் சிவபரஞ்சுடரைத் தரிசித்து வணங்கி, ஆகமப் பொருளை அருள வேண்டினர். பெருமான், அவர்களுக்கு ஆகமத்தின் மூன்று பாதப்பொருளை உபதேசித்து, ஞான பாதத்தை உணர்த்த அருள் கூர்ந்து, 'அது வாக்கினாற்சொல்லக்கூடியது அன்று; இவ்வாறு சும்மாவிருத்தலேயாகும்,' என்று தன் ஞான முத்திரையமைத்த திருக்கரத்தை மார்பிலமைத்து, ஒரு கணப் பொழுது யோகஞ் செய்வான்போன்றிருந்தருளினான். முனிவர் நால்வரும் அவனருளால் ஞானபாதமுணர்ந்து, மோனத்திருந்தனர். நந்தி பகவான் இறைவன் ஆணைபின்படியே கிழக்கு வாயிலில் காவல் போற்றியிருந்தான். அவ்வாறு நிகழ்ந்த ஒரு கணம், மற்றைப் பிரமன் முதலியவருக்கு யுகங்கள் பலவாயிற்று. அஃதன்றி, விண்ணுறைவாரும் பெண் மயக்கின்றி மண்ணுறைவாரும் மகளிரை விழையாது அருந்துறவினர்போல அவாவற்றிருந்தனர். இது நிற்க.

சூரபதுமனால் இடுக்கண் அடைந்த இந்திரன், தன்னகர் விட்டுக் கயிலையையடைந்து தவமியற்றினான். சிவபெருமான் எழுந்தருளி, "நீ வேண்டுவது யாது?" என, இந்திரன், "சூரனைக் கொன்று விண்ணுலகளிக்க அடியேன் வேண்டினேன்," என்ன, இறைவன், "நீ அஞ்சல்! அஞ்சல்! நம்பால் மதலை ஒருவன் உதிப்பன்; அவனே உங்கள் வாழ்வினை அளிப்பன்," என்றுரைத்து மறைந்தருளினான். பின்னர் இந்திரன், "சிவபெருமான் யோகி போன்று அமர்ந்திருக்கின்றான். அம்மையோ, அருந்தவமியற்றுகின்றாள்; இவர்பாற் குமரன் தோன்றுதல் எவ்வாறு!" எனக் கலங்கித் தன் பட்டமகிஷியாகிய

அயிராணியை மனோவதி நகரிற் கொண்டுபோய்த் தன் ஆசான் மனைவியிடத்தே விட்டுத் தான் தேவர்களோடு சென்று பிரமனை அடைந்து, தன் குறைகளைக் கூறினான். பிரமன், வந்த தேவர்களோடும் விண்டுவினிடஞ் சென்று, சிவபெருமான் யோகம் செய்வதும், அதனால் உலகம் அசைவற்றிருப்பதும், தனது சிருட்டித் தொழில் நடவாததும் இயம்பிச் சூரனால் பொறுக்க இயலாத் துன்பமனுபவித்தலையும் பகர்ந்து, "தீர்வுக்கு வழி என்னை?" என்று துதித்து நின்றனன். அதற்குத் திருமகள் கணவன் மகிழ்ந்து, "சிவபெருமான் மோனம் நீங்கி உமையை மணந்தாலன்றி, நங்குறையனைத்தும் தொலையாவாகலான், அவ்வாறவனை மயலுறுத்துதற்கு ஞானிகளையெல்லாம் பெண் மயக்கில் அழுத்துபவனாகிய மன்மதனால் அன்றி ஏனையோரால் இயலாது. ஆனதால், அவனை அழைத்துச் சிவபெருமான் மோனத்தின் நீங்கி மயலுறுமாறு செய்வித்தால், அவன் உமையை மணந்து குமரனை அளிப்பன். நமது இன்னல் நீங்கும். ஆதலால், அதனை விரைந்து செய்ம்மின்," என, பிரமன் சம்மதித்துத் தன்னகர் அடைந்தான்; அடைந்து, தன் மலர்ப்பீடத்திலிருந்து, மீனகேதனனை அவ்வுழி வருமாறு தன் மனத்தில் எண்ணினான்.

## 3. காமதகனப் படலம்

அவன் நினைத்தபடியே மன்மதன் விரைந்தெய்தி, "என்னை வருமாறெண்ணியது என்கொல்?" என்ன, பிரமன், "பரமசிவன் கொண்டுள்ள மோனம் நீங்கி மலைமகளை விழைந்து மணம் புரியுமாறு நின் பூங்கணையால் அவனை மயக்கி வெல்லக் கடவை," என்றான்.

அது கேட்ட மதன், இரு காதையுங் கைகளாற்பொத்தி, "என் தாதையாகிய திருமாலையும், நின்னையும், ஏனைய உயிர்களையும், என் அம்புகளால் மயலுறுத்திக் கலக்கி, ஆயிழையாரை அருந்தெய்வமென்றெண்ணி, குறைவிலாக் கிரியையால் அவர் பணியியற்றி அலமரல் அடையச் செய்தலல்லது கண்ணுதலானைக் கலக்க வல்லேன்கொல்? அவனிடைச் செல்லேன்! அவனிடைச் செல்லேன்!" எனக் கூறினன்.

பிரமன், "நீ செல்லினல்லது தேவரடைந்துள துன்பம் நீங்காது; அவர் நிமித்தம் உன்னுயிர் நீங்கினும், உனக்குப் புகழே. நீ செல்ல வேண்டுவதவசியம்; அவ்வாறன்றித் தடுத்து மொழிவையேல், நின்னைச் சபிப்பன்!" என, அம்மீனக்கொடியோன், அச்சாபத்தினும் சிவபெருமானது வெகுளியே சீர்மையுடைத்து என்றெண்ணி, நடுக்கமடைந்து, அவ்வாறே செய்வதாகப் பிரமனிடம் விடை பெற்றுத் தன் கருவிகளுடன் திருக்கயிலையை அடைந்து, நந்தியம்பெருமானைக் கண்ணுற்று நடுங்கி, வணங்கி, உற்றதியம்பி, உட்செல்ல விடை தர வேண்டினன். நந்தி, "நலமே இவன் செய்கை! 'இவன் வரிற்றடாது ஏனைத் தேவர் வரின் விடாது காத்தி,' என்று பரமன் அன்றே ஆணை தந்துளானன்றே? ஆதலின், இவனைப் பெம்மானிடம் புகவிடுவேம்," என்று கருதி, மேலை வாயில்வாய் ஐங்கணைக் கிழவனை அனுப்பினன்.

புகுந்த மன்மதன், கறைமிடற்றிறைவனைக் கண்டு, சரப்பட்சியைக் கண்ட சிங்கம் கலங்குவது போன்று கலங்கிக் கீழே விழுந்து, இரதிதேவியின் உபசாரத்தால் தெளிந்தெழுந்து, முப்புரமெரித்த மோனியின் எதிரில் முனைந்து நின்றான். நிற்க, இந்திரனை முதலிட்ட தேவர்கள் கூட்டத்தோடு பிரமன், அம்மலையின் ஒரு புறம் பரமனைப் பரவி நின்றான். போர்த்திறம் உன்னி நின்ற காமன், மலர்க்கணை ஐந்தினையும் அறிவன்மேற் செலுத்த, அச்சிவபெருமான் நெற்றி விழி சிறிதே விழிக்க, அவ்விழிக்கனல் காமனைச் சுட்டுப் பொடியாக்கியது. அச்செயலைக் கண்ட இரதி கலங்கி, உடல் பதைத்துப் பொடிமேல் விழுந்து புரண்டு,

"நேயமொடு மறைபயிலுந் திசைமுகனைப் புரந்தரனை
நின்னைத் தநத
மாயவனை முனிவர்களை யாவரையும் நின்கணையால்
மருட்டி வென்றாய்!
ஆயதுபோல் மதிமுடித்த பரமனையும் நினைந்திவ்வா
றழிவுற் றாயே!
தீயழலின் விளக்கத்திற் படுகின்ற பதங்கத்தின்
செயலி தன்றோ?"

என மொழிந்து புலம்பினள்.

## 4. மோனம் நீங்கு படலம்

**கா**மனை எரித்த கண்ணுதற்பெருமான் பின்னரும் மோனஞ் செய்ய, விண்ணவருணர்ந்து, "காமனும் பட்டான்; நங்கடுந்துயர் பட்டிலது. அந்தோ! என் செய்வது!" என்று ஆவலித்து, "சிவனன்றி அருளுவாரில்லையாகலான், அவனையே துதிப்பாம்," என அணுகிச் சென்று கோவிலின் மாடே குறை மொழிந்து நின்றனர். சிவபிரான், துதித்து முறை வேண்டிய தேவரை நந்தியம்பண்ணவனால் அழைப்பித்து, வணங்கி நின்ற அவரை நோக்கிக் குறையினை வினவ, அவர், "பெருமான் உணராப் பெற்றியுமுண்டோ? நீவிர் உமையை மணப்பதும், குமரனைத் தருவதும், அன்னான் சூரனைக் கொன்று எம் வாழ்வினை அளிப்பதும், அடியேம் வேண்டும் வரம்," என வணங்கினர். அவர்க்கிரங்கிய சிவபெருமான், "அவ்வண்ணமே செய்குவம்; அஞ்சலீர்," என்று அவரை அனுப்பி, இரதியை நோக்கி, "நீ கவலற்க. நம் மணம் நிகழ்காலை உன் கொழுநனைத் தருதும்," என்றவளையுமனுப்பி, தேவர் நிமித்தம் உமையினை மணக்க விரும்பி, முனிவர் நால்வரையும் நோக்கி, "இவ்வாறு மோனவரம்பில் நீவிர் நிலைத்து நிற்பிரேல், வீடு பேறு நமக்கெளிது," என அவர்க்கும் விடையளித்தருளினன்.

## 5. தவங்காண் படலம்

**அ**ம்முனிவர் நீங்கிய பின்னர்ச் சிவபெருமான் இமாசலஞ் சென்று மலைமகள் அன்பை அனைவருக்குங் காட்ட விரும்பிச் செஞ்சடையும், திருவெண்ணீறும், முப்புரி நூலும், கமண்டலமுமாகிய இவற்றுடன் வயோதிக மறையவர் வடிவுகொண்டு அம்மையின் அருந்தவச் சாலையை அடைந்தருளினன். அங்குள்ளவர், "அருந்தவத்தீர், இவண் புகுந்த காரியமென்னை?" என்று வினவ, "உமையவள் தவத்தினைக் காணிய வந்தேன்; என் வருகையை அவட்கு அறிவியுங்கள்," என்ன, ஆங்கவர் ஓடி, "அம்மையே, முற்றத் துறந்த முனிவர் ஒருவர் போந்தனர்; நின் தவங்காண விரும்பினர்," என்றனர். உமாதேவி, "விரைந்து தம்மின்; அருந்துறவினரேல், யானுங் காணுங் காதலுடையேன்," என, அச்சேடியர் அவரை அணுகி அழைத்

துச் சென்று, உமையவள் அருகில் விடுத்து, உபசரித்து நின்றனர். அம்மை வணங்கி, ஆசனந் தந்து அருகில் நிற்ப, அருந்துறவியார் அம்மையை நோக்கி, "உமையே, நின்னுடல் வருந்த இக்கடுந்தவமியற்றல் என் பயன் கருதி?" என்ன, உயிர்ப்பாங்கி விச்யை, "ஆலமுண்ட ஐயனை அருமை நாயகனாக அடைதல் வேண்டி," என்றனள். அக்காலை அத்துறவியார், "இவள் அருந் தவத்தினை விரும்பி மணப்பவன் அச்சிவபெருமானே! வேதமுங் காணு விழுப்பொருளாகிய அவனையடைதல் அரிது! இவளது தவமும் அவமாம். ஆதலின், தவத்தினையொழித்திருத்தல் நலம்," எனக் கூறியதைக் கேட்ட அம்மை, 'பெருந்தவமியற்றியும் பெறுவன் சிவனை! அல்லுழி யாக்கையை அழிப்பன்,' என்றுரைத்தாள். அருந்தவர், "உமையே, நீ அவனை அடையினும், அவன் உடை புலித்தோல்; ஏறுவதெருது; அணி பாம்பு; மாலை என்பு வெண்டலை; உணவு ஆலம்; நடம்புரி அரங்குஞ் சுடுகாடாகும்; அணியும் பூ நொச்சி; பூசுவது நீறு; கையில் ஏந்துவது அழல். இன்ன மங்கலங்களே அவற்குள வாவன. இவற்றை விரும்பியோ வரைதல் எண்ணினை!" என்றார். அவ்வுரை கேட்ட அம்மை, "விருப்பு வெறுப்பில்லா இவையெல்லாம் இறைவன் ஆன்மாக்கள் வீடு பெறுதல் கருதிக் கொள்ளுங் கோலங்காண்! இறைவன் புகழைச் சிறிதும் அறியாது இகழ்ந்து கூறிய பொய் வேடத்தாய், நீ புறத்துப் போதி," என்றனள். அருந்தவர், "நங்கையே, நின்னை வேட்டு நலம் பெற வந்தேன்," என்றார். தன் செவி பொத்தித் தாயுமொருபுறமேகினள். அவளன்பின் பெருக்கைக் கண்ட சிவ பெருமான், அவ்வேடம் நீத்து, இடபாரூடனாய்க் கணங்கள் சூழ ஆகாய வீதியில் காட்சி தந்தருள, "அருந்தவராய் வந்தவர் இவரன்றோ!" என மனங்கசிந்து, பன்முறை வணங்கி, "அடியாள் செய்த பிழையை மன்னித்தருளல் வேண்டும்!" என்று இறைஞ்சி நாணி நின்றவளைப் பார்த்து, "நீ ஒன்றிற்கும் வருந்தாதே. நின்பால் குற்றமொன்றுமிலது. நாளையே யாம் வந்து திருமணம் முடிப்பேம்," என்றகன்றருளினன். உமையின் தவத்தால் பரமன் வந்து அருளிய அனைத்தும் மலையரசன் கேட்டு உவந்து, அங்குச் சென்று, அம்மையை அழைத்துத் தன் அரண்மனை எய்தினன்.

## 6. மணம் பேசு படலம்

உமையம்மைக்கு அருள்புரிந்து திருக்கயிலை அடைந்த சிவபெருமான், முனிவரெழுவரைத் தன்னிடம் வருமாறு மனத்தில் நினைத்தருளினன். அஃதுணர்ந்த முனிவர்கள், தம்மாட்டு வைத்த கருணைபோலும் சிவபெருமான் தம்மைப் பொருட்படுத்தி அழைத்ததென்றுணர்ந்து, அங்ஙனமே பெருமான் சன்னிதானஞ் சென்றடைந்தார்கள். அம்முனிவர்களிடம் இறைவன், "இமாசலஞ் சென்று மலையரசனைத் தன் மகள் உமையை எமக்கு விதிப்படி மணமுடித்துத் தரப்பணித்து வாருங்கள்," எனக் கூறினன். அவர்கள் வணங்கி, அவ்வாறே இமாசலமடைந்தார்கள்.

முனிவர்களைக் கண்ட மலையரசன், அவர்கள் திருவடிகளை வணங்கி, அன்பு கூர்ந்து வந்த காரியத்தைத் தெரிவித்தருள வேண்டினன். முனிவர்கள், "உன் மகள் உமையை உயர் பரம்பொருளுக்கு முறைப்படி நன்மணம் பேச வந்தனம்; ஈதே அவனது கருத்து," என்றார்கள். மலையரசன், "என் உமையையும் அளிப்பேன்; யானும் அவனடிக்குத் தொண்டனாவேன்," என்றான். அயலில் நின்ற அவன் மனைவியாகிய மேனை என்பாள், "முன்னொரு ஞான்று தக்ஷன் புதல்வி தாக்ஷாயணியைச் சிவபெருமான் மணந்து, அத்தக்ஷன் மாமனாகிய பின்னர் அவன் தலையைத் தடிந்து ஆட்டின் தலையை அவனுக்கு அமைத்தானல்லவா? அது போல என் கணவர் தலைக்கும் தடுமாற்றந் தந்தீர்கள் போலும்! ஐயோ! உமையை அளித்தல் எவ்வாறியலும்?" என்றனள். முனிவர்கள், "நீ யாதொன்றினுக்கும் இரங்காதே! தக்ஷன் செய்தது மிக்கதாய சிவாபராதம். அவ்வாறு நீங்கள் ஒரு போதுஞ் செய்யமாட்டீர்கள். சிவபெருமான் உங்களிடத்து அருளையே பாலிப்பன்," என்று அவன் அடைவுகளை எடுத்துக்கூற, மலையரசனும் மேனையும் மணத்திற்கிசைந்து, முனிவர்களுக்கு விடை கொடுத்தார்கள். முனிவரெழுவரும் திருக்கயிலையை அடைந்து, பரமனை வணங்கி, நிகழ்ந்தவற்றைக் கூறினர். பெருமான், அவர்க்கு விடை அளித்தருளினன்.

அங்கு மலையரசன் தேவ தச்சனை அழைத்து, பொன்னுல கினும் அளகையினும் அழகுற மண மண்டபம் அமைக்கச் செய்து, தன் பரிஜனங்களோடும் கயிலையை அடைந்து, நந்தியம் பண்ணவனால் நாதன் திருமுன்னர்ச் சென்று பணிந்து, "பங்குனி உத்தர நன்னாள் இன்றேயாதலின், உமையைக் கடிமணம் முடிக்க வரவு அருளுதி," என்று வேண்டினன். பெருமான் தேவர் முதலியவரும் கணங்களுஞ் சூழ அப் பொழுதே புறப்பட, மலையரசன் விரைந்து தன்பதியணைந்தான்.

அச்சமயம் சிவபெருமான், திருமால், பிரமன் முதலிய தேவரையும் எல்லா மக்களையும் தருவிக்குமாறு நந்திதேவனுக் குணர்த்த, அவன் அவ்வாறே நிகழ்த்த, அவர்கள் வந்து பெரு மானை வணங்கித் துதித்து, அவ்வவர் தகுதிக்கேற்ப இருந்தார் கள். பிரமன், தான் கொணர்ந்த மணியணிகளை அணிய வேண்டுதலும், சிவபெருமான் அவ்வாறே திருக்கரத்தை வைத்து அனுக்கிரகித்துப் பின்னர்த் தன் மேலுள்ள பணிகளை அணிகளாகும்படி சங்கற்பித்து, மணக்கோலங்கொண்டு, யாவ ருங் கண்டு வணங்க, இமாசலம் நோக்கிக் கணங்கள் சூழ எழுந் தருளினன். இவ்வாறு ஞான ரூபமாயுள்ள ஏற்றின்மீது சிவ பெருமான் திகழ்ந்து வர, கணேசர் முன்னின்று துதிக்க, மற் றைத் தேவர்களும் கணங்களுஞ் சூழ்ந்து புகழ் பாடியும் ஆடி யும் வர, இமாசலன் எதிர் சென்று வணங்கித் தன்னகரிடத்து அழைத்துச் செல்ல, அப்பொழுது அவ்வீதிகளில் உள்ளோரது அரகர முழக்கம் கடலொலி போன்று இருந்தது. பிரமன் பதத்தினுஞ் சிறந்துள்ளனவும், இலக்குமியும் விரும்பி அமரும் பெருமையுடையனவுமாகிய அவ்வீதிகளை நோக்கிக்கொண்டு பராபரையாகிய உமையம்மை எழுந்தருளியிருக்கும் மாளி கையை அடைந்தருளினன். அரம்பையரையொத்த மாதர் பலர் மங்கல தீர்த்தம் அட்ட மங்கலங்கள் ஆரதி முதலிய ஏந்தி உபசரிக்கச் சென்ற ஞான நாயகன் திருவடிகளை மேனை யானவள் பசுவின் பாலினால் அபிடேகஞ் செய்து வணங்கவும், திருமால் பிரமன் முதலியவர் துதித்துப் பாங்கரில் வரவும், நின் மலனாகிய சிவபெருமான், திருமணச் சாலையில் இடப்பட்டு இந் திர நீலத்தாலாக்கியுள்ள ஆசனத்திலெழுந்தருளியிருந்தான்.

அம்மகா சபையின்கண் தேவர் முனிவர் முதலிய அளவிறந்தார் குழுமி இருந்தமையால், பூமியின் வடதிசை தாழ்ந்து தென் திசை உயரவும், அனைவருந் துண்ணென நடுக்கமடைந்தனர். அவர் அச்சம் நோக்கிய சிவபெருமான், அகத்திய முனிவனை விளித்து, " நீ நமது ஆணையால் தென்பாலுள்ள பொதிகைக்கு ஏகுவாய். அங்கு நம் மணக்கோலங் காட்டுதும்," என்றருள, அவ்வாணை தாங்கி முனிவனேகி இருப்பப் பூமி சம நிலையாயது.

பின்னர் உமாதேவியானவள், தேவமாதர்கள் சூழ்ந்து வரவும், திருமாது கைலாகு கொடுக்கவும், கங்கை முதலிய மாதர்கள் கவரி வீசவும், ஏனைய மாதர் பல்பணி இயற்றவும் சென்று, திருமணச் சாலையில் அமைத்திருந்த மணப் பீடிகையில் முன்னர் அமர்ந்துள்ள முதல்வனைப் பணிந்து, அவனருளால் பாங்கரில் அமர்ந்தருளினாள். அது காலை அளவிறந்த வாத்தியங்கள் இயம்பாநின்றன. மேனையும், மலையரசனும் புனித தீர்த்தம் புஷ்பம் சந்தனம் முதலியன கொண்டு முன்னவன் திருவடிகளை அபிஷேகித்து, அருச்சனை இயற்றி, அவனருள் கொண்டு நிற்ப, திருமணச் சடங்குகள் யாவும் செவ்வனே நடைபெற, இமாசலன் அம்மையின் திருக்கரத்தை இறைவன் திருக்கரத்தில் அமைத்து மந்திர விதிப்படி தாரை வார்த்துக்கொடுத்தான். அந்த விபவத்தைக் கண்ட தேவர் முதலியவர் தாம் எய்துதற்குரிய போக மோக்ஷங்களை எளிதில் எய்தியவராயினர். அப்பொழுது மலையரசன், பசுவின்பால், வாழைக்கனி, பலாக்கனி, நெய், தேன் முதலியன கலந்த திருவமுதைப் பொன் வட்டிலில் கொடுபோந்து இறைவன் திருமுன்னர் வைத்து, அமுது செய்யும்படி வேண்ட, அப்பெருமான் திருக்கரந் தொட்டுப் புனிதமாக்கினான். அவ்வமுதத்தினை வந்திருந்த அனைவருக்கும் வினியோகித்து மலையரசனும் மேனையும் ஆனந்தக்கடலில் ஆழ்ந்திருந்தனர். இது நிற்க.

கணவனை இழந்த இரதி தேவி, இறைவனைப் பணிந்து வேண்ட, ஐங்கணைக் கிழவனை அவளுக்கு மாத்திரம் ரூபனாய், ஏனையர்க்கு அரூபனாயிருக்கும்படி எழுப்பியருளி, அவர்க்கு விடையளித்து, திருமணிப் பீடத்தில் இறைவியோடும் இழிந்து, கணத்தொகை சூழ இடபாரூடனாய் உமையம்மையை ஒருபுறம்

இருக்க அருள் புரிந்து, மலையரசனுக்கும், மேனைக்கும், அவர் பரிஜனர்க்கும் அருள் பாலித்து, இமயம் நீங்கித் திருக்கயிலை அடைந்தருளினன். அதன் பின்னர்த் திருமால் முதலிய தேவர் தத்தம் பதி புகுமாறு அவர்க்கு அருள் புரிந்து, இறைவன், தன் துணைவியாகிய உமையம்மையோடு அத்தாணி மண்டபத்து அரியணையில் வீற்றிருந்தருளினன்.

## 7. முருகன் திருவவதாரப் படலம்

இவ்வாறு திருமணம் முடிந்த பின்னர், இறைவன் அம்மையோடு திருக்கயிலையில் அமர்ந்திருக்க, தேவர் அனைவரும் மேரு மலையில் குழுமி, சூரனாதியர் இயற்றுந் துன்பச் செயல்களைப் போக்கித் தமக்கருள் செய்ய ஒரு புதல்வனை அச்சிவ பரஞ் சுடர் தரவில்லை எனவும், இனித் தாம் செய்வதென்னை எனவும் உன்னிக் கலங்குமெல்லை, பிரமன், வாயு தேவனை அழைத்து, "நீ கைலைக்கேகிச் சிவபெருமானிடம் நம் குறைகளைக் கூறி அருள் கொடு வருதி," என்றான். அதனை மறுத்துரைக்க வல்லவர் இன்மையால், ஒருவாறு ஒருப்பட்டுத் திருக்கயிலை அடைந்து, நந்தியம்பண்ணவனை நணுகி நடுக்கமுற்றுக் கீழே விழுந்து ஒருவாறு தெளிந்து எழுந்து உயிர்கொடு மீண்டனன். அதன் பின் தேவர்கள் ஒருங்கே திரண்டு சென்று நந்தியாணையால் நம்பன்பால் குறுகி, வணங்கி, "இறைவீர், முன்னரருளிய படியே ஒரு புதல்வனைத் தந்து எம்மை வாழ்விக்க வேண்டுகின்றோம்," என்றனர்.

இறைவன் அருள்கூர்ந்து, ஈசானம் முதலிய ஐந்து முகங்களோடு அதோ முகமுங்கொண்டு தோன்ற, அவ்வாறு முகங்களினுமுள்ள நெற்றிக் கண்களினின்றும் ஆறு தீப்பொறிகள் வெளி வந்தன. அவற்றின் வெப்பத்தைக்கூற முடியாதெனும், ஒருயிர்க்கும் துன்பமுண்டாக்காத அப்பொறிகள் மிக்க பயங்கரமாயிருந்ததால், தேவர்கள் நடுங்கிப் பரமனை வேண்டினார்கள். சிவபெருமான், வாயுதேவனையும், அக்கினிதேவனையும் நோக்கி, "நீங்கள் நம்மாணையால் இவற்றைக் கொடுசென்று, கங்கையில் விடுதிர். அக்கங்கை சரவணத்திற்செலுத்தும்," என்று அவருக்கு அப்பொறிகளைத் தாங்கிச் செல்லப் பெருவலியையுந் தந்தருளினன். அவ்வாறு எடுத்துச் சென்ற தேவர்களை நோக்கி,

"இப்பொறிகள் சரவணத்தில் எமது மதலையாய் விளங்கும். நீங்கள் செல்லுங்கள்," என, அவர்கள், அப்பொறிகளை வாயுவும் அனலும் தாங்கிச் செல்ல உடன் சென்று கங்கையில் விட்டார்கள். அக்கங்கை சரவணத்திற்செலுத்த,

"அருவமு முருவு மாகி அநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன் னிரண்டுங் கொண்
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலக முய்ய." [டே

உதித்த அம்முருகப் பெருமான், வானதுந்துபி முழங்க, தேவர்கள் வாழ்த்த, அச்சரவணப் பொய்கையே மலரணையாக இனிது வீற்றிருந்தருளினன். அளவிடற்கரிய பல வளப்பங்கள் நிறைந்த அச்சரவணப் பொய்கையில், தேவர் சூழ்ந்து நின்று துதிக்கும் அக்குழந்தை அமுதுண்ணும்பொருட்டுக் கார்த்திகைப் பெண்கள் அறுவரையும் நோக்கி, "நீங்கள் இக்குழந்தையை அமுதூட்டி வளர்த்து வாருங்கள்," என்று சூழ்ந்துள்ள அத்தேவர் கூற, அம்மாதர் தவப்பயனால் ஒருருக்கொண்ட அக்குழவி ஆறு குழந்தைகளாக, அவ்வறுவரையும் அம்மாதர் போற்றி வளர்த்து வந்தனர். இவ்வாறு ஆறு குழந்தைகளும் பாலுண்டு அற்புத விளையாடல் புரிந்து வருங்கால், பெண்டிர் அறுவரும் குழந்தைகளென்று கருதாது, தமது வழிபடு கடவுளரென்றே அன்பால் போற்றி வந்தனர். இது நிற்க.

சிவபெருமான் நெற்றிக் கண்களிற்றோன்றிய பொறிகளை அஞ்சி அகன்ற அம்பிகை, தேவர்கள்மீது கோபங்கொண்டு, புதல்வன் தன் மாட்டுத் தோன்றாது இறைவனது நெற்றிக்கண்களிடமாகத் தோன்றச் செய்த அவர்கள் மனைவியருக்குப் புதல்வரில்லாமற்போகவெனச் சபித்தனள். அன்றியும், தான் அஞ்சியோடும்போது தன் காற்சிலம்பினின்றும் தெறித்த ஒன்பது வகைப்பட்ட மணிகளில் தன்னுருவம் தோன்ற, அவ்வுருவங்களைச் சிவபெருமான் விழைந்தழைக்க, நவசத்திகளாய் வந்து இறைவனை விரும்ப, அச்சத்திகள் அப்போதே கருப்பமடைந்தார்கள். இறைவி அவர்களைக் கோபித்து நோக்கி, "எனக்கு மாறாக வந்த நீங்கள், இக்கருவுடன் நெடுங்காலம் வருந்தியிருக்கக் கடவீர்கள்!" என்று சபிக்க, அதனால் அவர்கள் அஞ்சி,

உடல் வியர்த்து நின்றார்கள். அவ்வியர்வையினின்றும் இலக்கம் வீரர் வந்துதித்தனர். அவர்களை இறைவன் நோக்கி, "அவுணரை அழிக்க வந்த அறுமுகனுக்குப் படைத்துணையாவீர்," என, அவர்கள் வணங்கித் துதித்து, அமலன் சன்னதியில் அணைந்து ஒழுகி வந்தனர். அந்நவசத்திகளின் வயிற்றில் நந்திகணத்தவர் குழந்தைகளாய்க் காளைப் பருவம்வரை சுக முனிவன் போன்று வெளிப்படாதிருந்தமையால், அச்சத்திகள் வருந்தி இறைவனையும் இறைவியையும் வேண்ட, அம்மை அருள் புரிய, வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரன், வீரமகேச்சுரன், வீரபுரந்தரன், வீரராக்கதன், வீரமார்த்தாண்டன், வீராந்தகன், வீரதீரன் என்னும் நவவீரர்களும் நவசத்திகளிடத்து உதித்தனர். அவ்வீரரைப் பெருமான் வியந்து, அவர்களுக்குச் சூரிய வாள்களைக் கொடுத்து, "இலக்கத்தவரோடு நீங்களும் பிரியாதிருந்து, உங்களுக்கு இறைவனாகிய முருகவேளின் ஏவலைப் புரிவீர்களாக," என, அவ்வாறே அவர்கள் ஒழுகி வந்தார்கள். சத்திகளும் இறைவியிடம் ஏவல் புரிந்து வந்தார்கள்.

## 8. திருவிளையாடற் படலம்

இனி, சரவணத்தில் திருவிளையாடல் புரியும் அறுமுகனை அழைக்க விரும்பிய சிவபெருமான், இறைவியை நோக்கி, "நம் முருகன் சரவணத்தில் ஆடல் புரிவதைக் காணச் செல்லுவேம்," என, அம்மையும் உவப்புடன் இடப்பாகத்தமர, இருவரும் நந்தி வாகனத்திற்சென்று சரவணமடைந்தபோழ்து, இறைவன் பார்வதியைப் பார்த்து, "உன் புதல்வன் முருகனைக் கொண்டு வா," என்றனன். அவள் அக்குழந்தையை அணைத்தெடுத்த அளவில் திருமுகமாறும் திருக்கரம் பன்னிரண்டும் உருவம் ஒன்றுமேயாகிய அக்குழந்தையைக் கண்டு, தலையளி செய்யத் தன்னிரு தனத்திற்சுரந்த பாலை மணிக்கிண்ணத்தேற்று உண்பித்து, இறைவனை வணங்குவித்துத் தம்மிருவரிடையே சோமாஸ்கந்தராக அமர்த்த, தேவரெல்லாருந் துதித்து நின்றனர். சிவபெருமான், அங்கு நின்று வணங்கிய கார்த்திகை மாதர் அறுவரையும் நோக்கி, "உங்களால் இவன் வளர்க்கப் பட்டமையால் இவனுக்குக் **கார்த்திகேயன்** எனத் திருநாமமிட்டோம். அன்றியும், உங்கள் நாளாகிய கிருத்திகையில் இம்

முருகனை அருச்சித்தார்க்குப் போக மோக்ஷங்களை அளிப் போம்,'' என்று அருள் புரிந்தான்.

இறைவி தனத்தினின்றிழிந்த பாலைச் சாபத்தால் மீன்களாயிருந்த பராசரர் புதல்வர் அறுவரும் உண்டு, சாபநீங்கி, அச் சரவணப் பொய்கைக் கரையில் வந்து இறைவனை வணங்கி, "மெய்ஞ்ஞானப் பொருளைப் போதித்தருள வேண்டும்,'' என்றனர். இறைவன் அம்முனிவரை நோக்கி, "உடனே நீங்கள் திருப்பரங்குன்றமெய்தித் தவம் உஞற்றுங்கள். இக்குமரன் அங்கு வந்து உங்களுக்கு ஞானோபதேசஞ்செய்வான்,'' என்று அவர்களுக்கு விடை கொடுத்தருளினன். பின்பு இறைவன், பிரமன் முதலியவரைத் தத்தம் பதி புக விடையளித்து, இறைவியோடுங் குமரனோடுந் திருக்கயிலை சென்று வீற்றிருந் தருளினன்.

இலக்கத்தொன்பது தம்பிமார்களும் குமாரக்கடவுள் திருவடியைத் தொழுது, அகலாது ஏவல் புரிந்து வந்தார்கள். இவ்வண்ணம் நிகழ, அறுமுகப் பண்ணவன், தன் பின்னவர் களோடு மன்றுதோறும் உலாவியும், பூஞ்சோலைதோறும் உலாவியும், குன்றுதோறாடல் புரிந்தும், பல திருப்பதிகளிலும் பிரமன் மால் முதலிய தேவர் பதங்களில் உலாவியும் ஆடல் புரிந்து வந்தான். அப்பால் அட்ட குலாசலங்களை ஒன்று சேர்ப்பதும், எழு கடலையும் ஒன்றாக்குவதுமான அளவிறந்த அற்புதத் திருவிளையாடல்களைப் புரிந்து வர, அவற்றைக்கண்ட தேவர், "இவ்வரியனவற்றை இயற்றுபவன் யாவன்! சூரபன் மனைச் சேர்ந்தானுமல்லனே!'' என்று திகைப்படைந்து, இந்திரனோடு சேர்ந்து சென்று, குமரனை எதிர்த்துப் போர் புரிந்து, வலியிழந்து, வீழ்ந்து மாண்டனர். அதனை நாரத முனிவன் தேவ குருவுக்குக்கூற, அவ்வியாழபகவான் முருகனிடஞ்சென்று அடி வணங்கி, அவர்களை எழுப்புமாறு வேண்டிக்கொள்ள, அத்தேவர்களை எழுப்பியருளினன். அவர்கள், குமார நாயகன் திருவடிகளைப் பணிந்து ஏத்தி நிற்க, அவர்களை நோக்கி, "தேவர் களே, நம்மைக் குழந்தையென்று நினையன்மின்,'' என்று கூறித் தனது பேருருவத்தினைக் காட்டி, அவர்கள் அதனை முழுவதும் தரிசிக்க ஆற்றலும் கொடுத்தருளினன். சேவித்த தேவர்,

அடங்காப் பெருமகிழ்ச்சியுடையராய்த் திருக்கயிலை மலைக்கு அருகில் உள்ள ஒரு மலையில் தேவ கம்மியனால் சிருஷ்டிக்கப் பட்ட திருக்கோயிலில் அறுமுகத்து அண்ணலை அமர்வித்துப் புனித நீராட்டி, ஆகமமுறைப்படி அருச்சித்து வணங்கி நின்று, தேவ சேனைகளாகிய தமக்குச் சேனாபதியாக இருந்தருளல் வேண்டுமென்று வேண்டினர். அவன் அவ்வாறே **தேவ சேனா பதி** என்னும் பெயர் பெற்று, அவ்வுழி நின்று காத்தருளி னான். அந்நிமித்தத்தால் அம்மலை, கந்தகிரி எனப் பெயர் பெற்றது. அதன் பின் தேவர்கள் தத்தம் பதி புக, இந்திரன் மனோவதி நகரினை அடைந்தான்.

## 9. தகர் ஏறு படலம்

இவ்வாறு திருக்கயிலையில் **சண்முகப்பெருமான்** எழுந்தருளி இருக்க, நாரத முனிவன், சிவபெருமான் உவக்குமாற்றால் ஒரு வேள்வியினைச் செய்தான். அவ்வேள்வியினின்று ஓர் ஆட்டுக் கடா ஊழித்தீயினை ஒத்துத் தோன்றி, யாண்டும் உலவி உயிர் களை வருத்த, அக்கொடுஞ்செயலைக் கண்ட நாரதன் முதலிய முனிவர்கள் குமார மூர்த்தியின்பாற்சென்று, அகில உலகங் களையும் அழிக்கும் ஆற்றலமைந்த அத்தகரின் தீமைகளை விண் ணப்பித்து வேண்ட, முருகப்பெருமான் அவருக்கு அருள் புரிந்து, தன்னுழையனாய வீரபாகுவை விளித்து, அச்செச்சை யினைக் கொண்டு வர ஆணை தந்தருள, அவ்வீரபாகு பிரம பதத்தில் உலாவிச் செல்லும் அவ்வலிய ஆட்டினைக் கொம்பு பிடித்து ஈர்த்துச் சென்று பெருமான் சன்னதியில் விட, அன்று முதல் முருகன் அத்தகரினை ஊர்தியாகக் கொண்டருளினான். நாரதன் முதலிய முனிவர்கள் அச்சேயினை வணங்கித் துதித்து, விடை பெற்று, உலகினிற் போந்து வேள்வியை முடித்தார்கள்.

## 10. அயனைச் சிறை செய் படலம்

முருகன் அத்தகரினை ஊர்ந்து விண்ணுலகும் மண்ணுல கும் உலவித் திருவிளையாடல் செய்து, திருக்கயிலையில் அமர, ஒரு நாள், பிரமன் முதலிய தேவர்கள் திருக்கயிலையை அடைந்து, பரம பதியை வணங்கி, விடை பெற்று மீண்டு வருங்கால், வாச லின் புறத்து இலக்கத்தொன்பது இளைஞர் சூழ இருந்த குமாரக்

கடவுள், அமரரோடு ஏகிய பிரமனை அழைக்க, அப்பிரமன் வந்து நின்று வணங்காதிருத்தலைக் கண்டு, முருகப் பெருமான் அவன் தொழில் யாதென்று வினவ, அவன், "நான் பிரமன்; இறைவன் ஆணையால் படைப்புத் தொழிலை நடத்துகிறேன்," எனக் கூறினான். தருக்கியுரைத்த அப்பிரமன் சொல்லைக் கேட்ட முருகன் புன்சிரிப்புச் செய்து, "படைத்தற்றொழிலில் வன்மையுடையனாயின், வேதத்தின் முதற்கண் அமைந்த குடிலைக்குப் பொருள் பகர்வாய்," என்றான். அவன் அஃதறியாது மயங்க, "இதுதானோ நின் சிருட்டித்தொழிலின் திறம்?" என்று அவனொரு சிரத்துத் தன் கரத்தினையோச்சிக் குட்டிக் கந்தகிரியிற் சிறைப்படுத்தி, அச்சிருட்டித் தொழிலைத் தான் செய்தருள, உடன் சென்ற தேவர்கள் உளம் நடுங்கிப் 'பிழைத்தது பெரும்பேறு!' என்று விரைந்து, திசையறியாது ஓடினார்கள்.

இவ்வாறு சண்முகப்பெருமான் படைப்புத் தொழில் புரிந்து வருகையில், திருமால், பிரமனது சிறைத் துன்பத்தை நீக்கக் கருதி, திருக்கயிலையை அடைந்து, இறைவனைப் பணிந்து வேண்டுதலும், இறைவன் நந்தியண்ணலை விளித்து, "நீ குமாரனிடஞ் சென்று அயனைச் சிறை நீக்க யாம் உரைத்ததாகத் தெரிவிப்பாய்," என்று அவனை விடுப்ப, அந்நந்தி சென்று அவ்வாறேயுரைக்க, அறுமுகன் வெகுண்டு, "சிறை விடோம்!" என்றலும், நந்தி தேவன் நடுநடுங்கி மீண்டு சென்று நம்பனிடம் உரைத்தான். நாதன் தானே சென்று முருகனைத் தேற்றிப் பிரமனைச் சிறை நீக்குமாறு செய்தருளினான். சிவபெருமான் முருகனை நோக்கி, "அப்பிரணவப் பொருளை நீ பகர வல்லையோ?" என, அச்சேய், இறைவன் திருச்செவியில் மறைப் பொருளாக உரைத்தருளினான். பின்னர் வணங்கி நின்ற பிரமனை முதலிட்ட தேவர்களுக்கு விடையளித்துத் திருக் கயிலையில் பெருமான் எழுந்தருளியிருந்தான். சண்முகப்பெருமான், கந்தகிரியில் தன்னை வழிபட்டு வேண்டிய அகத்திய முனிவனுக்கு ஓமெனும் பொருளையும் பதி நூலையும் உணர்த்தியருளினான்.

## 11. விடை பெறு படலம்

அத்தன்மை நிகழுங்காலத்துத் திருமால் புதல்விகளாகிய அமுதவல்லி, சுந்தரி என்னும் இருவர், குமரவேளை விதிப்படி மணம் புரிய விரும்பிச் சரவணப் பொய்கையில் தவம் புரிந்திருந்தனர். அவரது தவத்திற்கிரங்கி அறுமுகப்பெருமான் அவ்வுழியேகி, அம்மாதர் வணங்கிக் கூறியவற்றைக் கேட்டு, "நம் கருத்தின் வண்ணமே நம்மை மணம் புரிகுவம்!" என்று, அமுத வல்லியை நோக்கி, "நீ இந்திரனுக்கு மகளாகி வளர்வாய்," என்றும், சுந்தரியை நோக்கி, "நீ பூமியின்கண் சிவமுனிக்கு மகளாய் வேடர்பால் வளர்வாய்," என்றும், அவ்வாறு வளர்கையில் தான் வந்து மணம் புரிவதாகவும் கூறி மறைந்தருளினன்.

அவர்கள் அவ்வாறே சென்று இந்திரனிடத்துத் தேவயானையால் வளர்க்கப்பட்டமையால் தேவயானையென்றும், குறிஞ்சி நிலத்தில் வள்ளியகழ்ந்த குழியிற்கிடந்தமையால் வள்ளி நாயகி என்றும் திருநாமங்கள் பெற்று வளர்ந்து வந்தார்கள். இது நிற்க.

முருகப் பெருமான் வெள்ளியங்கிரியில் சிவபெருமானைத் தரிசிக்கச் சென்றிருக்கையில், இந்திரன் முதலிய தேவர்கள் சென்று பரமபதியை வணங்கி, "சூரன் முதலியவரின் துன்பச் செயல்களைப் பொறுக்ககில்லோம்! இறைவனே, காத்தருளல் வேண்டும்!" என்று இரங்கினர்கள். சிவபெருமான், குமார மூர்த்தியைப் பார்த்து, "சூரன் முதலியவரைக் கொன்று, இந்திராதி தேவர்களுக்கு மேம்பாடளிப்பாயாக," என்றருள, அதற்கிணங்கிய முருகப்பெருமானுக்குப் பதினொரு ருத்திரர்களையும், தோமரம் முதலிய பதினொரு படைகளாக்கியளித்து,

"ஆயதற் பின்ன ரேவின்மூ தண்டத்
 தைம்பெரும் பூதமு மடுவ
தேயபல் லுயிரு மொருதலை முடிப்ப
 தேவர்மேல் விடுக்கினு மவர்தம்
மாயிருந் திறலும் வரங்களுஞ் சிந்தி
 மன்னுயி ருண்பதெப் படைக்கும்
நாயக மாவ தொருதனிச் சுடர்வேல்
 நல்கியே மதலைகைக் கொடுத்தான்."

இவ்வாற்றல் கூடிய வேற்படையையுங் கொடுத்த பின்னர் உக்கிரன், சண்டன் முதலிய கணத்தலைவரையும், இலக்கத்தெண்மரையும் படைத்துணையாகச் செலுத்தி, இலக்கம் பரிபூண்ட அற்புதத் தேரையுமளித்து, வணங்கி நின்ற இளையானை வாரியணைத்து, உச்சி மோந்து, அருள் உருவினளாகிய அம்மையும் அப்பனும், 'வெற்றி கொடு மீளுவாய்!' என வாழ்த்தி அனுப்பி, வணங்கிநின்ற தேவர்களையும், "துணையாகச் செல்லுங்கள்," என அருள் விடை தந்தனர். சிவபெருமானது அருள் பெற்றுச்செல்லுந் தேவர்களுள் வாயு தேவன் முருகப் பெருமான் இரதத்தைச் செலுத்தவும், ஏனைய தேவர் புகழ் பரவிச் சூழ்ந்து நடித்துச் செல்லவும், பூதவெள்ளம் புடை சூழ்ந்து ஆர்த்து வெற்றி முரசறையவும், அம்முருகப்பெருமான் சென்றருளினன்.

## 12. தாரகன் வதைப் படலம்

வீரரும் பூதருஞ் சூழ விரைந்து சென்ற சண்முகன், யாவரையும் மயக்குவிப்பதும், தாரகனுக்கு உறைவிடமாகியதும் ஆன கிரவுஞ்சகிரியை அணுகினன். அப்பொழுது நாரத முனிவன் வந்து, "அண்ணலே, திருமாலையும் எளிதே வென்றவனும், சூரனுக்கு இளையனுமாகிய தாரகனை முன்னர்ச் சங்கரிக்க வேண்டும்," என்றனன். முருகவேள் அதனைக்கேட்டு, வீரபாகுவை அழைத்து, "நீ முன்னர்ச் சென்று மாயாபுரியிலுள்ள தாரகனை வென்று வருவாய்," என்று கூறித் தேவர் கம்மியனைக் கூய், அவ்வீரபாகு முதலியவர்க்கு எண்ணிறந்த தேர்களைக் கொடுக்க ஆணையருள, அவன் அவ்வாறே படைத்துக் கொடுக்க, அவ்விரதங்களைப்பெற்று, வீரபாகு தேவன் படைகளோடு மாயாபுரியை அடைந்து நிற்க, பூதர்கள் அவுணரோடு போரியற்ற, தூதர் ஓடித் தாரகனுக்குரைக்க, அத்தாரகன் போர்க்கோலங் கொண்டு தன் படைஞரோடும் போந்து வீரபாகு தேவன் நின்றுழிப் புகுந்து, தன் படைகள் வீரபாகு தேவன் படைகளொடு எதிர்க்கத் தான் போர் புரியலாயினன்.

அப்போரில் அவுணர் படை அளவில்லாது மடியப் பூதப் படையிலும் சிலர் மாண்டனர். அது கண்ட தாரகன் பொறுது, தேரினின்றுங் குதித்து, ஒரு தண்டத்தினைத் தாங்கிப் பூத

சேனையைத் தரைப்படுத்தி, அண்டமிடியும்படி ஆர்த்து, அடிகளால் கலக்கிச் சென்றான். அக்கடும்போரில் தாரகன் தண்டத்தினால் அழிந்த பூதசேனையைக் கண்டு நின்ற பூதவெள்ளத் தலைவர் நடுக்கமடைந்து, உடைந்து போயினர். **வீரகேசரி,** நூறு அம்புகளை ஏவித் தாரகன் முடியைத் துணித்து ஆரவாரிக்க, தாரகன் தன் கைத்தண்டினை எறிந்து, அவனைத் தரைப் படுத்தினான். அது கண்ட வீரபாகு தேவன், பல கணைகளைச் செலுத்தித் தாரகன் பிடித்த வில்லைத் துணித்து வீழ்த்த, அவன் ஒரு சூலத்தால் அவனை மயங்கி விழச் செய்தான். எஞ்சி நின்ற வீரரெழுவரையும் அவ்வண்ணமே மயக்கி வீழ்த்த, வீரபாகு தேவன் எழுந்து, "மயக்கினேமென்று நின்னை வியந்து என்னை இகழற்க! இன்னே உன்னைக் கோறல் புரிவேன்!" எனக் கொடுமையான போர் புரிந்தான். வலிய தாரகனும் சமமாய் நின்று போர் புரிந்து, அனேக தெய்வப் படைகளைச் செலுத்தியும், வீரபாகு தோல்வியடையாமல், அவனைத் தன் மாயையால் அன்றி வெல்ல முடியாதென்று கருதி, வேறு பல வடிவங்களை எடுத்துப் போர் முயன்றான். பூதவீரரும் அஞ்சி ஓடினர்.

அப்பூதப்படையின் அச்சச் செயல்களைக்கண்ட வீரபாகு தேவன், தன்னிடமிருந்த வீரபத்திரப் படையை எடுத்தலும், மாயையொழிந்து தனித்து நின்ற தாரகன் மேலும் மாயமியற்றக் கருதித் தேரினின்றுங் குதித்துத் தனக்கு மாயத்தானமாகிய கிரவுஞ்சகிரியை நோக்கி ஓடினான். வீரபாகு அப்படையினைத் தூணியிற்செருகி, 'இவனைப்பிடித்துப் பிணிப்போம்,' என்று பின்றொடர்ந்து ஓடுகையில், அம்மலையில் அவன் சென்ற இடந்தெரியாது இருளால் மயங்கித் திரும்பவும் முடியாது, அக்கிரவுஞ்ச கிரியின் மாயையால் அவ்விடையே மயங்கித் துயின்றான். சென்ற வீரபாகு தேவன் வாராமையால், வீரரெண்மரும், இலக்கந் தம்பியரும் பூதவீரரும் போர் புரிய எண்ணி, 'அண்ணனுக்குத் துணையாவோம்,' என்று செல்ல, அம்மலையின் மாயையால் அவரும் மயங்கிக்கிடந்தனர். அவ்வீரர் மயங்கிக்கிடந்ததைக் கண்ட தாரகன் வெளியே வந்து, அங்கு நெருங்கியுள்ள பூதப்படைகளைக் கணை மழையால் கலக்கி இரிந்

தோடச் செய்தான். அக்கடுஞ்செயல்களைக் கண்ட இந்திராதியரும், நாரத முனிவனும் அறுமுகப் பெருமான் சன்னதி அடைந்து விண்ணப்பிக்க, எம்பெருமான், "நாமே சென்று அத்தாரகனைச் செற்றுக் கிரவுஞ்ச கிரியையும் பொடியாக்கி வருதும்!" என்றருளி, வேற்படையையும் மற்றைப்படைகளையுங் கொண்டு இரதமேறிப் பூதவெள்ளஞ் சூழப் போருக்கெழுந்தருளினன். முன்னணியிற்சென்ற பூதவெள்ளம் அவுணப் படையை அழித்து முருக்குதலும், அதனல் அவுணர்பட்டமையுங் கண்ட தாரகன் எதிர்த்து வந்து, சிவகுமாரனுகிய சிங்கத்தினை நோக்கி, "திருமால் பிரமன் முதலியவரிடத்தன்றி எங்களுக்குச் சிவபெருமானிடத்துப் பகையில்லையே! அவ்வாறிருக்க, அவன் குமாரனுகிய நீ எங்களோடு போர் புரிய நேர்ந்தது என்னை?" என்று வினவ, இளையான், "நீங்கள் தேவர்களைச் சிறையிலிட்டு வருத்துவதால், உங்கள் வாழ்வினைப் போக்கி, உங்களையும் கிளையுடன் முடித்து வரும்படி அச்சிவபெருமான் ஏவினன். ஆதலால், உங்களை வேரறுக்க யாம் போந்தனம்," என்று விளம்பி நின்றான்.

அது கேட்ட தாரகன், "திருமால் பிரமன் முதலியவர் எம்மிடத்து அமருக்கு வந்து தோல்வியுற்றதை அறிந்தும், நீ எங்களை எதிர்த்துப் போர் புரிய வந்தது மிக்க வியப்பே! சிறுவனே, செல்வாய் சிவன்பால்," என்றனன். முருகப் பெருமான், "இன்னுஞ் சிறிது நாழிகையிற்செல்வேன்," என்று, தன் வில்லை வளைத்துச் சரங்களைத் தூற்றி, அவனது வில்லையும் தேரையும் அழித்துப் பாகனையும் வருத்தி, தாரகனையும் அவசமாகும்படி செய்து, அவுணப் படையை நாசமாக்கினன். பின்னர்த் தாரகன் தெளிந்தெழுந்து தன்னிரு தந்தமும் துதிக்கையுமிழந்து, சூழ்ந்த அவுணப் படைகளுமின்றித் தமியனுகி, அனேக தேவாத்திரங்களைத் தூண்டியும் பயன்படாமையால், பசுபதியின் கணையை எடுத்து அருச்சித்து விடுத்தான். அக்கணை அகில உலகங்களுய் நடுங்கச் சென்றதாயினும், இளையானை அணுகியதும் அப்பெருமான் திருக்கரம் நீட்ட, தன் ஆற்றல் அடங்கி அவன் திருக்கரத்து அமர்ந்தது. அதனைக் கண்ட தாரகன், தன் வாழ்வு அன்றோடு தொலைந்ததென்று

எண்ணி, இனித் தான் செய்யத்தக்கது மாயமன்றி மற்றொன்று மில்லை எனத் துணிந்து, அம்மாயைகள் வல்ல கிரவுஞ்சகிரிக் கருகிற்சென்று நின்று, "நீ வல்ல மாயைகளைப் புரிந்து மயக்கு வாய்," என்றான்.

அம்மலை முப்புரங்கள் போன்றும், ஏழு கடல் போன்றும், அட்டதிக்குக் கஜங்கள் போன்றும், கவிந்த பேரிருள் போன்றுந் தோற்றி, எண்ணிறந்த மாயைகளைச் செய்து நிற்க, அவற்றைக் கண்ட முருகப் பெருமான், தன் திருக்கரத்திலுள்ள ஞானசத்தியாகிய வேற்படையால் அம்மலையையும் தாரகனையும் சங்கரித்து, மயங்கிக் கிடந்த வீரர் ஒன்பதின்மரையும், இலக்கத்தவரையும், பூதத்தலைவரையும் எழுப்பியருளினான். அவ்வேற்படையின் சத்தியையும், முருகப் பெருமான் ஆற்றலையுங் கண்ட தேவர்கள் துதித்து நிற்க, வீரபாகு முதலிய வீரர்கள் போற்ற நின்ற குமாரக் கடவுள், தனது கையிற்கொண்ட பசுபதியின் படையை வீரபாகு தேவனுக்குக் கொடுத்துக் கருணை புரிந்து, போரில் இறந்த பூதவீரரை எழுப்பி, அங்கிருந்து புறப்பட்டருளினான்.

## 13. தேவகிரிப் படலம்

புறப்பட்ட முருகவேள் தேவகிரியை அடைய, திருமால் முதலிய தேவர்கள், அவன் திருவடி பணிந்து, "தேவரீர் இம் மலைக்கண் எழுந்தருளவும், அடியேம் தேவரீரை அருச்சிக்கவும் அதிக அவாவுடையேம்!" என்றார்கள். அதற்கிணங்கிய அறுமுகன் தேவகம்மியனால் அப்பொழுது இயற்றப்பட்ட அந்நகரத்திடையே உள்ள அரதனக்கோயிலில் எழுந்தருளுதலும், தேவர்கள் விதி முறை பூசை புரிந்து வந்தார்கள்.

முருகப்பெருமான் வேற்படையினால் தாரகன் இறந்துபட்ட செய்கையைத் தூதர் சென்று அவன் பட்டமகிஷியாகிய சவுரிக்கு உரைக்க, அவள் அமர்க்களங் குறுகி, ஆண்டு இறந்து கிடந்த தன்னாயகன் பிணத்தின்மேல் விழுந்து புரண்டு, ஏனைய மனைவியரோடும் புலம்பிக்கொண்டிருக்கையில், அவன் புதல்வனாகிய அசுரேந்திரன் என்பவன், கேட்டுச் சென்று, ஆறுத்துயருடையனாய்த் தன் அருமைத் தந்தைக்குச் செய்யவேண்டிய

சமச்சடங்குகளைச் செய்து முடித்து, தாய் வேண்டியபடியே பெருந்தீயுண்டாக்கிக் கொடுத்து, அவர்கள் தங்கள் நாயகன் சென்ற உலகிற்சென்று உடன் இருத்தற்பொருட்டுச் செய்ய வேண்டிய தீப்பாய்தலைச் செய்த பின், அந்நகரியை நீங்கி மகேந்திர நகரமடைந்தான்.

அடைந்த அசுரேந்திரன், தன் மூத்த தந்தையாகிய சூரபன்மன் அரசு புரியும் அத்தாணி மணி மண்டபம் புக்குக் கீழே விழுந்து, அவனடியைப்பற்றி அரற்றி அலமந்து, தன் தந்தை பட்ட செய்தியைக் கூறினன். அச்செய்தியைக் கேட்ட சூரன் உடன்பிறந்த இளவல் இறந்ததால் மிக்க வருத்தமடைந்து, சீற்ற மிக்குடையனாய், "இன்னே அக்குமரனைக் கொல்லுவேன்!" என்று தனித்தெழுந்தான். அவனை அமோகன் என்னும் அமைச்சன் அடி பணிந்து, "அடியேன் கூறுவதைக் கோபியாமற் கேட்டருள வேண்டும்: அண்டங்களனைத்தையும் தனித்தரசாளும் இறைவராகிய நீர், தனித்துப் போருக்கெழுதல் முறைமையன்று. தூதரை ஏவி, வலியறிந்து செல்லுதலே தகுதியாம்," என்றனன்.

அவ்வுறுதி மொழியைக் கேட்ட அவுணர் காவலன், பகன், மயூரன் முதலிய ஒற்றரை விளித்து, "நீவிர் சென்று அறுமுகன் வலியையும், அவனது துணை வலியையும் அறிந்து வம்மின்," என ஆணை தந்து, தன்னரசு புரிந்திருந்தான்.

அப்பால் அமலன் தேவகிரியினின்றும் பூதகணங்கள் சூழ எழுந்தருளிக் கேதாரம், காசி, திருப்பருப்பதம், வடவேங்கடம், திருக்காளத்தி, காஞ்சி, திருவண்ணாமலை, வெண்ணெய் நல்லூர், விருத்தகிரி, தில்லையம்பதி முதலிய சிவபெருமான் இறைவியோடு எழுந்தருளியிருக்கும் திருப்பதி பலவும் சென்று தரிசித்து, மண்ணியாற்றங்கரையை அடைந்தருளி, அங்கு மேவினன்.

## 14. குமரபுரிப் படலம்

அடைந்தருளிய அறுமுகனைத் திருமால் முதலிய தேவர்கள், "இவ்விடம் தூய்மையுற்று விளங்குவதால், தேவரீர் இங்கு எழுந்தருள வேண்டுகின்றோம்," என்றலும், தெய்வக் கம்மியன் ஆண்டமைத்த அற்புத நகரின்கண் உன்னதமாக

அமைத்துள்ள மணிமண்டபத்துள் முருகப்பெருமான் தேவர்கள் சூழ அரியணை அமர்ந்தான். அப்புதிய நகரினுக்குத் திருச்சேய்ஞலூர் என்னும் பெயர் வழங்கியது.

பிற்றை நாள் பரிதி உதித்தலும், குகப்பெருமான், மகவானை நோக்கி, "யாம் பரம்பொருளை அம்மையொடு அருச்சிக்க உபகரணங்கள் அமைக்க வேண்டும்," என, உடனே அமைத்தலும், அவற்றைக்கொண்டு, பார்வதி பரமேஸ்வரர்களை ஆகம விதிப்படி அருச்சனை செய்து, அவர்கள் ஆசி கூறி அளித்த சருவ சங்கார்ரப் படையினைப் பெற்றுப் பணிந்து, அப்பதியினை நீங்கித் திருமயிலாடுதுறை, திருவாவடுதுறை, திருப்பறியலூர் முதலிய பதிகளைச் சென்று வணங்கி, ஆரூரையடைந்து, வீதிவிடங்கப் பெருமானைத் தரிசித்தமர்ந்தான்.

பின்னர்த் திருவாரூரைச் சேர்ந்த பல பதிகளையும் வணங்கிச் சென்று, வடவைக்கனலையும் வாட்டுங் கொடுமையினையுடைய சுடுசுரஞ் சேர்ந்தான். அத்தீயுருவாகிய பாலை நிலம், முருகப்பெருமான் திருவருளால் இருண்டு செறிந்த இளமரக்காவின் சூழலையொத்துக் குளிர்ந்திருந்தது. இது நிற்க.

முருகப்பெருமான் எழுந்தருளி வருவதை ஞானநோக்கினால் உணர்ந்த பராசரன் புதல்வர் அறுவரும், திருப்பரங்குன்றினின்றும் வடதிசையாக எதிர்நோக்கி வந்து, அப்பெருமானைப் பணிந்து நின்றனர். அவர்கள் வரலாற்றை இந்திரன் முருகப்பெருமானுக்கு எடுத்து மொழிந்தான்.

## 15. திருச்செந்திப் படலம்

அதுபோழ்து அப்பாலையை நீங்கிய முருகப்பெருமான், செங்குன்றூரைத் தரிசித்துத் திருச்செந்தூரை நண்ணி, தேவதச்சனால் நிருமிக்கப்பட்ட திருக்கோயிலில் எழுந்தருளியிருந்து, அச்சமயத்தில் அருகில் வணங்கி நின்ற சதமகனை நோக்கி, " அவுணர்களால் அளவிகந்த இன்னலை நீங்கள் அனுபவித்தற்கு ஏது என்னை? அவ்வவுணர் அத்தகைய ஆற்றலுடைமைக்கு அவரியற்றிய பெருந்தவமென்னை?" என்று வினவியருளினன். அறுமுகப்பண்ணவன் அருள் வினவுக்கு அறிவு நிறைந்த வியாழனே விடை கூற வல்லானதலின், இந்திரன் அத்தேவ

குருவை நோக்கி, "தேவரீர் பெருமான் திருவுளம் உவக்கு மாற்றால் உத்தரங் கொடுத்தருள வேண்டும்," என்ன, அதற் கிணங்கிய வியாழப்புத்தேள், சேயினை வணங்கி, "தேவரீர் அறியாததைக் கூறுவேனல்லேன்; அனைத்தும் எம்பெருமான் அறிவிற்கிடப்பினும், அடியேனைப் பொருட்படுத்தி வினவிய தால், ஒருவாறு அவுணர் வரலாறுகளைக் கூறுவேன்," என்று தொகுத்துக்கூறத் தொடங்கினன் :

II

# அசுர காண்டம்

---

## 1. மாயைப் படலம்

"தவப் பெருமையினையுடைய காசிப முனிவனுக்குப் புதல்வர்களாகிய அறுபத்தாறு கோடி அவுணர்களுக்கு அரசனானவன், மங்கலகேசி என்னும் அரக்கியை மணந்து, சுரசை என்னும் ஒரு மகளைப் பெற்றான். அந்நற்புதல்வி வளர்ந்து வருங்கால், அசுர குருவாகிய சுக்கிரன், அவளுக்குத் தீய மாயைகள் பலவுங் கற்பித்து, மாயை என்னும் பெயரையும் வழங்கி அவளை நோக்கி, 'என் உபதேச மொழியைக் கேட்பாயாக! திருமகள் கணவனாகிய திருமாலினாலும், ஏனைய தேவர்களாலும் எண்ணிறந்த அவுணர் வலி தொலைந்து இறந்தனர். நின் தாதையும் வலியிழந்திருக்கின்றான். ஆதலினால், உன்பொருட்டு அவர்கள் குலந்தழைக்கவேண்டும். அதற்கு நீ செய்ய வேண்டுவதென்னையெனின், திருமகளும் ஒவ்வாத பேரழகொடு சென்று, அருந்தவமியற்றுங் காசிப முனிவனை மையலுட்படுத்தி, உன் வயமாக்கி, அல்லில் அவனைப் புணர்ந்து, அசுரரைப் பெற்று, அங்கவர் வளம் பெற அசுரருக்கியலும் வேள்வியும் விரதமும் உணர்த்திய பின்னர், அவுணர் வாழவும், தேவர் தாழவும் அருந்தவம் புரிவாய்,' என்று கட்டளையிட்டான்.

"மாயை, நன்றென மகிழ்ந்து, குருவை வணங்கி விடைபெற்றுக் காசிபன் நோற்குங் கடிவனமடைந்து, திருவுமிரதியுந் திலோத்தமையும் வெருவி நாண விளங்கும் அழகுடைய வடிவினைக்கொண்டு, வாசமாமலர்ச் சோலையும், வாவியும், காசுமேவு செய்குன்றும், தடங்களும், தேசு பெற்று விளங்க அமைத்து, அக்காசிபற்குக் காணரியளாகி மறைந்தாள். ஆண்டமைந்த வனப்பனைத்தையும் அக்காசிபன் கண்டு களி கூர்ந்து, "இவற்றைச் செய்தாரை இவ்விடங் காணேன்! அவர் யாவரோ! அவரெங்குற்றனரோ!' என ஏங்கித் திரிந்துங் காண்கிலனாகி,

'இவையனைத்தும் நமக்கு மிகையன்றோ!' என்று எண்ணித் தன் தவத்தினில் முன் போல வைகினன்.

"பின்னர் நவமணி குயிற்றிய செய்குன்றில் வனப்புடைய அம்மாதராள் தோன்ற, அவளைக்கண்ட காசிபன், தன் தவத்தின் முடிந்த பயன் ஆண்டொரு மாதாகியுற்றதென்று பெரு மகிழ்ச்சி கொண்டு, அங்குற்றவளை அணைய விரும்பி, அருந்தவ வலியும் போதமுமகன்று, அன்றிலையொத்து ஆற்றுத் துயர் அடைந்தான். அவன் அம்மாதினைக் கண்டு, அவள் நோக்கினைக் குறித்துக் கூட்டம் அமையுமென்று குறித்த மனத்தனாய், அருகு சென்று நின்று, அம்மாதினை, 'மான் விழி கொண்ட மாதே, நின் பதி யாது? நீ கருதியதென்னை? அதனைக் கூறுவையேல், யான் முடிக்க வல்லேன்,' என்றான்.

"மங்கை, 'வடபுலத்து வதிவேன்; வான் புனலாடித் தவமியற்றி, வீடு பேறடைய விருப்ப மிக்குடையேன்,' என்று மறை மொழி கூறினாள்.

"அவள் மொழி கேட்ட காசிபன், 'விண் புனலனைத்தும் விரைந்திவண் தருவல்; கண்மணி, என்பால் கருணை கூர்ந்து கடைக்கணித்தருள்வாய்,' என, அம்மாய மங்கை, முனிவனை மையலுட்படுத்தி, ஆண்டுநின்றும் துண்ணென மறைந்தனள்.

"காசிபன் கடுந்துயரெய்திக் கலக்கமுற்று, இங்குமங்கும் ஓடி, அலமந்து, அக்கானிடைக் கண்ட யானை, மான், வண்டு முதலியவற்றை முன்னிலைப்படுத்தி, 'என் அருமை நாயகியைக் கண்டீர்கொல்!' என்று மனங்கரைந்து, மதி மயங்கி, ஆற்றாது புலம்பி மாழ்கலும், அவன் மனத்தளர்ச்சியின் அளவினை நோக்கி, அவனிடம் அன்பு காட்ட அம்மாயை, காதல் மலரும் அம்மாலைப் போதினில், அம்முனிவன் காணுமாறு வந்து எதிர் நின்றனள்.

"மின்னற்கொடிபோலும் மாயையானவள் தோன்றி நின்றதைக் கண்ட காசிபமுனிவன் அவள் அருகணைந்து, 'அடியேன் செய்யும் பணி யாது? சொல்லியருளுக! அதனை இன்னே முடிப்பன்!' என, மாயை, 'யானுவக்கும் பேரழகினைக் கொண்டு என்னிடம் வருவையேல், யான் உன்னிடத்து அன்பு கொண்டு

அணைகுவன்,' என்றாள். அம்மொழி கேட்ட காசிபன் மனங் களித்து, மன்மதனுக்கும் அரிதாகிய அழகுடைய யாக்கையோடு நின்றான். அவ்வழகனைக் கரத்தாற்பற்றிய மாயை, அவனை விரும்பிக் கலந்தனள். அதனால், முதல் யாமத்தில் **சூரபன்மன்** என்பவன் அருந்திறலுடையனாய்த் தோன்றினான். அவ்விருவர் உடம்பின் வெயர்வினின்றும் முப்பதினாயிர வெள்ளந் தானவர் தோன்றினர். அவர்கள் சூரபன்மனோடு மற்றவர்களையும் அம் மண்டபத்தில் நிறுவி, இரண்டாவது யாமத்தில் வேறொரு மணி மண்டபம் புக்கு, மாயை பெண் சிங்கமாகவும், காசிபன் அரி யேறாகவும் உருக்கொண்டு புணர, அப்பொழுது ஆயிரமுகங் களும் ஈராயிரங் கரங்களுமுடைய **சிங்கமுகாசுரன்** தோன்றினான். அவ்விருவர் உடம்பின் வெயர்வையால் சிங்கமுகங் கொண்ட பதினாலாயிர வெள்ளம் அவுணர்கள் தோன்றினார்கள். அவர் களைச் சிங்கமுகாசுரனோடு ஆண்டே நிறுத்தி, வேறொரு மண்டப மடைந்து, மூன்றும் யாமத்தில் பெண் யானையும் ஆண் யானையு மாகிப் புணர, நான்கு தந்தங்களோடும் யானை முகங்கொண்ட **தாரகன்** என்பவன் தோன்றினான். அவரது வெயர்வையினின் றும் நாற்பதினாயிர வெள்ளம் யானை முகமுடைய அசுரர் தோன்றினர். அவ்வசுரரைத் தாரகனுடன் நிறுத்திப் பின்பு நான்காம் யாமத்தில் ஆட்டுருக்கொண்டு அவ்விருவரும் புணர, **அஜமுகி** என்பவள் தோன்றினாள். அவரது வெயர்வையினின் றும் ஆட்டு முகங்கொண்ட அசுரர் முப்பதினாயிர வெள்ளத் தொகையினர் உண்டாயினர். அவர்களையும் அஜமுகியினிடம் நிறுத்தி, அப்பால் கரடி புலி முதலிய பல்வேறு வடிவங்களை எடுத்து விடியும் வரை புணர, அவ்வவ்வுருவினையுடைய அசுரர், அறுபதினாயிர வெள்ளத்தராய்த் தோன்றினர்.

"அப்பால் அவ்விரவு கழிதலும், மாயையும் முனிவனும் முன்னையுருக்கொண்டனர். சூரபன்மன் தன் தம்பியரோடு சென்று தாய் தந்தையரை வணங்கி நின்று, 'யாம் செய்க்கட வ்தனை உரைத்தருள்க,' என்று வேண்டினான்.

"முனிவன், 'யாதினுஞ் சிறந்தது தவமே; எல்லாப் பொருளையும் முத்திப்பேற்றையும் அளிப்பதும் அதுவே. அத் தகைய தவத்தினை நீவிர் புரிமின்; தீவினையை விடுமின்;

அறத்தை ஆற்றுமின். இஃது உங்கள் மனத்தில் உறுதியாகும் படி இதற்கிலக்கியமாம் ஒரு கதையினைக் கூறுகின்றோம். அதனைக் கேட்பீராக,' என்று கூறத் தொடங்கினான்:

" 'கடகம் என்பதோர் ஊருண்டு; அதில் மறையவர் குலத்து அருந்தவனாகிய குச்சகன் என்பவன் இருந்தான். அவனுக்கோர் அரும்புதல்வனுண்டு. கவுச்சிகன் என்னும் அப் புதல்வன், முத்திப்பேறடைய விரும்பி, ஒரு தடாகத்தருகிற் சென்று கடுந்தவமியற்றுவானாயினான். பரமனை நினைந்து, மெய்யினை மறந்து, குற்றி போல அசைவற்றிருந்து நோற்றமையால், அங்குச் செல்லும் மிருகங்களெல்லாம் அவனைக் குற்றி என்றெண்ணி உடல் தினவைப் போக்க அவன்மீது உராய்ந்து செல்லுவது வழக்கம். அவ்வண்ணம் நிகழ, ஒருநாள் திருமால் அம்முனிவன் தவத்தை வியந்து, அவனருகிற்சென்று முதுகைத் தடவ, அம்முனிவன் விழித்தெழுந்து, பணிந்து துதித்து நின்றனன். திருமால் அவனுக்குச் சிவபெருமான் அருள் கைகூடுமென்று கூறி மறைந்தருளினான்.

" 'முனிவன் மகிழ்ந்து இல்லமடைந்து, தன் பிதாவினிடம் நிகழ்ந்ததைக் கூறி, அவனருள் பெற்றிருந்தான். அவன் தாதை அவனை நோக்கி, 'அனைத்தையும் அறிந்த நீ என் சொற்படி ஒழுக வேண்டும். நல்லறமாகிய இல்லறத்தை நீ நடத்துவது தான் சிறப்பு,' என்றான். அம்மொழி கேட்ட கவுச்சிகன், மனநடுக்கமடைந்து, 'அருந்தவமியற்றி வீட்டினைப் பெற எண்ணிய யான், இவ்வுலகிடை மடவார் வலைப்பட்டு மயங்ககில்லேன்! யான் மறுத்துரைத்ததற்கு மனங்கவலற்க! இஃதொன்றினையுந் தவிர்திர்,' என்றான். பிதா இல்லறமே சிறந்ததென்று கூறி, அவ்வில்லறத்தினால் பின்னர்த் தவமும் இயற்றலாமென்றும், தான் அனைத்தையுமாராய்ந்து கூறுவதை மறுக்கலாகாது என்றும் ஆணையிட்டு, அப்புதல்வனை ஒருவாறு இணங்கும்படி செய்தான். குரவன் உரையை மறுக்க அஞ்சிய அப்புதல்வன், அவனை நோக்கி, 'இதுகாறுங் கூறி வந்த இல்லொழுக்கமாவது நன்மனையாட்டியைக் கூடி நடாத்துவதே. அவ்வில்லொழுக்கமே புகழினையும் புண்ணியத்தையும் பயக்குமாகலான், அதற்குத் தக நல்லிலக்கணமமைந்த பெண்ணொருத்தி கிடைப்பளாயின்,

அடியேன் அவளை மணந்து இல்லறத்தை நடாத்துவன்,' என, பிதா மனமகிழ்ந்து, 'அற்றாயின், மிக நன்று! நீ கூறும் இலக்கணம் அமைந்த பெண்ணை யான் தேடி நினக்கு மண முடித்தல் செய்யேனாயின், யானியற்றிய தவம் குறை மதியை ஒத்து நாளுந் தேய்ந்தொழியக் கடவது!' என்று உறுதி கூற, கவுச்சிகன், அப்பெண்ணுக்கிருக்க வேண்டுவனவாகிய இலக் கணங்களை எடுத்துக் கூறத் தொடங்கினான் :

"'என் அருந்தந்தையீர், பிதா இல்லாதவரும், தாய் மாண் டவரும், தங்கையரில்லாதவரும், ஆண்மக்களோடுபிறவாதாரும், அன்னார் பிறந்தும் இறக்கப் பெற்றவரும், பரவிய சுற்றமில்லா தாரும், நல்ல செல்வமில்லாதாரும், நற்குடிப்பிறவாதாரும், நோயுடைய தாய் தந்தையர்க்குப் பிறந்தாரும், சிவபெருமான் முதலிய தெய்வப் பெயர் கொள்ளாது, ஆறு, மாக்கள், அலகை கள் முதலிய பெயரினைக் கொள்வாரும், இழிந்த சமயத்தினர், நோயர், ஊமையர், பிறர் மனை செல்பவர், பொது மகளிர் போல விழிப்பவர், ஆடவரைப் பன்முறை நோக்கி ஆவலோடு முன் கடை நிற்பவர், அழகு பெற அலங்கரிப்பவர், தனியாக உறவினர், பேருறக்கத்தினர், வயதின் மூத்தவர், ஒத்த கோத் திரத்தர், உயர்ந்து வளர்ந்தவர், குட்டையானவர், பருத்த உடம் பினர், மிகுமேன்மையர், பயனற்றுக் கருநிறமுடையவர், பொன்னிறமுடையவர், நாணமில்லாதவர், நகைப்பவர், பலமற் றவர், மிக்க பலமுடையவர், பெற்றோர் மொழி கேளாதார், வெகுளியர், சண்டையிடுபவர், நடனம் முதலியவை காண விரும்புபவர், விரசமுடையவர், ஈசனிடத்து அன்பில்லாதவர், முனிவரைப் பழிப்பவர், குலநெறி நில்லாதார், தீய குணத்தினர், கற்பில்லாதவர், குருவை மனிதனென்று அவமதித்தவர், கட வுளைக் கல்லென்பவர், பத்தின் மேம்பட்ட வயதினர், பூப்புப் பருவம் அணுகினவர், இடியையொத்த சொல்லினர், அன்னை யப்பர் ஈவதன்முன் தாமே ஒருவர்பால் வைத்த சிந்தையர், பிறவிக் குருடர், பின்னர்க் குருடானவர், குற்றமுடைய கண்ணி னர், படலக் கண்ணினர், கூர்ந்து குறித்துப் பார்க்குங் குருடர், சாய்ந்த பார்வையர், பூனைக் கண்ணர், சுழல் கண்ணர், செங்கண் ணர், நீண்ட மூக்கினர், குறிய காதினர், அன்னமொத்த நடை

கிய புதியனாகி, உருத்திராக்க மாலையைப் புனைந்து, பிரம்பைக் கையிற்கொண்டு சென்ற அவ்வாதியை நோக்கிய செல்வ வணிகன், அடி வணங்கி, 'ஆள வந்த என் குருவே, நீவிர் இங்கெழுந்தருள யான் முன்னரியற்றிய பெருந்தவம் யாது?' என்று பன்முறை துதித்து உபசரித்து உடன்கொண்டு இல்லினுட்சார்ந்தான்.

"உட்சென்ற வணிகன், அருமையிற்சமைத்த அறுசுவை உண்டியைப் பொன்னின் நற்கலத்துப்பெய்து, நல்லுரை சொல்லி உவந்து, அத்துறவியை அருத்தினான். அருத்திய பின்னர், 'அடிகளிங்கெய்தக் கருத்தெது? மெல்லக் கூறுமின்,' என்றான். அவ்வின்சொற்கேட்ட அக்கள்ள இரசவாதி, 'ஈசன் தந்த வித்தையொன்று எம்பால் உண்டு. அஃது எவர்க்கும் இயம்பொணாதது; தேசிகன்பால் அன்புடைய சீடர்களுக்கே இயம்பத்தக்கது. ஆகலின், குற்றமற்ற மனத்தினாய், நினக்கு யாம் சொல்லக் கருத்துடையேம். அஃதாவது, இரசவாதம்; இரசத்தைப் பொன்னாக்குவது. இது போன்ற வித்தைகள் அளவிறந்தன எம்பால் உள. ஆயினும், எமக்கவை அருமையல்ல. அவற்றை ஞானியர் விரும்பார். அஃது ஏனையர் எவரும் விழையத்தக்க விழுப்பொருள். யாம் காரிரும்பையும் நாகத்திற்காட்டுவம்; கரிய இரும்பைப் பொன்னென உரைபெறவுஞ் செய்வம்; மேருகிரி, கயிலைபங்கிரியாகிய இவைகளை யாவரும் அறியக் காட்டுவம்; ஈயமும் இரசமும் வெள்ளியென ஆக்குவம்; இரும்பினிற்செம்பு ஆக்குவம்; அகில அண்டங்களையும் பொன்னுருவாக்குவம்; எம் ஆற்றலை உரைக்கப் புகின், ஆண்டு அளப்பிலவாம். ஒன்றினைக் கோடிப் பொன்னாக்குவம்; கோடியைக் குன்றமாக்குவம்; நினக்குள பொருளெலாந் தருதியேல், நின் மனையில் மாளிகை நிதி வைப்பதற்கிடம்கொளாததென ஆக்குவம்,' என்று உரைத்தனன்.

"அவனது வஞ்சம் ஓராத வணிகன், அவனை வணங்கித் தன் முன்னவர் ஈட்டி வைத்தனவும், தான் ஈட்டினவுமாகிய பொருளும், தான் சேமித்துள்ள பூண்களுமாகிய அனைத்தையும் கொணர்ந்து, அக்கள்வன் முன் வைத்தான்.

"அவற்றைக் கண்ட இரசவாதி கை கொட்டி நகைத்து, 'இதுவே போலும் உன் முன்னவரும் நீயும் ஈட்டிய பொருள்! சாலவும் நன்று!' என்று பரிகசித்து, வணிகனை நோக்கி, 'நீ எம் பின் வருகுவையாயின், அளவிறந்த பொருள் நினக்களிப்பேம். எமது உருக்குக் குகையில் ஒழுகும் பொன்னுக்கும் நின் பொன்னனைத்துமீடாகா,' என்று உரைத்தான்.

"அம்மொழி கேட்ட வணிகன், 'அடிகளே, வெகுளற்க!' என்று அவனடி பணிந்து சென்று, தனக்குள்ள நிலம் முதலிய பொருளும், அறச்சாலைகளும், அவற்றிற்கு மூலதனமாக இடப்பட்ட பொருளும், கைப்பொருளாகுமாறு மாற்றிக் கொணர்ந்து, வாதி முன் வைக்க, அவ்வாதி அவற்றை மகிழ்ந்து வாங்கி, தீயில் வைத்து உருக்கி, உருக்கிய அப்பொன்னை நூற்றெட்டுப் புடம் வைத்து, 'பழுக்கும் வராகியால்; மயங்காதே,' என்றுரைத்து, 'காற்றியங்காத ஓர் அறையைக் காட்டு,' என்று கேட்டு, அவன் காட்டிய அறையுள் இந்தனம் அடுக்கி, ஈமத் தீயைக் கொண்டுவந்து மூட்டிப் புகையை அங்கமர்ந்த அவ் வணிகன் எதிரிலே செலுத்தினன்.

"அந்தப் புகையால் கண்ணீர் பெருக, ஆருயிர் வருந்த, மெய் வெதும்ப, உடல் வியர்க்க நின்ற அவ்வணிகன் எய்திய துன்பத்தினை உரைக்க வல்லவர் யாவர்! அத்தருணத்தில் பொதிந்த பொன்னின் குகையை மெல்ல எடுத்துத் தன் ஆடையில் மறைத்து, அக்கள்வன் விரைவில் அக்குகையையொக்கச் செய்யப்பட்டிருந்த மற்றொரு குகையைப் பக்கத்தில் வைத்துப் புகையையும் அணைத்தான். பின்னர் வணிகனை நோக்கி அவ் வாதி, 'தருமதத்த, இக்குகையை நினது கையினாலேயே எடுத்து வை,' என்று கூறித் தான் அதைக் கையில் ஏந்த, அவனும் அவ்வாறே தாங்கி அத்தீயிடை வைக்க, அக்கள்வன் அதற்கு வேண்டுஞ்செயல்களைச் செய்து முடித்துத் தத்தனை நோக்கி, 'நீ உணவின்றி, யாவருடனும் உரையாடாமல், பெண்களோடு சேராமல், பிறரைக்காணுமல், எம்மையே கருத்திற்கொண்டு மூன்று நாள் விரதம் இருக்கக் கடவாய். யாம் காளியின் கோயில் சென்று நோன்பினை முடித்து நாலாம் நாள் இங்கு வருவோம்,' என்று கூறி அகன்றான். அகன்ற கள்வன்

கன்னலொன்றிற்குக் காவதமொன்ருகக் கடுநடை நடந்து, உரு மாறி, வேற்றார் எய்தி மறைந்தான்.

"அவன் பணித்தலை நின்ற வணிகன், அவன் கூறிய நாளெல்லை இகந்தும், அவன் வருகையைக் காணுது வருந்திப் பல இடங்களிற்சென்று தேடியுங்காணுது, கலங்கி இல்ல மடைந்து, தீயின்கண் வைத்த குகையை எடுத்து நோக்க, அஃது இரும்பாயிருத்தலைக்கண்டு, துண்ணென மயங்கி வீழ்ந் தான். வைத்த பொன் காணுது மயங்கி வீழ்ந்த தத்தன், பின்பு தேறிப் பேய் போன்றலைந்து திரிந்து, சின்னுளில் இறந்தொழிந் தான்.

"அவ்வணிகன், அறப்பொருள் பகர்ந்த அதிக பாவத்தினுல் இந்த மதயானையாகிப் பிறந்தான் என்று குச்சகமுனிவன் மனத் துள் மதித்து, 'இப்பிறப்பினை இப்பொழுதே மாற்றுவன்,' என்று அருள் கூர்ந்து, 'யான் முன்னரியற்றிய தவத்தினில் ஒரு நாள் இயற்றிய தவம் இவ்வேழத்திற்காகுக!' என்ருன். இவ்வாறு கூறிய அளவே அத்தவப்பயனுல், அம்மதயானை உரு வொழிந்து தேவசரீரத்தொடு திகழ்ந்தது. அத்தேவன் முனி வனைப் பணிந்து விடை பெற்று, அரமகளிர் ஆடல் பாடல்கள் செய்யவும், தேவர்கள் சூழவும், விண்ணிழிந்த விமானமீது அமர்ந்து, வானுலகிற்சென்ருன்.

"பிறகு குச்சகமுனிவன் முன்போலத் தடாகத்தில் தவ மியற்ற, தென்திசைக் கிழவன் ஆண்டு நண்ணினன். அவனைக் கண்ட முனிவன் அவனடி தாழ்ந்து, 'அண்ணலே, உசத்தியன் மகளாகிய விருத்தையை உயிர்ப்பித்துத் தர வேண்டுகின்றேன்,' என்ருன். கூற்றுவன் மகிழ்ந்து தன்னெற்றனெருவனை நோக்கி, 'அப்பெண்ணின் உயிரினைக் கொடுவந்து விடுக,' என்றுணை தந்து மறைந்தான். தூதன் அவ்வாறு புரிய, அப்பெண் உயிர் பெற்று, உறக்கம் நீங்கினுரொத்து மெல்ல எழுந்தனள். பெற் ருேர் அவளைத் தழுவிப் பெருமகிழ்ச்சியாகிய கடலில் ஆழ்ந்து, பின்னர் முனிவனைப் பல வகையாகப் புகழ்ந்தனராகி, அக்குச் சகன் விரும்பிய வண்ணமே அவன் மகன் கவுச்சிகனுக்கு அக்கன்னியை மணம் நேர்ந்தார்கள். கவுச்சிகனென்னும் மிருக கண்டேயன், தன் மனைவியாகிய விருத்தை என்பவளோடு இல்லறம்

நடத்தி வருங்கால், அவனது அருந்தவப் பயனாக **மிருகண்டு** என்னும் ஒரு புதல்வன் அவனுக்கு உதித்தான். அப்புதல்வனுக்கு ஆண்டாறாக, மிருககண்டூயன் அவனுக்கு உபநயனம் முடித்துத் தன் தந்தையைப்போலத் தானும் தவமியற்றச் சென்றான்.

“அப்புதல்வன் தன் பிதா ஏகிய பின்னர், **முற்கலன்** என்னும் பெயரினையுடைய முனிவன் குமரியாகிய **மருத்துவதி** என்பாளை மணந்து, **அருமயம்** என்னுங் காட்டிடை வதிந்து வருகையில், புத்திரப் பேறின்மையால், மனைவியொடு சுற்றத்தினரைக்கொண்டு காசி நகரடைந்து, கங்கைப் புனலாடி, **மணிகர்ணிகையை** அடைந்து, அங்குள்ள சிவபரஞ்சுடரைப்பணிந்து, அக்கோயிலுக்கருகில் ஒருசாரிருந்து, புத்திரப்பேற்றை விரும்பி, வெயில், பனி, மழை, காற்று முதலியவற்றைப் பொருட்படுத்தாமல், ஒரு வருடம் கடுந்தவம் புரிந்தான்.

“அவனது தவத்திற்கிரங்கிய முக்கட்பெருமான், காட்சி தந்தருளி, ‘வேண்டுவதென் ?’ என, முனிவன், சிவபெருமான் திருவடிமிசை வீழ்ந்து, தனக்குப் புத்திரப்பேறு வேண்டுமென்று கூறினான். அதனைக் கேட்டருளிய சிவபெருமான், புன்னகை புரிந்து, ‘தீய குணமும், அறிவின்மையும், ஊமையும், செவிடும், முடமும், குருடும், நோயின் மிகையும் ஆகிய இவற்றொடு வயது நூறுடைய புதல்வனை வேண்டுதியோ ? அன்றி, யாக்கையின் அழகும், உறுப்பிலக்கணமும், நோய் சிறிதின்மையும், எம்மிடத்தன்பும், பலகலைப் பயிற்சியும் ஆகிய இவற்றொடு வயது எண்ணிரண்டாம் புதல்வனை வேண்டுதியோ? நின் கருத்தென்னை ?’ எனக் கேட்டனன். அப்பரம்பொருள் உரைத்தவற்றை ஓர்ந்த முனிவன், ‘ஆண்டு சுருங்கியிருப்பினும், அறிவு மிக்கானாய், நோயில் யாக்கையனாய், இறைவன்பால் அன்புடையானாய புதல்வனே வேண்டும்,’ என்றான். அவ்வாறே வரமருளி இறைவன் மறைந்த பின், முனிவன் மனமகிழ்வடைந்து, மனையொடு கெழுமி வாழ்ந்து வருகையில், புவியின்கண்ணுள்ள துன்பம் நீங்கவும், அறம் வளரவும், முனிவரோங்கவும், வைதிக சைவம் வாழவும், பரமன் கிருபையால், அம்முனிவன் மனைவி வயிற்றில் கருப்பம் வந்தெய்தியது.

"அது நிமித்தமாக மாதந்தோறுஞ் செய்யவேண்டிய சடங்குகளைச்செய்து முடித்துச் சிவனடியார்க்கு வேளாண்மை செய்தல் முதலியவற்றைச் செய்யாநிற்பப் பத்துத் திங்கள் நிரம்பின. ஆண்டுச் சோதிடர் குறித்த நன்னாளில் ஓர் அருமைப் புதல்வன் உதயமாயினன். அவ்வமயம் உலகில் நன்னிமித்தங்கள் காணப்பட்டன. தேவர் வாழ்த்தினர். பிதா செய்ய வேண்டிய கடன் முறையைச் செய்து முடித்தான். பிரமன் அங்குச் சென்று, அக்குழந்தைக்கு **மார்க்கண்டேயன்** என்று நாமகரணஞ் செய்தான். அக்குழவி வளர் மதியினையொத்து வளருங்கால், ஓராண்டிற் செய்ய வேண்டுவனவும், மேலாண்டிற் செய்ய வேண்டுவனவும் செய்து முடித்து, ஐயாண்டின் முந்நூல் விதி முறை முடித்துப் பதி நூல்களாயினவற்றைப் பயிற்றுங் கால், அவன் சிவனே பரனென்று தெளிந்தானாகி, அவனடிக்கே அன்பு பூண்டு ஒழுகிப் பிரமசரியங் காத்து வந்தான்.

" அவ்வண்ணம ஒழுகுநாளில், அக்குமரன் தன் தாய் தந்தையர் தனித்தனி இருந்து வருந்துகின்ற செய்கையைக் கண்டு, அவர்களை அவ்வாறு வருந்துதற்குக் காரணமென்னை என்று கேட்டான். அவர்கள் அவனை நோக்கி, 'அருமை மைந்த, நீயிருக்க எமக்கொரு குறையுமுண்டோ? யாம் புத்திரப்பேறு கருதிய அன்று, சிவபெருமான் நினக்கீந்த வயது எண்ணிரண்டே. அவ்வெல்லை எய்திற்று. ஆதலின், நின்னை இழத்தலையஞ்சி வருந்துகின்றேம்,' என்று மொழிந்தனர்.

" அதுகேட்ட மார்க்கண்டேயன், 'அஞ்சன்மின்! அஞ்சன்மின்! யான் அருளுடை அண்ணல்பாற்சென்று, அருந்தவமியற்றிக் கூற்றினையகற்றி, ஆண்டினைப் பெருக்கி வருகின்றேன். விடை தருக,' எனப் பணிந்தான்; பணிந்து தன் குரவரிடம் பெற்ற விடையும், பரமன் அருளுந் துணையாகச் சென்று, **மணிகர்ணிகாலய**த்தின் அமர்ந்த ஈசன் திருவடிகளை முடிக்கணியாகப் பணிந்து, பலவாறு துதித்து, அவ்விடத்தே தென்புறம் ஒரு சிவலிங்கம் தாபித்துப் பூசனையியற்றி வருகையில், அருளுருவாகிய சிவபெருமான் ஆண்டெழுந்தருளி, 'நீ வேண்டுவது என்னை?' என, முனி மைந்தன் அடி முறை வணங்கி, 'அருள் மூர்த்தியே, கூற்றுவன் வந்தென்னைக் குமையா வகை

பேரருள் சுரந்தருள வேண்டினேன்,' என்றான். அதற்குச் சிவபெருமான், 'நீ அந்தகற்கு அஞ்சற்க,' என்று திருவடித் தீக்ஷை செய்து மறைந்தான்.

"உடனே பதினாறு வயது நிரம்ப, விண்ணில் முகில்போல கடுவன் தூதன் ஒருவன் தோன்றி, மார்க்கண்டேயன் சிவபெருமானிடம் அன்பு வைத்துப் பூசை புரிவதைக் கண்ணுற்று, அவனது தவக்கனலினால் அவனை அணுக முடியாது, மீண்டும் நமனிடஞ் சென்று, நிகழ்ச்சியைக் கூறினான். அப்புதுமையைக் கேட்ட நமன், 'அச்சிறுவனென்ன ஈறில்லாத இறைவனோ!' எனச் சீறிச் சித்திரகுத்தர்களை அழைத்து, 'அச்சிறுவன் ஆயுளின் கணக்கென்னை?' என்றான். அவர், 'அண்ணலே, இறைவன் அன்றருளிய ஆயுள் ஆண்டு எண்ணிரண்டு; அவ்வெல்லையும் இகந்தது. அவன் அறத்தினையுடையான் ஆதலான், அமரருலகு எய்துவான்; நிரயம் எய்தான்; ஈதவன் நிலைமை,' என்றனர். அம்முறைமையைக் கேட்ட சண்டன், வெகுளி எய்தி, அமைச்சனாகிய காலனை விளித்து, 'காசியில் அந்தணச் சிறுவன் ஒருவன் உளன். அவன் ஆவியை இங்குக் கொணர்தி,' என்றனன்.

"அவ்வாணை தாங்கிய காலன், நில உலகிற் காசிநகரடைந்து, அம்முனி மைந்தன் சோர்வின்றித் தவமியற்றுங்கொள்கையைக் கண்டு, அந்நற்றவனை நணுகவுமியலாதென்று அவன் கண்முன் தோன்றி, வணங்கி நின்றான். அவனைக் கண்ட மார்க்கண்டேயன், 'நீ யார்?' என, அவன், 'முழுதுலகுயிரையும் முற்ற முடிக்கும் கூற்றுவன் அடிமை யான்; என் பெயர் காலன். என் செயல் யாது எனின், இயம்பக் கேள்: கறைமிடற்றிறை நும்கியம்பிய ஆண்டு பதினாறே. அவற்றிற்கடையுறுமாண்டு கழிந்தது நென்னலே. ஆதலின், தென்புலமெய்த வேண்டினேன். அன்றியும், ஈதலும் அழித்தலும் இறைவன் ஆணையே. அவ்வாணையைத் தடுப்பரிதாகுஞ் சதுர்முகத்தவற்கும். நம்மைக் காணிய நேசமொடு நின்றான் எம்மிறை கூற்றுவன். ஆதலின், தவத்தினீர், போதல் வேண்டினேன்,' என்றான். அக்கடுமொழி கேட்ட முனிவன், 'சிவன் செயல் புரியும் பெருமை

யுடையார்க்கு நமனுலகேது? நட நட!' என்றுரைப்ப, காலன் அஞ்சி நடுங்கி, நன்றெனா அகன்றான்.

"அகன்ற காலன் நமனை நண்ணி, உற்றன யாவும் ஒழிவின்றியுரைக்க, அக்கூற்றுவன், உடல் வெயர்க்கவும், விழி கனல் காலவும், புருவக்கடை நிமிரவுங் கொதித்து, 'மேதியைத் தருதிர்!' என்று கூறி, வந்த அதன்மீதேறி, கவிகையும் துவசமும் நிவப்ப, வீரர்கள் சூழ்வரப் புறப்பட்டு, முனிவன் நோற்றுழிச் சென்று எதிர்ந்தான். செம்மயிரும், முகில் மேனியும், கனற்கண்ணும் உடையனாய்ப் பாசம் பிடித்துத் தண்டமேந்திச் சூலத்தொடு நின்ற அவன் தோற்றத்தை மார்க்கண்டன் கண்டு, சிவபிரான் திருவடிகளை ஏத்திப் பூசிப்பானாயினான். அவனது செயலைக் கண்ட நமன், 'மைந்தா, நீ என்ன நினைந்தனை? யாது செய்கின்றனை? முன்னைய ஊழும், முக்கணன் உரைத்த நெறியும் துடைத்திடல் ஆமோ? சிறிதும் ஓராய்! பெருந்தவர்க்குங் கூடாத இது கூடுமென்றுன்னி இன்றளவும் முயல்கின்றாய். ஈசனிடத்தன்பினால் நீ நித்தலும் புரியும் பூசை, கொடிய பிறப்பை அகற்றுமேயன்றி, யான் வீசும் பாசத்தையும் விலக்க வல்லதோ? கடலின் மணலை எண்ணிக் கணக்கிட்டுக் கூறலாம். உடுக்கணத்தினை ஒவ்வொன்றாக எண்ணித் தெரியலாம். ஆயினும், என் ஆணையின் மாண்டிடும் இந்திரரை எண்ணவும் இயலுமோ? தாமரைக் கண்ணற்குமுண்டு இறுதி; சதுர்முகற்குமுண்டு; எனக்குமுண்டு; ஆதலின், நினக்கு முண்டென்பதைப் பேசவும் வேண்டுமோ? என் அரசேந்திய பாசம், சூலம், மழு, தண்டம் ஆகிய இப்படைகளை முற்போது தவத்தால் ஈசனிடம் பெற்றுள்ளேன். ஆனதால், தேவர் காப்பினும், படைப்பு, அளிப்பு, அழிப்பு ஆகிய முத்தொழிலியற்றுவார் காப்பினும் காக்க! இன்று நின் உயிரினைக் கொண்டன்றி யான் மீளேன்! நீ துன்பங் கொள்ளற்க. சிவனுக்கன்பராயினும், இறுதியெய்தின், அவரைத் தென்புலத்து உய்ப்பன். இஃது உறுதி. என் பின் போதருவாய்,' என்றியம்பினான்.

"மார்க்கண்டன், 'எம்மிறையின் அடியவர் திருக்கயிலை அடைவதன்றித் தென்புலமெய்தார்; அவர் மாதவத்தரேனும், இல்லறத்தினரேனும், வினையினீங்கிய வீட்டினை எய்துவர். அன்

ஞர் உன்னையும், மற்றைத் தேவரையும், இந்திரன், பிரமன், மால், உருத்திரரையும் சிறிதும் பொருட்படுத்தார். நீ அன்னார் தன்மை தேர்கிலை; வையத்தார் போல நினையாநின்றாய்; அவருள் ஒருவனாகிய என்னுயிர்க்குத் தீங்கு நினைத்தாய். இவையெல்லாம் உன் தலைமைக்கும், உன் உயிர்க்கும் தீயவாம். என் செவி கேட்கத் தீதாகிய மாற்றஞ் செப்பி நின்றாய்; மேல் வரும் விளைவினை எண்ணிலை. நீ இவ்விடை நிற்றலுந் தகுமோ! பேதாய், போதி,' என்றனன்.

"அம்மொழி கேட்ட நடுவன், அவன் நேரே வருபவனாகத் தோன்றவில்லை என்றெண்ணி, விண்ணிடை இடியென ஆர்த்துத் தன் கைப்பாசத்தை அவன்மீது வீசி இழுக்குங்கால், முனி மைந்தன், ஈசன் இணையடி மறவாமல் ஏத்தி நின்றான். கண்ட தேவர் அவன் மாய்ந்தானென்று மருளுற்றனர். வீசியிழுக்கும் பாசம் கழுத்திலமைந்தும் இடரிலானாகிய மார்க்கண்டன் முன் சிவபெருமான் தோன்றி, 'நீ அஞ்சாதே!' என்று கூறி, அக்கூற்றுவனைத் தன் இடக் காலினால் உந்தி உதைத்தலும், அவன் விண்ணினின்றும் வீழும் முகிலையொத்துக் கீழே விழுந் திறந்தான். அவன் கடாவும் வீழ்ந்திறந்தது. அக்காலத்து முனி மைந்தன், தொன்னூற்றுறையே துதித்து நிற்கையில், சிவபெருமான், 'நினது பூசையை உவந்தனம்! நினக்கு ஆயுள் அந்தமின்றி அளித்தனம்,' என்று உரைத்து, மார்க்கண்டேயன் பூசித்த இலிங்கத்துள் மறைந்தருளினான்.

"மார்க்கண்டேயன், அன்பு மிகையால் மணிகர்ணிகாலயத்துச் சென்று, பெருமானை வழிபட்டுத் தன்னிமித்தம் வருத்தமெய்திய தாய்தந்தையரின் இன்னலை நீக்கிச் சிவாலயங்கள் பலவுஞ் சென்று தரிசித்துச் சிவன் முத்தனாய், பல்லாண்டு வாழ்ந்தனன்.

"தண்டன் இறந்த காரணத்தால் உலகில் இறப்பென்பதே இல்லாது, மக்கள் முதலிய எல்லா உயிரும் மல்கியதால், பூமிதேவி திருமாலின் அடியிணை பணிந்து, சுமையின் மிகுதியைக் கூற, திருமால், பிரமன் இந்திரன் முதலிய தேவர்களோடு திருக்கயிலையை நண்ணிச் சிவபெருமானுக்கு விண்ணப்பிக்க, அவ்வருள் மூர்த்தி நமனை எழுப்பி, 'நீ நம் அடியவரிடத்துப்

பயமும் பத்தியும் உடையனுதல் அன்றி, அவர்க்கிடரிழைப் பாரை நரகத்து உய்த்தும், அவரை உவப்பாரைத் துறக்கத்து உய்த்தும் வருதி. அவ்வடியார் நம் பக்கல் அணைதற்குரியராதலின், அவரிடை நினக்குத் தொழில் யாதுமில்லை,' என்று பணித்து, முன்னைத் தலைமையையுங் கொடுத்து அருள் புரிந்தான்.

"பின்னர்த் திருமால் முதலிய தேவர், சிவனை வணங்கித் தத்தம் பதி புக்கனர். மேதியொடு எழுந்தருள் பெற்ற கூற்றுவன், மார்க்கண்டன் சரிதங் கூறுவாரையும் குறுக அஞ்சுவான். ஆதலான், குச்சகன் அருந்தவத்தினுல் விருத்தைக்கு உயிரளித்தான்; மதயானையைக் கொடுமையொழித்துத் தேவனுக்கினுன். அவன் பெற்ற மிருககண்டேயன், மூவரும் புகழ்தரும் முதன்மை பெற்றனன். அவன் பெற்ற மிருகண்டு ஒப்பிலாப் புதல்வனைப் பெற்றுன். அப்புதல்வன் தன்மேல் வந்த கூற்றினைக் கெடுத்து, அழிவிலா ஆயுளைப் பெற்றுன். ஆகலான், தவமே பெரிது. தவத்தாலன்றே இன்னேர் இத்தகுதியடைந்தனர்?" என்று கூறிக் காசிபன் அவர்களையும் அருந்தவம் செய்யச் சொன்னுன்.

இவ்வாறு காசிபமுனிவன் சூராதியரை நோக்கிக் கூறியவற்றைக் கேட்ட மாயை நகைத்து, முனிவனை நோக்கி, "மறை முதல் நூல்களை மாசின்றி உணர்ந்த மாண்புடையோய், நீ கூறிய அனைத்தும் உண்மையே. ஆயினும், இது நின்னையொத்த வீட்டினை விழையுந் தவத்தினர்க்கல்லாது, இன்ப நுகர்ச்சியால் யாம் பெற்ற இச்சிறுவர்க்கு ஒல்லுமோ? இவர்கள் பெற வேண்டுவன இளமை, இன்பம், பொருள், நீண்ட ஆயுள், அதிகாரம், ஆற்றல் முதலியன அன்றே? அவற்றையே பெற அருள் புரிவாய்," என்ன, முனிவன், "நின் கருத்து இற்றுயின், நீயே அவர்களுக்கு உபதேசிப்பாய்," என்றுன்.

அவள் தன் மக்களை நோக்கி, "மைந்தர்காள், நுந்தையாகிய முனிவன் கூறிய யாவும் உண்மையே. ஆயினும், நமக்கவை இயலா. நீங்கள் அடையத் தகுவன கல்வி, செல்வம் ஆகிய பொருள்களே. அவற்றுள்ளுஞ் செல்வமே சிறப்புடையது. எல்லா நன்மையும் அதனுற்பெறலாம். அவற்றையெல்லாம் பெருந்தவ முயற்சியால் தேவர்கள் பெற்று நேற்றுத்தோன்றிய

உங்களுக்கு வழிப் பகையோடு பகையாயுமுள்ளார்கள். ஆதலின், அத்தேவரினும் நீங்கள் சிறந்து தோன்ற வேண்டின், திறலும், அரியதொரு தவமியற்றி அரும்பெறல் அரசும், ஆணையும், ஆயுளும் பெறுங்கள். அத்தவத்திற்குரிய இடம் இங்கிருந்து நேரே உத்தர திசை ஏகினற்காணலாம். அது, தானவர் தவமியற்றத் தகுந்த சூழல்; நீவிர் மூவரும் இப்பரிசனங்களோடு சென்று, வேள்விச் சாலையியற்றி, அங்கண் சிவபெருமானைக் குறித்துத் தவமியற்றுங்கள். யான் அதற்கு வேண்டும் உபகரணங்கள் யாவும் தந்து அமைப்பேன்," என்று மந்திரம் முதலியவைகளை உபதேசிக்க, அவற்றைப் பெற்றுக்கொண்டு, இருமுது குரவரையும் வணங்கி, விடைபெற்று, அவுணர் தலைவனாகிய சூரன், தன் குழுவினரோடும் போயினன்.

## 2. மாயை நீங்கு படலம்

சூராதியர் சென்ற பின்னர், மாயை, மோகமாய் நின்ற முனிவனைப் பார்த்து, "இனி வருந்தற்க; யான் புதல்வரைக் காக்கப் போகின்றேன்," என்று கூறிப் பெயர, முனிவனும் பின்தொடர்ந்து, "அயலவரைப் போல என்னை விட்டுச் செல்லுவது அழகோ?" என்று இரங்கிக் கூற, மாயை, "யான் புத்திரப் பேற்றைக் கருதி நின்பால் அணைந்தேனன்றி, நின்னை நித்தலுங் கூடி இன்பம் நுகர நோக்கி வந்தேன் அல்லேன்," என்றுரைத்து மறைந்தாள். அக்கணமே ஆங்கமைந்த சோலை, தடாகம், மண்டபம், செய்குன்று, பூம்பள்ளி முதலிய அளவிறந்த இன்பந் தரும் பொய்ப் பொருள்கள் யாவும் தன்னொடு மறைய, முனிவன் கண்டு மயங்கிப் பிரிவாற்றாது, நிலத்திடை வீழ்ந்து புலம்பித் தனித்தான்.

புதல்வனாகிய காசிபன் மதி மயங்கி மாழ்குவதை அறிந்த பிரமன் ஆண்டணைந்து, தவத்திற்சிறந்த காசிபனை நோக்கி, "அறிவிற் சிறந்தோய், நீ இவ்வாறு செயலழிதலுஞ் சீர்மைத்தோ? நின்னை நீ எண்ணிலை; பெண்ணொருத்திபால் மையல் கொண்டு நின் போதமிழந்தாய்; மண்ணிடை வீழ்ந்து மயங்குகின்றாய்; காமத்திற்கொடிது பிறிதொன்றில்லை. நீ புணர்ந்த மாதரும் மாயை. நீ தவறு செய்தாய். ஆயினும், இனிப் போத

முற்று நின் தவத்தினில் நிற்பாய்,'' என்று பன்முறையால் தேற்றி ஏகினன்.

திசைமுகன் சென்ற பின்னர், முனிவனாகிய காசிபன், சிவபரஞ்சுடரைக் குறித்து, முன்போலத் தவமிழைத்திருந்தனன். அவனை நீத்தகன்ற மாயை, தன் புதல்வன் இயற்றுங் கொடிய வேள்விக்கு வேண்டிய பொருள்களை உதவ நினைந்து, புகரோன் ஏவல் கொண்டு, கறைமிடற்றிறையைக் கருதிப் பெருந்தவமியற்றி வைகினள்.

இதுகாறும் காசிப முனிவன் மாயையைக் கூடியதும், சூராதியர் தோன்றியதும் உரைத்தோம். இனி, அச்சூரன் முதலியவர் சிவபெருமான் திருவருளால் பெற்ற நல்வரங்கள் முதலியவற்றை இயம்புவோம் :

## 3. அசுரர் யாகப் படலம்

அன்னையின் ஆணையின்படி கடுந்தவமியற்றச் சென்ற சூரபன்மன், தன் தம்பியருள் சிங்கமுகாசுரனைத் தன் சேனைக்கு நெற்றியிலும், தாரகனைக் கடையிலும் காவலாக நிறுவி, தான் இடையே நின்று செலுத்தத் தானவரின் சேனைவெள்ளந் தரைமிசைப் படர்ந்து சென்றது. அப்பெரும்பாரத்தையாற்றாது நிலமகள் வருந்தவும், அனந்தனும் நாகமெட்டும் கவற்சியெய்தவும், குல வரைகள் சலிக்கவும், மண்டி எழுந்த பூழியீட்டம் மலரயன் உலகினைத் தாவவும், வீரர் கழலொலி கடலொலியை அவிக்கவும் செல்லாநின்ற படையைக்கண்டு சுக்கிரன் வியப்புற்று, இடையில் நின்ற சூரபன்மனை அணுகவும் மாட்டாதவனாய், ஒரு வசிய விஞ்சையால் அவனை அணுகிச்சென்று, ஆசி கூறி நின்றான்.

அவனைக்கண்ட சூரபன்மன், "நீ விண்ணுலக வாசியோ! அதன்மிசையுலக வாசியோ! அன்றிப் புவியின்கண் வாழ்குவையோ! நின்னை யான் அறியகில்லேன்! என் மனம் நின்னைக் கண்டமையின் உருகுகின்றது! அன்றியும், அன்பு மிகுதலால் என்பும் உருகுகின்றது! அனைத்துயிர்க்குந் தாபனையாய், நின்னை அறிய விரும்பினேன், ''என்றான்.

அதைக்கேட்ட சுக்கிரன், "யான் அசுரர்களாகிய உங்கள் குலத்திற்கெல்லாம் ஒரு பெருங்குரவன்; விண்ணிடைச் செல்

வேன்; சுக்கிரன் எனும் நாமமுடையேன்; ஓர் உறுதி கூற நின்னிடம் வந்தேன்," என்றான்.

அம்மொழி கேட்ட சூரன், உவகையாலணைந்து, கரங் குவித்து அஞ்சலி செய்து நிற்கப் புகரோன், "நீ தவமியற்றும் எல்லையில் பகைவர் உன் தவத்தைக் கெடுக்க முயல்வர். அன்னோர் கெடுதிகள் உன்னை அணுகா வண்ணம் இம்மந்திரத்தினை உபதேசிக்கிறேன். இதை நித்தலும் சுத்தனயிருந்து ஜெபித்துத் தவம் புரிவாய்," என்று, மிருத்தியுஞ்சய மந்திரத்தை அவன் காதில் உபதேசித்து, வணங்கி நின்ற சூரனை ஆசி கூறி ஏகினன். சூரபன்மனும் தவமியற்ற வடபுலத்திலுள்ள ஓர் ஆல வனத்தின் ஒரு புடையெய்திப் பதினாயிரம் யோசனை உள்ளிட்டதாக இடமமைத்து, அதனைச் சூழ மதிலமைக்க நினைத்துத் தன் சேனையைக் கூவி, உலகிலுள்ள மலைகளைக் கொணர்ந்து பெரு மதில் சூழவைத்து அதனிடை வாயிலுமியற்றச்செய்து, நான்முறை செய்து முடித்த அம்மதிலின் புறத்து வரம்பிகந்த தானையைப் போற்றும்படி நிறுவினன். அப்புரிசையின் நாற்புறத்தும் அமைத்த பெருவாயிலைக் காத்து நிற்கும்படி மந்திரத்தால் அழைக்கப்பட்ட துர்க்கை காளி முதலிய தெய்வங்களை வைத்துப் பின்னர் வயிரவ கணங்களையும் மந்திரத்தாற்கூவி வணங்கிக் காவல் வைத்தான்.

காவலிட்ட அதனுள் சூரன் ஆயிரவாயிர யோசனை நீளமும் ஆழமுமுள்ள ஓம குண்டத்தை அமைத்து, அதைச் சூழ நூற்றெட்டுச் சிறு குண்டங்களமைத்து, அவற்றைச் சூழ ஆயிரத்தெட்டு வேதிகை அமைத்துப் பின் வேள்விக்கு வேண்டும் பல பொருள் அடைய விரும்பித் தன் தாயை அங்கு வரும்படி அன்புடன் நினைத்தான். அங்கெய்திய மாயையாகிய தாய், அவ்வேள்விக்கு வேண்டிய அளவறு பொருள்களை அங்ஙனே தொகுத்து, அக்குண்டத்திடையே வச்சிர கம்பமொன்றை நிறுவுதற்பொருட்டு உய்த்துச். சோறு, அரிசி, வாசனைப் பொருள்கள், சுருவை, தருப்பை முதலியவற்றைத் தொகச் செய்து, நஞ்சினையுடைய வேம்பு முதலிய விறகுகளைச் சமித்துக்களாக மலை போல அமைத்துச் சென்றாள்.

மூவாயிரம் யோசனைப் பரப்பில் அமைக்கப்பட்ட பொருள்களைப் பார்த்துச் சூரன், "இனி நாம் வேள்வி இயற்றுவதற்கு ஆரம்பிக்கலாம்," என்றெண்ணி, விண்முகம் உராயத்தகுந்த பலம் அமைந்த அவ்வச்சிரத் தம்பத்தைத் தன் வலிமையால் எடுத்து நிறுவினன். பின்னர்த் திசை வாயில் காக்கும் காளிகளுக்குத் தன் பணிவும் ஆடு முதலிய ஊன் பலிகளுந் தந்து சென்ற சூரன், மதிலுக்குள் நெருங்கி நின்ற பூதகணத்திற்கும் பேய்க்கூட்டத்திற்கும் சோர்தலில்லாது உவக்குந் திறமமைந்த ஊன் பலியானவற்றைக் கொடுத்து, காளிகளையும் பயிரவத் தொகைகளையும் அருச்சித்து, வணங்கிப் பலி ஈந்து ஆயிரத்தெட்டுக் குண்டங்களிலும் நஞ்சு விறகிட்டுத் தீமூட்டி, ஊன் அவி முதலிய பெய்து, சிவபெருமானை உவக்கும்படி செய்து, தாரகனையும் சிங்கமுகனையும் பார்த்து, "நீவிர் இவ்வேதிதோறும் தாழாது சென்று ஊக்கத்தோடும் போற்றி வருதிர்," என்று கூறி, அவர்களை நிறுவி, அப்பால் இடையே அமைத்துள்ள பிரதான வேதியினை அடைந்து, மந்திர விதிப்படி அருச்சித்து, நஞ்சு விறகால் தீக்கடைந்தெடுத்து மூட்டி, நெய், ஊன், உதிரம், சோறு, எண்ணெய், பால், தயிர் முதலியவற்றைச் சொரிந்து, வெண்பொரி தூவி, செய்யுங் கடமைப்பாடுகளைச் செய்து, சிவபெருமானை நினைந்து வேள்வி இயற்றுவானாயினன்.

இவ்வாறு சூரன் பெருவளம் விரும்பி இயற்றிய வீரவேள்வியின் கனல், யாவரும் அஞ்சுமாறு ஓங்கி மேற்சென்றது, இப்பாரையுண்டு விண்ணுலகையும் உண்ண எழுந்ததொத்தது. இறுதிக்காலத்து உலகினை மொய்த்து நிற்கும் வன்னிகளைப் போலக் குண்டங்கள் எரிவதையும், சூரனது அரிய செயலையுந் தெரிந்த இந்திரன், பெரிதும் அஞ்சி, அவ்வேள்வியைக் கெடுக்க முயன்று, அதன் காப்பின் வன்மையால் அதனைச் செய்ய மாட்டாதவனாய், நடுக்கமடைந்து, துன்பக்கடலில் அமிழ்ந்தான். இவ்வண்ணமே ஒரு பதினாயிரம் ஆண்டுகள் தன்னிளைஞர்களுடன் சூரனானவன் கடுந்தவமுயன்றும், முக்கண் முதல்வன் அங்கெய்தி அருளாமையை உன்னித் தன்னிளையரை வேள்வி புரியும்படி பணித்துத் தான் விண்ணையடைந்து, வாளினால் தன் உடம்பினிலுள்ள தசையை அறுத்து அறுத்துச்

குண்டத்தில் அவிபாகப் பெய்து, குருதியை நெய்யாகச் சொரிந்து நின்றான். அவ்வாறு உடலிற்குறைத்த தசையெல்லாம் அவ்வப்போழ்தே வளர, அதைக் கண்ட சூரன் வியப்படைந்து, "இது சிவபெருமானுக்கு விருப்பம்போலும்!" என்றெண்ணி, அவ்வகையே அந்தரத்தினின்று ஓராயிரமாண்டு தவப்பெரு வேள்வியை இயற்றினன். இயற்றிய பின்னரும் பெருமான் அருளாமையைத் தெரிந்த சூரன், பிரதான குண்டத்திடை மந்திர விதியால் நடப்பட்டுள்ள கூரிய வச்சிர தம்பத்தில் குதித்தலும், அதன் நுனியிலிருந்து உருவி அடிகாறும் செல்லச் சூரபன்மனது உடல் முழுதுஞ் சாம்பராய்விட்டது. அச்செயலினைக் கண்டு அருகினின்ற சிங்கமுகாசுரன், கவலை மேற்கொண்டு வருந்தி, அவசமாய் வீழ்ந்து, ஒருவாறு தெளிந்து, எழுந்து திரிந்து, பலவாறு மொழிந்து புலம்புகையில், தாரகனும் அவ்வாறே அவ்வின்னற்கடலுள் அழுந்தி, அவ்வேள்விக் களமுழுவதும் புரண்டு, விண்ணவரும் அச்சமுறும்படி தரையைப் புடைத்துச் சோர்ந்து கிடந்தான். அச்செயல் கண்ட தானவர் கடல் போலப் பொருமிப் புலம்பினர்.

அவ்வேள்வியில் நிகழ்ந்த விஷயங்கள் அனைத்தையும் தூதரால் அறிந்த இந்திரன், மனமகிழ்ந்து, தேவர் புடை சூழ, வெள்ளை யானை மீதேறிச் சென்று, அவ்வேள்வியை அண்மி, விண்ணிடை நின்று, வேள்வித் தீயில் சூரன் மாண்டொழிந்ததும், இளைஞர் அவனுக்காக அழுது மாழ்குவதுமாகிய அனைத்தையுங் கண்டு, உவப்பெனுங்கடலில் அழுந்தியிருந்தான். அப்பால் சிங்கமுகன், தன் உயிர் போன்ற முன்னோன் இறந்ததற்குத் தான் ஆற்றுதவனாய், வீரம் பேசித் தனது ஆயிரஞ் சிரங்களில் பலவற்றைத் தன் வாள் கொண்டு தடிந்து, அத்தலைமைக் குண்டத்திலிடுதலும், பின்னருஞ் சிரங்கள் வளர்தலைக் கண்டு, தன் முன்னவனாகிய சூரனைப் போல வீழ்ந்திறக்கத் துணிவுடையனாகி வானத்தெழுதலும், ஞானப் பொடியணியும் நம்பன் அவன் கருத்தை அறிந்தருளினன்.

## 4. வரம் பெறு படலம்

அறிந்தருளிய சிவபெருமான், ஒரு கிழ மறையோன் வடிவங்கொண்டு தண்ணென்றி வந்து, சிங்கமுகனைக் குறுகி, "நீங்கள்

இவ்வாறு அழுங்குதற்குக் காரணமென்னை?" என்று வினவி அருளினன். சிங்கமுகன், வேதியனை வணங்கித் தங்கள் வரலாற்றையும், வேள்வி முயன்றதையும், தன் முன்னவன் முடிந்ததையும், தாங்கள் முடிய நின்றதையும் கூறி, "அருளுடை அந்தணரே, உம்மைக் கண்டதனால் யாங்கள் இறவாது இத்துணைப் பொழுது தாமதித்தனம்!" என்றான்.

அவ்வுறுதி மொழியினைக் கேட்ட சிவபெருமான், "உங்கள் தலைவனாகிய சூரனை இத்தீயிலிருந்து எழுப்பித் தருகின்றோம். நீங்கள் வருந்தாதிருமின்," என்றுரைத்து, விண்ணுலகத்திருந்த கங்கையை நினைக்க, அக்கங்கை, ஆயிர முகங்கொண்டு பரவி இழிந்து, சிவபெருமான் பதத்தினைப் பணிந்து, அக்குண்டத்திற்புகுதலும், அக்கணமே, கடலில் ஆலாலம் உதித்தெழுதல் போன்று, அவுணர் கோமான் ஆர்த்து எழுந்தான். எழுந்த சூரனைக்கண்ட இளைஞரும் ஏனையரும் அடைந்த மகிழ்ச்சியைக் கூற வல்லார் யாவர்!

இவ்வாறு அவுணராயினர் பெருமகிழ்வடைய, விண்ணிடை நின்ற மகபதியாதியர் நடுநடுங்கிக் கவலை மிக்கொண்டு, தத்தம் ஊரினை எய்தினர். வேதியனாகி வந்தருளிய சிவபெருமான், சூராதியர் காண, முக்கண்ணும் நான்கு தோளும் உடையனாகி, உமா சமேதனாய், மால் விடைமீது விண்ணிடையே காட்சி தந்தருளினன். அக்காட்சியினைக் கண்ட சூரபன்மன், துணைவரொடு பூமியில் விழுந்து, பன்முறை பணிந்து போற்றி, ஆராப் பெருமகிழ்வொடு தொழுது நின்றான். தொழுது நின்ற சூரபன்மனை அண்ணல் அருளால் நோக்கி, "நீ நெடிது காலம் வலிய தவமாற்றி உடல் நொந்தனை; நீ வேண்டும் வரங்களைக் கேட்பாயாக," என்று கூறினன். சூரன், "பிருதிவி சம்பந்தமான புவனங்கொண்ட அண்டக் குழுவினுக்கெல்லாம் யாவரசனாகவும், அவைகளைக் காக்க ஆஞ்ஞா சக்கரமும், விரைவிற் செல்லும் ஊர்திகளும், வச்சிர யாக்கையும், திருமால் முதலியவரை வெல்லுதற்குரிய தெய்வப்படைகளும் அருளவேண்டும்," என்றான்.

அருளே திருவுருவங்கொண்ட அண்ணல், அவன் வேண்டியவாறே அருள் புரிய எண்ணி, ஆயிரங்கோடி அண்டங்களுங்

ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகம் வரையில் ஆளுந்தன்மையும், அவ்வண்டப் பரப்புகளில் நினைத்த அளவிற் செல்லத் தகுந்த இந்திரஞாலத்தேரும், அவ்வண்டங்களையாள ஆஞ்ஞா சக்கரமும், சிங்க வாகனமும், அவுணர்களுக்கெல்லாம் அன்று முதல் முதல்வனாகும் மேன்மையும், பாசுபதக் கணை முதலிய படையும், அழியாத வச்சிர யாக்கையும், பதினாயிரங் கோடி வெள்ளம் ரத கஜாதி சேனைகளும் சூரபன்மனுக்குக் கொடுத்துப் பின்னர் வணங்கி நின்ற அவனுடைய இளைஞரைப் பார்த்து, "சூரனைப்போல நீங்களும் வீரம் படைத்து நூற்றெட்டு யுகங்களும் மேவுவீர்கள்; தேவர் முதலியவரை வெற்றி கொள்ளக்கடவீர்கள். நமது சத்தியன்றி உம்மை வெல்லுவாரில்லை," என்றருளி மறைந்தான்.

## 5. சுக்கிரன் உபதேசப் படலம்

அவ்வண்ணம் நிகழவும், சூழ்ந்துள்ள சேனைத்தலைவரும் தானவரும் சூரபன்மன் பெருவரங்கள் பெற்றமை தெரிந்து, ஆர்த்து நெருங்கி வணங்கி நிற்ப, சூரபன்மன் அவர்களுக்கு நல்லுரை பகர்ந்து, தம்பியர்களோடு சென்று, தாதையாகிய காசிப முனிவனை வணங்கி, நிகழ்ந்தவற்றைக்கூற, முனிவன், "இச்செல்வம் இடையறு வண்ணம் உங்கள் குருவாகிய சுக்கிரனை வணங்கி அவனிடத்து ஆசி பெறுங்கள்," என்று விடை அளித்தனுப்பினன்.

சூரன் பரிஜனங்களோடு சுக்கிரன் இருப்பிடம் அணைதலும், அவ்வசுர குரு அறிந்து உவந்து, எதிர் சென்று, சூரனைத் தழுவிக்கொண்டு, தன்னில்லினுள் அழைத்துச் சென்று, ஆசனமளிக்க, சூரனும் சிங்கமுகனும் அமர்ந்தார்கள். அவர்களைப் புகரோன் நோக்கி, "நீவிர் இங்கு வந்ததற்குக் காரணமென்னை?" என்று வினவ, அவர்கள் தாங்கள் வரம்பெற்றுக் காசிப முனிவன்பாற் சென்றமையும், அவன் கூறி விடுத்தமையுஞ் சொல்ல, சுக்கிரன் மிகக் களித்து, சூரபன்மனை நோக்கி, "உலகில் பதி, பசு, பாசம் என்றிசைக்கும் மூன்றும் கடவுள் உருவே. புண்ணியம் பாவமென்றும், இன்ப துன்பமென்றும், மாந்தர் இம்மையிற்செய்ததன் பயனை மறுமையில் அனுபவிப்பரென்றும் அறியாதார் கூறுவர். உலகில் கிடைத்த சுகத்தை

அனுபவிப்பதே அறிவு. நீ அவற்றால் மயங்கக்கூடாது; இந்திரன் உனக்குப் பகைவன். அவனை உடனே மறைந்து ஓடா வண்ணம் பிடித்துச் சிறையிடுவாய். கொலை, களவு முதலிய வற்றைச் செய்ய நீ அஞ்சுவையாயின், உலகில் உனக்கு ஒருவரும் அஞ்சார்; உன் ஆணையுஞ் செல்லாது; எல்லாம் இறைவனது ஆடல். அவன் அருளே உனக்குக் கிடைத்திருப்பதால், எல்லா அண்டங்களுக்கும் நீ உன் சேனையோடு சென்று, உன் ஆணையை ஆண்டாண்டு நிறுவித் திக்கு விஜயஞ் செய்து வந்து, உன் அரசினை ஆள வேண்டும்,'' என்று கூறினன்.

இவ்வாறு கூறிய சுக்கிரன் தீய உரையைச் சூரபன்மன் நல்லுரையாகக்கொண்டு, தனக்கு ஈசன் உதவிய அண்டப் பகுதியின் நிலைமையினைக் கூற வேண்டும் என்று அக்குரவனை வேண்ட, அவன் அவ்வண்டப் பகுதிகளை விவரமாக எடுத்துக் கூறி, "நீயே சென்று நேரில் கண்டு தெரிந்துகொள்,'' என்று சொல்ல, சூரபன்மன் மிக மகிழ்ந்து, குருவின் தாள் தொழுது, சிங்கமுகனுடன் விடை கொண்டு, வெளியே ஏகி, சேனைக்குட் புகுந்தான். சேனையைக் காத்திருந்த இளவலாகிய தாரகன் அவனை அணுகி, அடி பணிந்து நிற்க, அவன் ஆசானிடம் நிகழ்ந்தவற்றைத் தாரகனுக்குக் கூறினான். அவனும், அப்படியாயின் அப்பொழுதே தம் படையொடு புறப்படுதல் நலமென்றிசைத்திருக்கையில், சூராதியருக்குத் தாயாகிய மாயை வந்து, ஆசி கூறி, "நீவிர் எப்பொழுது நினைப்பினும் யான் அக்கணமே வந்து நுமக்கருள் புரிவேன். நீவிர் தேவர் முதலியரை வென்று நெடுங்காலம் அரசு செய்க. யான் அடிக்கடி வந்து உம்மைக் கண்டு செல்லுவேன்,'' என்று கூறி, வணங்கி நின்ற புதல்வரிடம் விடை பெற்றேகினாள்.

அதன் பின் சூரன், அவுண சேனையை அழைத்து, "நாம் குபேரன் நகரினுக்குச் செல்லப் பறையறையுங்கள்,'' என்றனன். அவர் அவ்வாறே அறைந்து உணர்த்த, ஊழிக் காலத்துக் கடல் போலச் சேனை வெள்ளம் புறப்பட்டுச் சென்று, அளகையைச் சூழ்ந்து நிற்கச் சூரன் குபேரனுக்குத் தூது போக்கினான். தூதனால் அவன் வரவை அறிந்த அளகேசன், "இவன் வலிக்கு நாம் ஆற்றலிலோம்!'' என்று பணிவுடன்

போந்து சூரனை வணங்கி நிற்க, அவ்வசுரேசன் மகிழ்வடைந்தான். அவனது சேனை, குபேரன் நகரத்துள்ள அரும்பொருள் களையெல்லாம் கொள்ளையிட்டுக் கவர்ந்து போயிற்று.

பிறகு கிழக்குத் திசைக்கு இறைவனாகிய இந்திரனை நாடிச் செல்லுங்கால், இந்திரன், சூரன் படையொடு வருதலை உணர்ந்து, அஞ்சியோடிப் பதுங்கினான். சூரன் அதை அறிந்து, அவனது நகரத்தைத் தீக்கிரையாக்கி, அடுத்த திசையிலிருக்கும் அக்கினியை எதிர்க்க, அவன் கடுங்கோபம் கொண்டு, சூரன் படைகளையெல்லாம் நாசமாக்கி நின்றதையறிந்த தாரகன், சிவபெருமான் படையாகிய பாசுபதாஸ்திரத்தை எடுத்துப் பிர யோகிக்க முயலலும், அஃதறிந்த தீக்கடவுள், "இக்கணைக்கு எதிராக வேறொரு கணையுமில்லை! விரைவில் இஃது அகில லோகங்களையும் நம்மையும் முடிக்கும்!" என்று அச்சங் கொண்டு, தன் மேனியைச் சுருக்கிக்கொண்டு, தாரகனிடஞ் சென்று, பணிந்து நின்றான்.

அஞ்சிப் பணிந்து நின்ற தீயின் இறையை நோக்கிய தாரகன் அவனிடம் இரக்கங்கொள்ள, அவனது சேனை, தீக்கடவுளின் நகரத்துள்ள பொருள்களை வாரிக்கொண்டு சென்றது.

பிறகு சூரன், தன் படையொடு தென்திசைக்கிறைவனாகிய நமனுலகிற்செல்ல, அஃதறிந்த தருமன், "சிவபெருமானிடம் பெறுதற்கரிய வரங்களைப் பெற்றுள்ள இவனை நாம் எதிர்த்தல் கூடாது," என்று சூரனெதிரில் வந்து பணிந்து நிற்க, சூரன், "நீ உன் உத்தியோகத்தைப் புரிந்து வரக்கடவை," என்றனன். தானவர், நடுவன் நகரியின்கண்ணுள்ள பொருள்களைக் கவர்ந்து சென்றனர்.

பின்னர்ச் சூரன் நிருதி முதலிய திக்குப்பாலகர் திசைகளிற்சென்று வெற்றி கொண்டு, பாதாளத்திற்சென்று சேடனை வென்று, திருமால் யோக நித்திரை செய்யும் பாற்கடலிற் சென்று அத்துயிலைக் கலைக்க, அத்திருமால் கடுஞ்சினங் கொண்டு, தானவர் குழுவையெல்லாம் நாசப்படுத்தினன். அதனைக்கண்ட தாரகன், திருமாலுடன் எதிர்த்துப் பன்னிரண்டு ஆண்டு போர் புரிதலும், திருமால் தன் சக்கராயுதத்தைத் தாரகாசுரன்மீது ஏவ, அது தாரகன் கழுத்தில் பூமாலை

யாய் விழுந்து தங்கிற்று. அது கண்ட திருமால், "இனி இவர்களை வெல்லுதல் அருமை!" என்றுணர்ந்து, அவனை அணுகிச் சென்று நின்று, "தாரகனே, நீ உன் முன்னவரோடு சுகமாக வாழக்கடவாய். உன்னை வெல்லுவார் இவ்வுலகத்து ஒருவருமில்லை," என்று வாழ்த்தித் திரும்பினன்.

அதன் பின்னர்ச் சூரன் நான்முகத்தோன் உலகத்துச் செல்ல, பிரமனறிந்து மனங்கலங்கிச் சூரனெதிரில் சென்று, "நீ இவ்விடம் வருதற்கு யான் முன் தவமுடையேன்!" என்று புறவுபசாரங் கூறி, "உன்னைப் பெற்ற காசிப முனிவனுக்கு யான் பிதாவாகையால், நினக்கு யான் பாட்டனுவேன்; வேறு அல்லேன்," என்று கூறி, அவன் இளைஞருக்குத் தெய்வப் படைகள், வில், தேர் முதலிய உதவி, நல்லுரை விளம்பி, விடை பெற்று மீண்டான்.

பிறகு அவன் வைகுந்தத்தை அடைந்து, திருமாலினுல் உபசரிக்கப்பட்டுச் சிவலோகமடைந்து, சேனையைப் புறத்தே நிறுவி, நந்தியம்பெருமான் ஆணையால் உட்சென்று, தம்பியரோடும் சிவபெருமானை வணங்கி நிற்கச் சிவபெருமான், "மற்றைய அண்டங்களையும் நீ வெற்றி கொண்டு ஆளக்கடவாய்," என, அவ்வாசியைப் பெற்று, வணங்கிச் சேனையுடன் சென்று, வயிரவக் கணங்களைத் தரிசிக்க, அவர்கள் மற்றைய அண்டங்களுக்குச் செல்லும் வாயில்களைக் காட்டினுர்கள்.

அவ்வாயிலின் வழியே சூரன், படைஞரோடு அடுத்த அண்டத்துச் சென்று, எல்லாரையும் இது போல வெற்றி கொண்டு, மற்றைய அண்டங்களுக்கும் சிவகணங்கள் வழி காட்டச்சென்று, அங்குள்ள தேவரைவென்று, வளங்களைக் கவர்ந்து, தன்னொடு சார்ந்த அசுரரை ஆங்காங்குத் தனது ஆணை செலுத்த அரசராக நியமித்து, அவ்வகையே எல்லையில்லா அண்டந்தோறும் தமராகியுள்ள அவுணர்களை வேந்தர்களாக்கித் துணைவரோடு மீண்டு, அண்டப்பித்திகையுட்சென்று, பெறுதற்கரிய துறக்க நாடுற்றுன்.

விண்ணுலகடைந்த சூரன் செயலைத் தூதர்களால் கேள்வியுற்ற அவுணர் தலைவன், தன் குருவாகிய சுக்கிரனை அழைத்து,

சூரனைக்காணும்படி முன்னர்ச் செலுத்திப் பின்பு, தான் தன் பரிசனங்களோடு சென்றான். முன்னர்ச்சென்ற சுக்கிரன், சூரபன்மன் முதலியவரால் உபசரிக்கப்பட்டுச் சூரனை நோக்கி, "அங்கு வருகின்றவன் அவுணர்களுக்குத் தலைவன்; உன் தாயாகிய மாயையைப் பெற்றவன்; நெடுங்காலம் இந்திரனுடன் போர் புரிந்து, அவனால் நைந்து ஒடுங்கியுள்ளவன்; நின் தவத்தையும், ஈசன் உங்களுக்குத் தந்த வரம் உரம் முதலியவைகளையுங் கேட்டு, ஆரா மகிழ்வோடு நின்னைக் காண வருகின்றான்," என்றான். அவனும் அது பொழுது அணுக வந்தனன்.

சமீபத்தில் வந்தெய்திய பாட்டனைச் சூரபன்மன் உபசரித்து, ஆளவளாவி விடை பெற்று, பூவுலகில் வந்து சேர்ந்தான். அவன் வருகையைக் கண்ட பிரமன் முதலிய தேவர்கள், அச்சமடைந்து, இனித் தாங்கள் செய்வதென்னை என்று தேர்ந்து, பாற்கடலில் துயிலுறும் திருமாலை அடைந்து, தங்கள் இன்னலதனை எடுத்துக் கூறினார்கள். அவர்கள் மொழிகேட்ட திருமால், "அற்பனாகிய தக்கன் யாகத்திற்கு யாஞ்சென்று சிவாபராதத்தைப் பெற்றுளேம். ஆகலான், அது நம்மை வருத்தியே விடுவதல்லது, வாளா கழியாது. சூரனோ, அனேக அண்டங்களை வெற்றியடைந்து வருகிறான்; அவனை யாம் எதிர்த்தல் கூடாது. யாம் அவன் அருகே சென்று, அவனது நட்பைக் கொண்டே வாழ வேண்டும்," என்று கூறி, வந்த பிரமன் இந்திரன் முதலிய தேவரை அழைத்துச் சென்று சூரனை அடைந்து, ஆசி கூறி நிற்ப, அக்குழுவினில் சிவரூபமடைந்த உருத்திர கணங்களிருக்க, அவர்களைக் கண்ட சூரன், அவர்கள் யாவரென்று வினவ, திருமால், அக்கணங்களின் வரலாற்றைக் கூறத் தொடங்கினான் :

"மன்னர் மன்னனாகிய சூரபன்மனே, கேட்பாயாக: முன்னொரு கற்பத்தில் மூவுலகங்களையும் அனைத்துயிரையும் சிருட்டித்துப் பிரமன் தானே முதல்வனென அயர்ச்சியடைந்து, முழுமுதலாகிய சிவபெருமானை மறந்ததனால், பின்னர் அவனது சிருட்டிமல்காதிருந்தது. மலரவன் அதனைத்தெரிந்து, அதற்குக் காரணம் என்னை என்று ஆராய்ந்து, 'எந்தையை மறந்தேனல்லவா?' என்று தெளிந்து, அப்பரசிவத்தினை நோக்கி அருந்தவ

முனேற்றினன். நெடுநாளாகியும் சிவபெருமான் அருளாமையால், பிரமன் பெருந்துயர்கொண்டு, பேதையர் போன்று கண்ணீர் விட்டழுதலோடும், அக்கண் துளி விழுந்த இடமெல்லாம் அலகைக்கூட்டம் மல்கிற்று. அதனால், அவன் கடுந்துன்ப மெய்தி, கிழே விழுந்து, அவசமாகி மாண்டனன் போன்றிருக்க, அது போழ்து, அனைத்துயிர்க்குயிராகிய இறைவன், கனவிடை நண்ணி, "நீ கவலல்! நின்னை நீ பரமென்று மதித்தனை; ஆதலால், இத்துயர் எய்தினாய்; ஆயினும், நம் பக்கலில் உள்ளவரை அனுப்பி உன் தொழிலை உணர்த்துவிக்கின்றோம்," என்றருளினான். பிரமன் உறக்கம் நீத்தெழுந்து, விம்மிதமடைந்து, மனந்தெளிந்து, தியானத்தில் இருத்தலும், அவனது நெற்றித் தலத்தில் பதினொருவர் உருத்திரர் தோன்றி நின்றனர். அவன் அவர்களை நோக்கி, "என் நெற்றியினின்று நீங்கள் வந்த தென்னை?" என்று வினவ, அவ்வுருத்திரர், "நின் சிருஷ்டித் தொழிலைச் செய்ய நின்பால் ஈசன் எம்மை விடுத்தனன்," என்ன, பிரமன், "அங்ஙனமாயின் சிருஷ்டித் தொழிலைச் செய்யுங்கள்," என, அவர்கள், பதினொரு கோடி உருத்திரரைப் படைத்தார்கள். அவர்களைக் கண்ட பிரமன், "வினைக்கீடாக உயிர்களைத் தருதலன்றி, இவ்வாறு செய்தல் நெறியன்று," என, அவர்கள், "இவ்வண்ணமே நினது தொழிலியற்றுவாய்," என்று கூறிப் பிரமனைத் தெளிவடையச் செய்து, இந்தச் சிவ சாரூபமுள்ள கணங்களைத் தேவர் கூட்டத்துளிருத்திப் பரமனால் தங்களுக்குத் தரப்பட்டுள்ள பழைய புவனங்களிற் சென்றார்கள்."

## 6. நகர் செய் படலம்

திருமால் இங்ஙனம் உரைக்கக் கேட்ட சூரபன்மன், அருகில் நின்ற தேவகம்மியனைத் தான் அரசியற்றி இனிதே உறைதற்குரிய ஒப்பற்ற நகரமொன்றினை விரைவிற்செய்யப் பணித்தான். தேவதச்சன் அவனை வணங்கி, அந்நகரினுக்கு எல்லை உரைத்தால் அப்பொழுதே செய்து முடிப்பதாகக் கூற, அடுத்திருந்த குரவனாகிய சுக்கிரன், நூன்முறைப்படியே நகரின் எல்லையும் ஏனையவும் அறிவிக்க, அப்பொழுதே அவன் தென் சமுத்திரக் கரையை அடைந்தான். அவன் தென்சமுத்திரத்தின்

மத்தியில் பதினெண்ணாயிர யோசனை பரப்புள்ளதாகக்கோலி, முன்னவன் அரசியற்றி வைகுதற்கு இடமாக்கினான்; செம் பொன் மதிலியற்றி, வாயில் அமைத்து, ஞாயிலும் வகுத்தான்; நாற்பெரு வாயிலூடு மேருவொத்த கோபுரங்களை மணி வெயி லெறிப்பச் செய்தான்; சிற்பநூற்றுறைப்படி நூறு யோசனைப் பகுதிப்பட மாடவீதிகள் பற்பல இயற்றினான்; முப்புர மொன்று இயைந்தாற்போன்று, மூன்று மதில்கள் அவற்றுள் இட்டு, ஒப்பற்ற திரு மிகுந்த வீதிகள் அளவிலவாகப் புரிந்தான்; சோமனது வைப்பெனும்படி செம்பொன் மாடங்கள் வரம்பில வாக வகுத்தான்; மாதர் மெய்ப்படும் ஆடல்கள் இயலிடம் பல இயற்றினான்; மாளிகைதோறும் திண்ணை, மண்டபம், மணி குயிற்றிய முன்றில், சிங்கங்கள் கட்டிய கோபுரம், செய்குன்று, அம்பொற்சூளிகை, நடன சாலை, அவைக்களம், மேற்றலம், சாளரம், சோலை, வாவி இவைகள் அழகு பெற அமைத்தான்; இவற்றின் இடையில் பதினாயிரம் யோசனைப் பரப்பில் நெடு மதில் அமைத்தான். இவ்வளவு அமைப்புகளுடன் சூரன் வதிவதற்கு ஆங்கொரு கோயிலை அழகு பெற இயற்றினான்; அதன் சார்பில் ரதகஜ துரகங்கள் போதற்குரிய தோரண வாயில்களிற்றொடர்ந்த திண்ணைகள், சிறப்பமைந்த பொற் சிகரங்கள் அமைத்த கோபுரங்கள், மேகமண்டலத்தை உராயும் படியான அழகிய மணி குயிற்றிய கட்டு மலைகள், யானைக்கூடம், புரவி பயிலிடம், சேனைகள் உறைவிடம், தேர்கள் வைகுமிடம், அசுரத் தலைவர் சாருமிடம், மற்றையரக்கர்களிருக்குமிடம், அரம்பையர் நாடகமியற்றுஞ் சபா மண்டபம், பாடலிசைக்கும் பைம்பொன் மண்டபம், யாழ் பயிலும் வயிரமண்டபம், மயில் புறவு அன்னம் முதலியவை குலவுமண்டபம், சந்ததமும் மறை யொலி தழங்கும் மண்டபம், வேள்வி முயலும் மண்டபம், மந்திர இயல்பினோர் சேரும் மண்டபம், இந்திரன் முதலினோர் இருக்கும் மண்டபம், திரு மிகுந்த நிருதர்க்கிறை தேவர்கள் போற்றி நிற்க அரசு புரியும் ஆஸ்தான மண்டபம், பொருள் குவிக்கும் பொக்கிஷ மண்டபம், பரன்றருளிய படைக்கலங்கள் பயிலும் மண்டபம், அடிசிலாக்கு மண்டபம், கஸ்தூரி, புழுகு, சந்தனம், அகில், வெற்றிலை, பாக்கு முதலிய நிறைந்திடும் எழில் கொள் மண்டபம், மங்கையர் பலர் மருவும் மண்டபம், அன்

ஞர் ஊசல் மண்டபம், நிலா உமிழ் பளிங்கு மண்டபம், வானுயர் சந்திரகாந்த மண்டபம், மணி இமைக்கும் வசந்த மண்டபம், பவள மண்டபம், மரகத மண்டபம், தாமரை முத்தாலாகிய மண்டபம் ஆக இவ்வண்ணம் நகர் முறைமைக்கேற்றன யாவையும் படைத்து, அவற்றிற்கிடையே சூரபன்மனும் அவன் பட்டமகிஷியும் பொருந்தி உறைவதற்கோர் உறையுள் இயற்றி, அதனைச் சூழ எண்ணிலாத மங்கலம் நிறைந்த மாடவீதிகள் அவன் மனைவியராகிய நங்கையர் வதிய நலத்தொடு நல்கி, நீலமும், குமுதமும், கமலமுஞ் செறிந்த வாவிகள், ஓடைகள், பொய்கைகள், விண்ணுலாவும் பூவியற்சோலைகள், பொன் குன்றுகள் முதலிய யாவையும் முறைப்படி செய்து வைத்தனன்.

நிரைகடலை அகழாக வைத்து உள்ளமைத்த அந்நகரில் உறையுங் கோயிலில் தழைத்த பொன்னின் சுடரால் மேலுள்ள பொன்னகர், வெள்ளியாய் மழுங்கிற்று. இன்னவும் ஏனவுமாகிய எண்ணிகந்த பொருள்களை மனத்தானுன்னி இயற்றித் தன்னிகரில்லாத் தலைவனாகிய சூரபன்மன் வீரத்தோடு அரசு புரிதற்கு அமைந்த நகரமாதலின், அந்நகரினுக்கு **வீரமகேந்திர புரி** என்னும் நாமம் வழங்கப் பெற்றது. அதன் எட்டுத்திசையிலும் எட்டு நகரங்களை உண்டாக்கி, அவ்வீர மகேந்திரத்தையொப்ப வடகடலிடையே சிங்கமுகாசுரன் இருந்தரசு செலுத்த **ஆசுர புரம்** என்னும் நாமத்தொடு ஒரு நகரமியற்றி அளித்தான். மேலும், மற்றைக் கடல்களிலுள்ள தீவுதோறும், சூரன் படைஞர் சுற்றமொடு வாழ நகர் பலவமைத்து, அப்பாலேகி, நீண்ட மேருகிரிக்குத் தென்பால் நாவலந்தீவினிற்கூடிய ஏமகூடம் பக்கலிற்சென்று, **மாயாபுரம்** என்னும் ஒரு நகரினைச்செய்து, சூரன் இளவலாகிய தாரகாசுரன் அரசு செலுத்தும் நகராக்கிச் சென்று, சூரனுக்கு உரைத்தலும், சூரபன்மன் உவந்து, சேனையோடு ஏகித் தன்னகரை அடைந்தான்.

## 7. பட்டாபிடேகப் படலம்

வீர மகேந்திரபுரியை எய்திய சூரன், அந்நகர் வளம் முழுமையும் நோக்கி, மகிழ்வடைந்து, தன் கோயிலை எய்தினன். அப்பொழுது நான்முகன் முதலியவர் சூரனாகிய அண்ணலுக்கு

முடி புனைய வேண்டும் பொருள்கள் யாவையும் வைத்து, உயர்ந்தோர் ஆசனத்துச் சூரனை அமர்த்திப் புண்ணிய தீர்த்தங்களால் அபிடேகம் செய்தார்கள். அழகிய பொன்னுடையும், அணிகலன் பலவும் உடுத்தணிந்து, மலர் சூடித் தன்னினைஞர் பக்கலில் வர, நிருதர் போற்ற, புகரும் முனிவரும் புகழ, விண்ணவர் நடுங்கி நாணிப்போற்ற, மனந் தளர்ந்து மகபதி பின் செலச்சென்று, சூரபன்மன் சீயந்தாங்கிய செம்மணித் தவிசின் மேல் ஏறி வீற்றிருந்தான்.

அவ்வெல்லையில் அரிக்குத் தருமென்றுரைக்கத் தருந்த உரும்பெறல் முடியை நான்முகன் ஏந்திச் சூட்டினன். தானவர் அன்புடன் அடியில் வீழ்ந்து பணிந்து, அளவிலா மகிழ்வெய்தினர். தேவரும் முனிவரும் ஆசி கூறிப் பூமழை பொழிந்தனர். சூரன் தனது தவிசின் பக்கத்தில் திருமால், பிரமன் ஆகிய இருவரையும் இருத்தினன். அவன் ஏவலின் முறையால் இந்திரன் தாம்பூலப் படிகமும், குபேரன் அடைப்பையும், வாயு கவரியும், நிருதர்க்கிறை உடை வாளும் கொள்ள, பரிதியும் மதியும் குடை நிழற்ற, வருணனும் மகாரும் ஆலவட்டம் வீச, கருட கந்தருவர் சித்தர் முதலிய குழுவினர் கான யாழ் இசைப்ப, நடுவனும் கனலனும் கையிற் பிரம்பேந்தி, யாவரும் ஒதுங்க எரி விழித்து இடி போலார்த்துக் குழுவினை வரிசையில் நிறுத்திச் சூரபன்மன் புகழினைப் பரவி நிற்ப, தேவகுரு, அசுரகுரு, முனிவர் ஆகிய முதியார் புண்ணியப் புனல் தெறித்து ஆசி கூறி நிற்க, அரம்பை முதலிய அரமகளிர் பாடலோடு நடனம் புரியப் பெருமிதத்தொடு, அவ்வரத்தாற்பெரியான் ஆண்டுத் திருவொடு அமர்ந்தனன்.

பின்னர் அவன் தன் மருங்கமர்ந்த திருமாலை நோக்கி, "நீ என் பிதாவுக்குப் பாட்டனாகியபடியால், யான் விரும்பி அழைக்கும் போதெல்லாம் இங்கு வரவேண்டும்," என்றான்; அருக்கனைக் கோபுரச் சாளர வாயில் வழியே நுழைந்து இளங்கதிர் பரப்பித் திரிதல் வேண்டும் என்றும், மதியினைக் குறைதலும் வளர்தலுமின்றி என்றும் பரிதி போல வர வேண்டும் என்றும், தீயினைத் தன் மூதூருள்ளார் யாவரே எனினும் நினைப்பின், அவர்பாலேகி இட்ட பணியைப் புரிந்து

குளிர்ந்திருத்தல் வேண்டும் என்றும், காலனைத் தன் யானைகளையும் குதிரைகளையும் காலாட்களையும் கொல்லக் கனவிலும் கருதாது இருத்தல் வேண்டும் என்றும், வாசவனைத் தேவருடனும், திசைகாப்பாளருடனும், அருந்தவருடனும் வந்து, சொல்லிய பணிகளாற்றிப் பிழையாமற் போதல் வேண்டும் என்றும் மொழிந்தான். பலவாறாக அவன் அனைவருக்கும் ஆணையிட, அன்னார் நடுநடுங்கி, அச்சத்தோடு அவ்வண்ணமே ஒழுகி வர அரசு புரியுங்கால், கடிமணம் முடிக்கக் கருத்துடையனாயினான்.

அவன் கருத்தறிந்த சுக்கிரன், தேவகம்பியன் புதல்வியாகிய பதுமகோமளையை விதி முறை மணம் புணரச்செய்தான். பின் சூரன், தேவர் அசுரர் முதலியவர் ஈன்ற குலமகளிரை மண முடித்துக் கூடி இன்பம் நுகர்ந்திருந்தான். சிங்கமுகாசுரனுக்கு அந்தகன் குமரி விபுதையையும், தாரகாசுரனுக்கு நிருதி மகள் சவுரியையும் மணம் பேசி முடித்தான். இவ்வண்ணம் மணம் முடிந்த பிறகு, இளைஞரைப் பார்த்து, "நீங்கள் உங்களுக்கியன்ற மூதூரின் ஏகி, இரண்டு கோடி வெள்ளம் படையொடும் இருங்கள்," என்று விடையளித்தான்; படைத்தலைவருட்சிலரை, "நீங்கள் கடல்தோறும் உள்ள தீவுகளில் அமைத்த நகரங்களில் இரண்டு கோடி வெள்ளம் படையொடும் மேவுங்கள்," என்று விடையளித்தனுப்பினான்.

பிறகு எட்டுத் திசைகளிலும், வானேழ் உலகிலும், பாதலங்கள் யாவினும், ஒழிந்த இடங்களிலும் தனது ஆணை செல்ல அளவிறந்த வீரர்களை ஆறு கோடி அனிகத்தொடும் அனுப்பினான். அப்பால் யானை முகங்கொண்ட வீரனை முதலிட்ட எண்மராகிய தலைவர்களுக்கும் மகேந்திரபுரியைச் சூழ்ந்த எட்டு நகரங்களைக் கொடுத்துப் பதினாயிர வெள்ளம் சேனையுடன் தன்னகரைக் காக்கச் செய்து, மகேந்திரபுரத்து இலக்கம் வெள்ளம் சேனையை வைத்து, ஆங்காங்குக் காவல் புரியும்படி ஆணையிட்டுத் துர்க்குணன், தருமகோபன், துன்முகன், சங்கபாலன், வக்கிரபாலன், மகிடன் முதலாயினாரை அமைச்சராகக் கொண்டு, வானவர் போற்ற வளத்துடன் வீற்றிருந்து, ஆணை செலுத்தினான்.

## 8. தேவரை ஏவல் கொள் படலம்

இவ்வண்ணம் அரசு செய்யும் நாட்களில், இந்திரன் முதலியோர் தத்தமக்கிட்ட பணிகளைச் சூரபன்மனிடத்தும் அவன் கிளைஞரிடத்தும் வழுவாது செய்து வருங்கால் ஒரு நாள், சூரன், இந்திரன் முதலிய தேவரை விளித்தழைத்து, "நீங்கள் தானவருக்குத் தம்பியர் அன்றோ? ஆதலால், அவர் பணி உம் பணி. நீங்கள் அவர் உண்ணும்பொருட்டுத் திரைகடலிலுள்ள மீன்களைப் பிடித்துக்கொண்டு வாருங்கள்," என்று உத்தரவிட்டான். அப்பாற்றைக் கேட்ட இந்திராதியர், இனித் தாம் செய்யக்கிடந்த தென்னையோ என அஞ்சி, உள் நடுங்கி, உத்தரவின் வண்ணமே செய்வதாகக் கூறிக் கடலினை நோக்கிக் கலங்கி அழுது நின்று, அக்கடலினுக்கிறைவனாகிய வருணனை வேண்டினர். வருணன் இந்திராதியர் பரிபவத்தினை ஓர்ந்து, திமிங்கிலம் முதலாகிய பெருமீன்களை வலைபாற்றடவிப் பிடித்துக் கரையிற் கொணர்ந்து மலை போலக் குவித்தனன். அம்மீனின் குவியலை நோக்கிய இந்திரன், தேவர்களை நோக்கி, "உமது ஆற்றலினால் இவற்றைச் சுமந்து செல்லல் உங்களுக்குக் கடன்," என்று மொழிய, அவரெல்லாரும் நடுக்கத்துடன் உளம் பதைப்ப, விழி பனிப்ப, தங்களைத் தொகுத்து, நாணமடைந்து, அம்மீன் குவியலைச் சுமந்து, அவுணர் பரிகசிக்கப் புலம்பிச் சென்று, சூரன் கோயிலின் காவல் போற்றும் அசுரர் உத்தரவு பெற்று, உள்ளே புகுந்து, அதற்குரிய இடத்தினில் குவித்தனர். அதனை அறிந்த சூரன், "இந்திரனை முதலிட்ட தேவர்காள், உங்கள் திறம் நன்று! நித்தலும் இவ்விதமே கொண்டு வந்து குவிக்கக் கடவீர்கள்," என்ன, அத்தேவர், அவ்வாறே செய்வதாக மொழிந்து ஏகினர்.

ஏகிய வானவர், வேத ஒழுக்கத்திற்குப் பதிலாக மீன் பிடித்து உய்த்தலாகிய புன்றொழிலிலே நின்று துன்பம் உழந்திருந்தனர். இது நிற்க. சூரன் ஆற்றிய தவத்தின் சீரினால், பதுமகோமளை என்னும் பாவை வயிற்றில் மதிக்குழவி போலும் பொற்பு வாய்ந்து, மறலிக்கும் மறலி போலும் ஒரு மதலை உதித்தான். அந்த மதலையை மன்னர் மன்னன் கண்டு, முடிவற்ற மகிழ்ச்சியுடையனாய்த் தன் கிளைஞராயினர்க்கு அம்பொன்

அளவின்றி அளித்தான். பிறகு வானவர் மகளிர், அவுணர் மாதர் ஆகியவர் ஆசி கூறி அம்மைந்தனைக் கொண்டு சென்று, வயிர முத்தம் கதிர் காலும் பொன்னந்தொட்டிலிற்சேர்த்தனர். அம்மைந்தன் மதிக்குழவி போல மெல்ல மெல்ல வளர்வானாயி னன். அவ்வாறு வளரும்கால், ஒரு பகல் தொட்டிலில் ஆடும் போது, சாளர வழியாகச் சூரிய கிரணம் தன்மேல் தீண்டு தலும், அம்மதலை மிக்க கோபமுடையனாய்ப் பரிதிமேற் பாய்ந்து அவனைப் பிடித்துத் தன் தொட்டில் காலில் கட்டி வைத்தான். சின்னாள் கழிந்தும், பரிதியை விடாமையால், பிரமன் முதலியவர் அருக்கனில்லாக் குறையை நினைந்து, அத னைச் சூரனிடஞ் சென்று விண்ணப்பித்துச் சிறை விட வேண்டி னர். சூரன், அவர்களைத் தன் மைந்தனிடமே சென்று நல் லுரை உரைத்துப் பரிதியை அழைத்துச் செல்லுமாறு கூறி னன். பிரமன் நன்றென உரைத்துத் தேவரோடு சென்று, பொன்னாட்டின் மேனகை முதலியவர் பாடலின் காத்தால் ஆடும் தொட்டிலின் மேவும் அண்ணலருகே சென்று, அளவிலா ஆசிகள் புகன்றான். அவ்வாசிகள் கேட்ட மைந்தன், "நீ வேண்டுவது என்னை?" என, பிரமன், "பரிதியைச் சிறையி னின்றும் விட வேண்டும்," என்றான். அக்காலை, "நினது படையினைத் தருவையேல் விடல் ஆகும்," என்றான். அவ்வாறே பிரமன் தன் படையைக் கொடுத்துப் பரிதியை மீட்டனன்.

விடுபட்ட இரவியும், அக்குழவியின் திறத்தை மெச்சித் தன் மோகனப் படையைக் கொடுத்தான். அதனைப் பெற்ற சூரன் காளை, அப்பிரமனுதியர்க்கு விடையளித்தான்.

பாநுவைக் கோபித்தமையால், பானு கோபன் என்று வழங்கப்பட்ட அவன், மாதர் மயங்கும் வனப்புடையனாய்க் காளைப் பருவமடைந்து, அதன் பின் திருமாலையும் போரில் வென்றிருந்தான். சில பகல் கழிந்ததும் பதுமகோமளை, அக் கினி முகன், இரணியன், வச்சிர வாகு என்னும் புதல்வர்களைப் பெறவும், மற்றைத் தேவியர் மூவாயிரம் மக்களைப் பெறவும், சூரபன்மன் மக்கட்பேற்றினால் களித்திருந்தான். இவ்வலா கிய சிங்கமுகன், அதிசூரன் என்பவனையும், மற்றும் நூறு புதல்வர்களையும் பெற்று மகிழ்ந்திருந்தான். பின்னவனாகிய

தாரகாசுரனிடத்துக் குற்றமற்ற குணத்தினையுடைய ஒரு புதல்வன் தோன்ற, அவனுக்குச் சக்கிரன், அசுரேந்திரன் என்னும் பெயர் இட்டுத் தாரகன் உவகைக் கடலில் ஆழ்ந்திருந்தான்.

## 9. வில்வலன் வாதாவிப் படலம்

அம்மூவரோடு பிறந்தவளாகிய அஜமுகி என்பவள், ஒருவன் மனைவியென்னும் முறைமையின் அடங்காது, தன் மனஞ் சென்ற வழியே சென்று, கற்பிகந்து ஒழுகியும், வானவர் மனைவிகளைத் தன் முன்னவர்க்குக் கொண்டு வந்து கொடுத்தும், முனிவர் தவங்களை அழித்தும், கொடுந்தொழில் பலவியற்றி வருவாளாயினள். அத்தீயவள் ஒரு நாள் துருவாச முனிவன் உறையும் தவ வனஞ் சார்ந்து, அவனைக் கண்ணுற்று, "இவன் தவத்தைச் சிதைத்திலேயன்றி, இவனை அணைந்து புதல்வரையும் பெறுவேன்," எனக் கருதி, அம்முனிவனை அணுகினள். முனிவன், சூரனுக்கு அவள் பின்னவளென்றுணர்ந்து, "நங்கையே, நீ வேண்டுவதென்னை?" என்று கேட்க, அவள், "நின் தோள் தோய்வு," என்றாள். முனிவன் அதனைக் கேட்டுத் தன் தவக் கேட்டையும் பழியையும் அஞ்சி, அவள் கூறியதை மறுக்க, அஜமுகி கேளாதவளாகி, முனிவனை வலிந்து புல்லி, மக்களிருவரை ஈன்றாள்.

முனிவன் உருவத்தோடும், அவள் உருவத்தோடும் முறையே தோன்றிய அம்மக்கள், தாயுபதேசப்படி தந்தையாணுகி வணங்கி நிற்ப, முனிவன் அவர்கள் கருத்தினை வினவ, அவர்கள் அவன் தவம் முழுவதும் வேண்டும் என்றார்கள். முனிவன், "இஃது உங்களுக்குத் தக்கதன்று. வேறு பொருள் வேண்டினிராயின் தருவேன்," என்று கூற, பிதாவைச் சிறுவர் சினந்து, அவனை வதை புரியக் குறுகினர். அஃதுணர்ந்த முனிவன், "நீங்கள் வைகலும் முனிவர்க்கே இடரிழைத்துக் கடைமுறை ஆழ்புனலுண்ட குறுமுனியால் மாளக் கடவீர்கள்," என்று சபித்து, மறைந்தான். பிறகு வேறொரு வனமடைந்து, அத்தீயவர் பிரமனைக் குறித்துத் தவமியற்றப் பிரமன் வாராமையால், மூத்தவன், இளையவனாகிய வாதாவியை வாளால் வீசி, ஓமத்தீயிடை அவியாக இட்டுத் தவஞ் செய்தனன். அதன்

பின் பிரமன் தோன்றி, "நீ வேண்டுவதென்னை?" என்ன, வில்வலன், "என் தம்பியாகிய வாதாவி உயிர் பெற்று எழ விரும்புவேன்," என்றான். பிரமன் அவ்வாறே எழுப்பிக் கொடுக்க, வில்வலன், "இவ்வாறே இவன் உயிர் நீங்கி அழியினும், யான் அழைத்த அளவில் நிறைந்த உருவம் பெற்று வரவேண்டும்," என்றனன். பிரமன் அவ்வாறே நிகழுமென்று கூறி மறைந்தான். வரம் பெற்ற அச்சிறுவர் இருவரும் சூரனிடஞ்சென்று முறையைக் கூறித் தாம் பெற்ற வரத்தின் சிறப்புமெடுத்துரைத்து, அவனால் உபசரிக்கப்பட்டிருந்தனர். சில நாட்களான பின், மேற்றிசையிற்சென்று ஒரு வனத்தில் நான்கு வீதிகள் கூடும் இடத்தில் ஓர் ஆச்சிரமம் அமைத்து, அதில் எப்பொருளும் நிரம்ப வைத்து, அவ்வழியிற்செல்லும் முனிவரை உபசரித்து அழைத்து, முனியுருவாகிய வில்வலன், ஆட்டுருவுடைய வாதாவியைக் கொன்று சமைத்து, அம்முனிவரை அருத்திய பின்னர் வில்வலன், "வாதாவி வருக," என்றழைக்க, அவன் அம்முனிவர் வயிற்றைக் கிழித்துக்கொண்டுவர, இறந்த முனிவர் உடலை இருவரும் உண்டு களித்து, முனியும் ஆடுமாகி அங்கிருந்து, நாள்தோறும் இச்செயல் நடத்திப் பல முனிவரை ஒழித்து வந்தனர்.

## 10. இந்திரன் மறைந்துறை படலம்

இவ்வண்ணம் இருவரும், மற்றை அசுரரும், முனிவர், தேவர், மனிதர் ஆகியவரைத் துன்புறுத்த, மாயையின் மகனாகிய சூரபன்மன் அரசு புரிந்து வந்தான். அவன் தன்னிந்திரஞாலத் தேரினிலேறித் திருமால் முதலியவர் உலகங்களிலும், பாதலங்களிலும், ஏனைய அண்டங்களிலும் திரிந்து, விரைவில் மகேந்திர நகரடைந்து, அரசு வீற்றிருந்தான். அரசு புரியும் நாட்களில், இந்திரனைச் சிறையிலிட்டு அவன் தேவி புலோமசையை அபகரிக்க எண்ணங்கொண்டவனாய், அந்நியன் சில அவுணரை விளித்து, "நீங்கள் இந்திரனைப் பற்றி என் முன் கொண்டு வாருங்கள்," என்றும், வேறு சில படைத்தலைவரை அழைத்து, "நீங்கள் யதருடன் சென்று இந்திராணியைப் பிடித்து என்னிடம் கொண்டு வாருங்கள்," என்றும் கூறி ஏவினான்.

அப்படை வீரர் அளவிறந்த சேனையோடும் ஏகி, அமரர் கோன் நகரை அணுக, அஃதறிந்த தூதர் இந்திரனுக்கு அறிவிக்க, இந்திரன் அயிராணியோடும் மாயையால் மறைந்து, மண்ணுலகு எய்தினன். அவனை நாடிச் சென்ற படைத்தலைவரும், மந்திரரும், ஏனைய அவுணரும் இந்திரன் உறைவிடம் அனைத்தினுந் தேடியும் அவனையும் இந்திராணியையும் காணாது கவற்சி எய்தி, விண்ணவரைப் பிடித்து வருத்தியும், அவர் சென்ற இடம் அறிந்திலர். பின்னர் அவர்கள் மகேந்திர நகரம் அடைந்து, சூரபன்மனைப் பணிந்து, நிகழ்ந்தவற்றைக் கூறினார்கள். கேட்ட சூரன், பெருங்கோபங் கொண்டதுமன்றி, மணி இழந்த அரவுபோலப் பெருந்துயரம் எய்தி, ஒற்றரை விளித்து, "நீவிர் எங்கணுந் திரிந்து அவ்விருவர் உறைவிடந் தெரிந்து வந்து அறிவிப்புக்கள்," என ஏவினான். அவர் அவ்வாறே சென்று எங்குந் தேடியும் காணாதவராய்த் திரிந்துகொண்டிருந்தனர். இனி விண்ணுலகத்தில் நடந்தவற்றைக் கூறத்தொடங்குவோம்:

இந்திரன் மகனாகிய சயந்தன், தன் சிறிய தந்தையைக் காண வைகுந்த நகரினுக்குச் சென்றிருந்தான். அப்போது, அமராபதி அவுணரால் எய்திய கேட்டினைக் கேட்டு, இருந்து மறைந்த தன் தாய்தந்தையரின் துன்பத்தினை நினைக்கச் சகியாதவனாய், பெருந்துயர் உழந்து, விண்ணுலகடைந்து, அவுணரால் அலைக்கப்பட்ட அமரரைத் தேற்றி, தந்தையைப்போல அந்நகரினைக் காத்து வருங்கால், நாரதமுனிவன் அச்சயந்தனிடஞ் சேர்ந்தான். வேந்தன் புதல்வன் மிக்க மகிழ்வடைந்து, அம்முனிவனை உபசரித்துப் பணிந்து, தன் துயரனைத்தையுங் கூறி, அதன் பின் தன் பெற்றோர் செய்தியை வினவினான். நாரதன், அவனைத் தேற்றி, "உன் தந்தை அவுணர் அழிய அருந்தவம் புரிவான். நீ அஞ்சற்க," என்று கூறி, அங்கிருந்து அகன்றான். இது நிற்க.

சயந்தன் முனிவனைத் தெளிந்து மகிழ்வடைந்திருந்த பின்னர்த் தேவர்களைத் தேற்றியும், சூரனது ஏவல் புரிய விண்ணவரை அனுப்பியும், விண்ணுலகத்தில் தேவரோடிருந்தான். இனிப் பூமியிற்போந்த இந்திரன் செயல்களைச் சிறிது கவனிப்போம்:

திருவிழலை இழந்து தரணியிற்போந்த சதமகன், சோழநாட்டில் பன்னிரு திருநாமம் படைத்த **சீர்காழியை** நண்ணி, அத்தலத் இறைவனைப் பூசித்தற்கு ஏற்றதென்றுணர்ந்து, சந்தனம், அகில், பலா, மா, தேக்கு, அசோகு, புன்கு முதலியவற்றால் வேலி கோலி, ஜாதி, கோங்கு, நாகம், சண்பகம், இதழி, ஞாழல், பாதிரி, பாரிஜாதம், செருந்தி, நரந்தம், வில்வம், மௌவல், செவ்வந்தி, முல்லை இவை முதலாகிய மரங்களும் புதல்களும் வைத்தான். அவையெல்லாஞ் செவ்வனே மலர்கள் பூத்தன. அம்மலர்களை இந்திரன் வைகலும் கொண்டு உமாபதியாகிய சிவபெருமான் திருவடிகளில் அருச்சித்து, அத்தலத்தில் தன் தேவியோடும் உறைந்திருந்தான். அவ்வாறு உறையுங் காலத்துச் சூரபன்மனால் விடப்பட்ட தூதர், உலகெங்கும் தேடி அங்கு வருதலும், அதனை இந்திரன் அறிந்து, அவர் காணா வகை மூங்கில் வடிவங்கொண்டு தவமியற்றியிருந்தான். தூதுவர் அஃதறியாது சென்றனர். அக்காலத்தில் சூரபன்மன் ஆணையால் வானம் மழையின்றிப் பொய்க்க, இந்திரன் வைத்த நந்தனவனம் நீரின்றி வாட்டமடைய, சதமகன் மனம் நொந்து இறைவனை நினைந்து வருந்தினான். வருந்திய மகவான் கேட்க, "இந்த க்ஷேத்திரத்தில் ஒரு நதி வரப்போகிறது. நீ கவலையுற வேண்டா," என்று விண்ணிடையே ஓர் அசரீரி வாக்குண்டாயிற்று. அச்செம்மொழி கேட்ட மகவான், அது சிவபிரான் திருவருள் என மகிழ்ந்து, அப்பெருமானைப் போற்றி இருந்தான். அவ்வாறு இருக்கும் காலத்து, நாரதமுனிவன் விந்தகிரியை அடைந்து, மேரு மலையானது தனக்கு ஒருவரும் நிகரில்லை என்றெண்ணித் தருக்குடனிருக்கிறதென்று கூற, அந்நாரதன் மொழியினைக் கேட்ட விந்தகிரி, அனேக கோடி விஷ்ணுக்கள் மாயையால் நீண்டிருந்தது போலப் பரிதி மதிகளின் கதியை அடைத்துப் பிரமன் உலகளவும் சேண் வழிப்போய் நிமிர்ந்தது. அவ்விந்தத்தின் செயலினைக்கண்ட பரிதி முதலிய கிரகங்கள், அஃது அவுணர் மாயையோவென்று நினைத்துப் பரமனை உன்னி, ஞானத்தாலுணர்ந்து, அவ்விந்தம் அகத்திய முனிவன் தென்பாற்செல்லும்போது தருக்கொழிந்து தாழுமென்று எண்ணி, மேருமலைச்சாரலில் சிவபெருமானைக் குறித்துத் தவம் புரியும் **அகத்திய முனிவனிடம்** சென்றன.

## 11. அகத்தியப் படலம்

மேருவில் சாரலை எய்திய தேவர்கள், அகத்திய முனிவனை நோக்கித் துதித்துத் குறையினை மொழிந்து நின்றனர். அத்தேவர்கள் எய்திய இன்னலை அறிந்த முனிவன், "நீங்கள் அஞ்சாதீர்கள். நாரதன் மொழியினைக் கேட்டு வானை அடைந்து உயர்ந்திருக்கும் விந்தத்தை அடக்கி, உங்களுக்கு நெறியினைத் தருவேன்," என்று விளம்பி, அருளுருவாகிய சிவபெருமானை வேண்டி, விந்தமடக்கும் சக்தியைப் பெற்றனன். அதுவுமன்றிச் சிவபெருமான் குறுமுனிவனைப் பார்த்து, "நீ தென்திசையிற்சென்று பொதிகையில் வதிவாய்," என்றதும், கும்பமுனி வணங்கி உடன்பட்டு, "நினது பூசனை விடாது செய்தற்குத் தென்திசையின்கண் ஒரு புனித தீர்த்தம் அருளல் வேண்டும்," எனக் கேட்டனன். சிவபெருமான், திருக்கயிலாயத்தில் இனிதுவைகிய ஏழு நதிகளுள் புனிதமாகிய பொன்னி நதியை வருமாறு தன் திருவுளத்தெண்ணினன். அக்குறிப்பு அறிந்த காவிரி சென்று வணங்கி நிற்க, அமலன், அம்முனிவனோடும் தென் திசைக்கு ஏகுமாறு அதற்கு ஆணையிட, அவனருள் திறத்தை அறிந்த காவிரி, ஆறிய ஐம்புலமுடைய அம்முனிவன் குண்டிகையின்கண் புகுந்தது. அப்போது சிவபெருமான், அக்குண்டிகையோடும் தென்பால் ஏகும்படி முனிவனுக்கு அருள் புரிந்து மறைந்தருளினன். அப்பெருமானது அருளைப்பெற்ற அம்முனிவன், அவணின்று தென்திசை நோக்கிச் சென்றனன்.

## 12. கிரவுஞ்சப் படலம்

மேருவினின்றும் போந்த முனிவன், தென்திசை ஏகுந்தால், சிங்கமுகாசுரனுக்கு இளையனாகிய தாரகன் உறையும் மாயாபுரத்தை அடைய, அங்குற்ற மாயையில் வல்ல **கிரவுஞ்சன்** என்னும் அவுணன், அம்முனிவன் வருகையை உணர்ந்தான். அவ்வவுணனே, வானுலகை மண்ணுலகாக்குவன்; பூமியை விண்ணுலகாக்குவன்; கடலை மலையாக்குவன்; மலையைக் கடலாக்குவன்; பானுவை மதியாக்குவன்; மதியினைப் பரிதியாக்குவன்; அணுவை மேருவாக்குவன்; மேருவை அணுவாக்குவன்; வடவனலை நீராக்குவன்; நீரினைக் கனலாக்குவன்;

ஒரு நாழிகைப் பொழுதில் பதினாயிரத்தொரு கூற்றைத் தேவராயினும் முனிவராயினும் மயங்கிப் பன்னெடுங்காலமெய் அயர, மாயைகள் அளப்பில இயற்றுவான். அன்னான் வன்மையை அளந்தறிந்துரைப்பவர் யாவர்?

அத்தகைய அவுணன், குறுமுனிவன் செல்லும் வழியில், பல சிகரங்களோடும் ஓங்கி, விந்தகிரியைப் போல உருக்கொண்டு, தன்பால் வருவதற்குரிய ஒரு வழியினைக் காட்டிநின்றான். அக்குறுமுனிவன், அம்மலைக்கிடையே செல்லுவதற்குரிய ஒரு வழி உண்டாயிருக்கிறதென்று நினைத்து, அவ்வழியே ஒரு குரோச தூரஞ் சென்றதும் அந்நெறி மறைந்து, மற்றொரு வழி தோன்ற, அவ்வழியே செல்லுகையில் வழியில்லாமலிருக்க, முனிவன் திரும்பி முன்னுள்ள வழியையுங் காணாது மயங்கி, ஓரிடம் பின்னொரு வழி கண்டு, மனங் கலங்கிச் சென்றான். அவ்வாறு செல்லுகையில், நெருப்புச் சூழ்ந்து நெருங்கவும், சுழற்காற்று அலைக்கவும், மேகம் இடியிடித்து மழை பொழியவும், இருள் கவியவும் மாயைகள் பலவற்றை அவ்வவுணன் செய்து மயக்கினான். கவலையுற்ற அகத்திய முனிவன், அஃது இயற்கையோ, அன்றி அறிவிலார் மாயச் செயலோ என்று ஐயமுற்றுப் பின்னர் அவுணர் மாயையென்று தன் ஞானத்தாலுணர்ந்து, வெகுளி மூண்டு, நகைத்துத் தனது கைத்தண்டினால் புழைகள் படும்படி அம்மலையினைக் குத்தினான். பின்னர் அவன் அதைப் பார்த்து, "அறிவில்லாத தீயோய், உன் பழைய உருவம் நீங்கி மாயையாலாகிய இம்மலை வடிவாகவே இருந்து, தீய அவுணர்களுக்குத் துணையாகித் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் தீமைகள் பற்பலவியற்றி வருக. நமது கைத்தண்டத்தாலுண்டாகிய புழைகளெல்லாம் பல மாயங்களுக்கும் இருப்பிடமாகுக. அதன் பின் எம்பெருமான் உதவிய குமரவேளின் வேற்படையினால் இறுதி எய்துக," என்று சபித்துக் கமண்டலத்திலுள்ள நீரைத் தெளித்து, மாயையை நீக்கி, மீண்டுந் தென்றிசையேகும் வழியினை நாடிச்செல்வானாயினன்.

## 13. விந்தம் பிலம் புகு படலம்

கிரவுஞ்சனென்னும் அவுணன்; அன்று தொட்டு மலையுருவாயிருந்து மாயைகள் வல்ல பல அவுணர்களுக்கும் அரணமாய்

நின்றான். அப்பொழுதிறைவன், முருகனை நோக்கி, "என்னையாளும் பரமகுருவாகிய குமார மூர்த்தியே, நீயல்லது அன்னவனை அறிவார் வேறு யாவருளர்? தமிழ் முனிவன் இமயம் நீங்கிக் காசி நகரடைந்து, விசுவநாதன் கோயிலுட்புகுந்து, உமாபதியைத் தரிசித்துப் பன்முறை பணிந்து, பிரியா விடை பெற்று, பெருமிதமுள்ள விந்தகிரியின் ஒரு சார் ஏகி, அம்மலையினை நோக்கி, 'மிக்க உயர்வினையுடைய விண்ணளவும் ஓங்கியிருக்கும் விந்தமே, கேள்: யாம் பொதிய வெற்படைந்து இருக்கப் போந்தனம்: அதனுக்கு ஏக இப்பொழுது நீ ஒரு சிறிது வழியினை விடுவாய்,' என்றான். அக்குறுமுனிவன் மொழியினைக் கேட்ட செய்ய விந்தம், 'பரிதியும் மதியமும் படர்தலுக்கு அரியதாய் செய்ய மால் போல நிவந்து நின்ற யான், குறிய நினக்கஞ்சி வழியினைத் தருவனோ? ஏகு ஏகு!' என்றது.

அறிவிலாது அகந்தை கொண்ட அம்மலையின் மொழியினைக் கேட்ட முனிவன், சீறித் தன் தவத்திறலால் விண்ணளவும் தன் கையை நீட்டி, அம்மலையின் சிகரத்தில் வைத்து, வன்மையோடு அழுத்துதலும், அம்மலை ஆற்றாது பாதலத்தில் அழுந்தியது; அழுந்திய உடனே அறிவுகொண்டு அகத்தியனைத் துதித்து, "நின் பெருமையை ஓராது கெட்ட அடியேனுக்கு எழுச்சி எக்காலம்? அதனை அருள் புரிய வேண்டுகின்றேன்," எனலும், முனிவன், "யான் தென்பால் பொதியமேகிப் பின் வரும் இவ்விடை மீளின், அக்கால் நீயும் எழுதி," என்று சூழ்ச்சியின் நகைத்துரைத்துக் கையை முன்போலச் சுருக்கிக் கொள்ள, அம்முனிவனை அருக்கன் முதலிய தேவர்கள் துதித்து வணங்கி, "யாங்களியற்றும் எதிருதவி அறிந்திலோம்! ஆயினும், எங்கள்பொருட்டு நீவிர் பொதிகையில் இருந்தருளல் வேண்டும்," என, அவர்களைத் தத்தமிடத்திற்கேக விடுத்துத் தென்றிசை தொடர்ந்து செல்லுங்கால், மேற்றிசையிலிருந்த இல்வல வாதாவியர் அம்முனிவனது வருகையைக் கண்ணுற்றனர்.

கடல் குடித்த குறுமுனிவன் செல்லுகையைக் கண்ட அவ்விருவருள் வாதாவி என்பவன், ஆட்டுருவங் கொண்டு, மலைப் பக்கத்திலுள்ள ஒரு புதலில் மெல்லிய தழைகளை மேய்ந்

திருக்க, வில்வலன் என்பவன், அருந்தவம் முற்றிய சிவனடியார் உருக்கொண்டு, அகத்திய முனிவன் முன் சென்று பணிந்து, அன்பு காட்டித் தன்னில்லிற் போந்து நல்விருந்தாகுமாறு அம்முனிவனை வேண்டினன். அவனது வஞ்சமோராத முனிவன், அவ்வாறே உடம்பட்டு, அவனோடு இல்லிற்சேக, அவன் முறைப்படி உபசரித்து, நீரின் மூழ்கிப் புனிதமாயிருந்து, அறுசுவையுண்டியை அமைத்து, அதன் பின் அவ்வாட்டினைப் பிடித்துக் கொணர்ந்து, வாளால் இரு துணியாக்கிப் போர்வை நீக்கிக் காயங்களால் இனிய சுவைத்தாக்கி, முனிவனுக்குத் தாழ்மை கூறி, உபசரித்து அருத்தினன்.

அருந்திய பின்னர் ஒரிடத்து அமர்ந்த முனிவன் பக்கலில் அமர்ந்த வில்வலன், அம்முனிவனைக் கெடுக்க எண்ணி, வழக்கம் போல இளவலை நோக்கி, "வாதாவி, விரைந்து வருக," என்றலோடும், அவ்விளையான் ஆட்டுருக்கொண்டு முனிவன் வயிற்றில் சிங்கம்போல முழங்குதலும், முனிவன் அஃது அவுணர் மாயை என்றுணர்ந்து, "ஊன் கொண்ட கறியாகி உண்ட இயல்பே வாதாபி மாளக் கடவன்," என்று கூறித் தன் வயிற்றைத் தடவலும், அங்ஙனமே அத்தீயவன் சாம்பராய் ஒழிந்தான். அஃதறிந்த வில்வலன், முன்னையுருக்கொண்டு முனிவனை முனிந்து, தண்டேந்திச் சென்று, கொலைத் தொழில் முயலலும், குறுமுனிவன் தருப்பையைக் கிள்ளிப் பசுபதியின் கணையாக அருச்சித்து விட்டனன். அப்படை அவன் ஆவியை உண்ண, அகத்தியன் அக்கொடியார் உறைவிடம் நீத்து அப்பாற்போயினன்.

## 14. காவிரி நீங்கு படலம்

செங்கரத்தில் தூங்கிய குண்டிகை நீரொடு சென்ற குறுமுனிவன், கொங்கு நாடு நோக்கி ஏகுதலும், இறந்த துருவாச முனிவன் மைந்தராகிய வில்வலனும் வாதாவியும் கரிய மேக நிறத்தையும் சுழல் கண்ணையும் பெருங்கோபத்தையுமுடையராய்ப் பயங்கர உருவத்தோடு ஆரவாரித்து அணுகியும், அகன்றும், மறைந்தும், சூழ்ந்தும் தோன்றினர். அத்தின்மையைக் கண்ட அகத்தியன், அஃது அக்கொடியரைக் கொன்றதால் உண்டாகிய பாவம் என்றும், அவர்கள் முனிவன் மைந்தர்களாதலை

யால் பிரமகத்தி சேர்ந்ததென்றும் தெரிந்து, அது தீரும் பொருட்டு, அக்கொங்கு நாட்டின் ஒரு புறத்தில் சிவலிங்கம் தாபித்துச் சிவார்ச்சனை செய்து வருகையில், அவனை எய்திய கொலைப்பாவம் தொலைந்து போயிற்று.

அம்முனிவன் அங்கமர்ந்து தவமியற்றுதலை உணர்ந்த நாரத முனிவன், சீர்காழியில் சூரன் கொடுமைக்கு ஆற்றாது மறைந்து வேணுவாகித் தவமியற்றிக்கொண்டிருக்கும் இந்திரனை நாடிச் சென்றனன். இந்திரன், முனிவன் வருகையைத் தெரிந்து சென்று அடி வணங்க, நாரதன், "இவண் நீ சுகமாய் இருக்கின்றனையோ?" என்று வினவினன். இந்திரன், "இதுகாறும் நினதருளால் சுகமாகவேயிருந்தேன். இது பொழுது சிவபெருமானை அருச்சித்தற்கு ஓர் இடையூறு நேர்ந்துள்ளது. அஃதாவது, சிவார்ச்சனைக்குரிய பூக்கள் நிறைந்த நந்தனவனம் நீரின்றி வாட்டமடைகின்றது. அதனால், பூக்களும் இல்லை. இது பெருங்குறை," என்று கூறினன்.

முனிவன், "இந்திரனே, உனது அரசும் வாழ்வும் விரைவில் அரனருளால் உன்னைச்சாரும். நீ வருந்தல் வேண்டா; நினது நந்தனவனம் நீராற்செழிக்கவும், சிவார்ச்சனை தீங்கின்றி முற்றப் பெறவும், உன் துன்பம் நீங்கவும், நற்காலம் நேர்ந்திருக்கிறது. முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான், அகத்திய முனிவனைத் தென்பாற்செல்லென்று விடுப்ப, அம்முனிவன், ஆறு தாங்கிய குண்டிகையொடு தென்றிசை நாடிச் சென்றான். அவன் தன்னை எதிர்த்து வழிபடைத்து நின்ற விந்தகிரியை அடக்கிச் சூரன் மருகராகிய வில்வல வாதாவியரைத் தொலைத்தான். அதனால், அவன் தனக்கு நேர்ந்த பாவம் நீங்கக் கொங்கு நாட்டில் தவமியற்றி அருள் பெற்று, இன்னும் அங்கே அமர்ந்திருக்கின்றான். அவனது கமண்டலத்துள்ள காவிரியாற்றை நீ இங்கு வருமாறு செய்குவையாயின், உன் மனக்குறையனைத்தும் நீங்கும்," என்று உரைத்தான்.

அவ்வுறுதி கேட்ட இந்திரன், "அவன் கரகத்திலுள்ள ஆற்றினை இவ்விடை ஒழுகச்செய்வது எத்திறம்?" எனலும், நாரதன், "விநாயகப் பெருமானை வழிபட்டுத் தவம் புரிந்தால், அப்பெருமான் அதனை முடித்தருளுவன்," என்றான். இந்திரன்

மகிழ்ந்து, அப்பொழுதே தந்திமாமுகற்கு இயன்ற பூசனை இயற்றுவதாகக் கூறலும், அவனிடம் முனிவன் நன்றென்று விடை பெற்றுச் சென்றான். பின்னர் இந்திரன், கணேசப்பெருமான் உவக்குமாற்றால் அருச்சனை ஆற்றிப் பண்ணியம், பல வருக்கங்கள் முதலிய நிவேதித்துப் பணிந்து நின்று ஏத்தினான். இந்திரன் பூசனை உவந்த கணேசப்பெருமான், அவனெதிரில் கணத்தவர் சூழ எழுந்தருளி, அவன் வேண்டியன யாவுங் கூறுமாறு கேட்டனன். இந்திரன், சிவபெருமான் பூசனைக்காகும் மலர்வனம் நீரின்றி வாடத் தன் மனம் வாட்டமடைந்தது எனவும், அக்குறை தீரப் பெருமான் அருள வேண்டும் எனவும் கூறினான். விநாயகப் பெருமான், "ஆகாய கங்கை வேண்டுமா, அல்லது ஏழ் பெருந்தலத்துப் புனித தீர்த்தம் வேண்டுமா? யாது வேண்டினை?" என்றான். இந்திரன், "அடியேன் அவற்றை விரும்பினேனல்லேன்; உமக்கு அரியதொன்றில்லை. அடியேன் பெற விரும்புவது கொங்கு நாட்டில் தவம் புரியும் அகத்திய முனிவன் கரகத்தின்கண் உள்ள காவிரித் தீர்த்தமே. அதனைக் கவிழ்த்தால் அந்நதி இங்கு வந்து நந்தனவனத்தைச் செழிக்கச் செய்யும்; அதனால், அடியேன் மனத்துயர் அகலும். ஈதே அடியேன் வேண்டுகோள்," என்று பணிந்தான். விநாயகப் பெருமான், அவ்வாறே தருவதாகக் கூறிக் கொங்கில் தவமியற்றுங் குறுமுனிவன்பால் அணைந்தனன். சிவபெருமான் அகத்திய முனிவன் குண்டிகையில் பொன்னியாற்றைப் புகக் கட்டளை இட்ட ஞான்று, அப்பொன்னி பரமனை நோக்கி, "யான் அம்முனிவனை விட்டு நீங்குவது எக்காலம்?" என்று இரந்து கேட்டது. சிவபெருமான், "அம்முனிவன் உன் காரணம் நோக்கிக் கரங்காட்டுவான். அஞ்ஞான்றே நீ நீங்கக்கடவை," என்றனன். விநாயகப்பெருமான் அச்சூழ்ச்சியை முடிக்க வெண்ணி, ஆண்டொரு காக உருக்கொண்டு, அவ்வகத்தியன் பக்கலில் இருந்த கரகத்தின்மீது அமர, அம்முனிவன், அக்காகத்தை ஐங்கரனென்றோராது, ஒரு பறவை என்ற உணர்ச்சியினால் அதை ஓட்டுங் குறிப்பால் தன் கையை நீட்டி ஓச்சினான். கணேசப் பெருமான் குண்டிகையைக் கவிழ்த்து, "காவிரியே, முன்னாள் ஈசன் கூறியருளியவாறே இம்முனிவன் இது பொழுது கையைக் காட்டினான். ஆதலின், இனி நீ யாரின்

மீது படரலாம்,'' என்றனன். அப்பொன்னியாறு, முற்காலத்து அண்ணலருளால் போந்த கம்பை ஆற்றைப்போல விண்ணும் மண்ணும் நடுங்க ஆர்த்துப் பொள்ளெனப் படர்ந்தது.

அங்ஙனமாகவும், உமை மைந்தன் காகவுரு நீத்து, மறை நூல் வல்ல பார்ப்பனச் சிறுவன் போலச் செல்லுதலைக் கண்ட முனிவன், "இவன் தேவனோ! அவுணனோ! யானறிகிலேன்! திறலின் மிக்க இவனைப் பின் தொடர்ந்து அறிவேன்,'' என்று சீற்றத்துடன் அவன் பின் தொடர்ந்தனன். விநாயகப் பெருமான், அஞ்சினன் போன்று ஓட, முனிவன் தன் கையைக் கவித்தமாக்கிச் சிரசில் குட்டுவதற்காகப் பின் தொடர்ந்து துரத்தினன். இவ்வாறு மாணியாம் உருக்கொண்ட அப்பெருமான், அகத்தியனை நெடுந்தூரம் அலையச் செய்தலும், முனிவன் களைப்படைந்து, செயலற்று நிற்க, அவனது தளர்ச்சியைக் கண்ட தயாநிதி, உண்மையான தனது உருவத்தைக்காட்டி நின்றான். தாரகப் பிரமமாகிய விநாயகப் பெருமான் திருவுருவத்தைக் கண்ட முனிவன், அச்சமுற்றுக் கலங்கி, குட்டுவதற்காகக் கவித்த தனது கரத்தினால் தனது நெற்றியில் குட்டிக்கொண்டு, பல காலும் அடி பணிந்தான். பெருமான் முனிவனைப் பார்த்து, அருள் சுரந்து, "வருந்தலை! வருந்தலை! நீ வேண்டியதென்னை?'' என்று வினவினன். முனிவன், "தேவரை அறியாது குட்டுவதற்காக எடுத்த இக்கையால் யான் குட்டிக்கொண்டு அப்பாவத்தின் நீங்கினேன். தேவரது திருவடியையும், சிவபரஞ்சுடரின் அடித்தலத்தையும் மறவாத அன்புதான் அடியேனுக்கு வேண்டும். அன்றியும், இவ்வாறு தேவர் சந்நிதானத்தில் யாவர் ஒருவர் தம் கையால் நெற்றியில் தாக்கிக்கொண்டு குறை இரக்கின்றாரோ, அவர்க்கு அருள் சுரக்க வேண்டினேன்,'' என்றான்.

விநாயகப்பெருமான், "நின் கருத்தின் வண்ணமே அருளினம்; இவற்றையெல்லாந் திருவிளையாடலாகக் கருதினம். அன்றியும், இந்திரன் சிவபெருமானைக் குறித்துச் சீர்காழியில் தவமியற்றுகின்றான். அவன் வைத்த மலர் வனம் செழிக்க அவனது வேண்டுகோளின்படி யாம் இவ்வாறு செய்தனம்,'' என்று அருளினன்.

முனிவன், "இக்கரகத்தில் புனித நீர்த்தம் சிறிதுமில்லையே! யான் செய்யக் கடவதென்னை ?" என்று கேட்டனன். வேழமுகத்து வள்ளல், தனது திருக்கரத்தை நீட்டிக் காவிரியின் புனலைச் சிறிதே அக்கமண்டலத்தில் பெய்தருளினன்.

அகத்திய முனிவன் மகிழ்ந்து, பலவாறுகத் துதித்து வணங்கி நிற்றலும், அவனுக்குப் பெருமான் அருள் புரிந்து, மறைந்தருளினன். பிறகு பரவையுண்ட குறுமுனிவன், அக்கொங்கு நாடகன்று, தென்திசை நோக்கி நடந்தான்.

## 15. திருக்குற்றுலப் படலம்

சிவபெருமான் திருவடியை மனத்துக் கொண்ட அகத்திய முனிவன், திருமால் வதியும் குற்றுலம் என்னும் வளநகரைக் குறுகினன். அம்முனிவன் வருகையைக் கண்ட வயிணவப் பிராமணர்கள், மனம் பொறுது, எதிரில் நின்று, "நீயோ, தகுதியற்ற கண்டிகையும் நீறும் அணிந்துளாய்; எல்லாரும் அறிய ஐயமேற்ற புராந்தகனுக்கு அடிமை பூண்டுளாய்; கையில் தண்டமும், குறிய உருவமும் உடைய நீ இவ்விடம் வருதல் தகாது. எம்பெருமான் நகரினின்று அகல்! அகல்!" என்று கூறினர்கள். அகத்திய முனிவன், வெகுளாது நகை செய்து, "வேத நெறி கடந்துளீர், நீவிர் இவ்விடம் நெருங்கி உறைவதை யான் அறிந்திலேன். இத்திறம் யாவரும் மொழிந்தாருமிலர். நல்வழியினிர் என்று கருதி வந்தேன். உமது பான்மையை உணர்ந்திருப்பின், யான் இம்மூதூர் வரவும் நினையேன். வெகுளற்க; யான் மீண்டு செல்லுவேன்," என்று புகன்றனன். அவர்கள் பொறுது, "இத்தலம் நீ வருவதும் பாவமாம்! மீண்டு செல்!" என, முனிவன், "நன்று கூறினீர்! இதுவே உண்மை!" என்று கூறி, அவர்கள் நந்தி தேவர், ததீசி முதலிய பெரியாரிட்ட சாபம் நீக்க வல்லார்களோவென்று நினைந்து, அப்பாற்சென்று, "சிவநிந்தை செய்த அவர்கள் செருக்கை அடக்குவேன்!" என்று சிவபிரானைத் தியானித்துத் தனது மாயையால் திருமாலைப் பரவும் பாகவத வேடம் பூண்டு, மீண்டும் அவ்விடம் வந்தனன். அவ்விரு பிறப்பாளர் அவனை அடி பணிந்து உபசரித்து, திருமால் எழுந்தருளி இருக்கப் பெறுவதாகிய திருக்கோவிலைக் காட்ட, முனிவன் கண்ணனை

மனத்திலுன்னிக் கரங்குவித்து வலம் வந்து, "யாம் இன்று இவரை வழிபடுவதற்கு வேண்டிய திருமஞ்சன முதலியவற்றைக் கொணருமின்," என, அவ்வாறே அவர்கள், அப்பொருள் அனைத்தும் எஞ்சாமலுய்த்திடலும், முனிவன் அவர்களைப் பார்த்து, "யாம் இன்று இவரை அருச்சிக்கும் முறையைப் பாருங்கள்," என்று உட்புகுந்து, சிவபெருமானை மனத்துட் கொண்டு, சிறிய உருவத்தினனாகிய திருமால் முடியில் கையை வைத்து, 'குறுகு குறுகு குற்றாலம்!' என்று மேனியைக் குழைவித்துச் சிவலிங்கமாக்கி, சிவாகமத்தின்படியே அருச்சித்தனன். அதைக் கண்ட வைணவர்கள், "இவன் முன் இங்கு வந்து மீண்டவன்; பின் மாயையால் இவ்வடிவங்கொண்டு இவ்விடம் புக்கு நம் சமயத்தை அழித்தான்!" என்று வெகுண்டு, குழுமி முனிவனை வளைந்தார்கள். பற்றுவதெண்ணி நெருங்கிய அக் கூட்டம் சிதறியோடும்படி முனிவன் தனது வெகுளித்தீயை உய்த்தலும், அத்தீ அடர்ந்து அவர்களைத் துரத்த, அவர்கள் அந்நகரத்தை விட்டு அன்றே சிதறியோடி ஒளிந்தார்கள்.

அவ்வைணவர்கள் போய பின்னர், முனிவன் அன்று முதல் அது சிவபெருமானிடமாயிற்றென்று கருதி, அப்பெருமானை அருச்சித்துப் பணிந்து விடை பெற்றுத் தென்பாற்சென்றனன்; பிறகு பொன்னொடு மணி கொழித்திழியும் அருவிகளையுடைய பொதியவெற்பை நண்ணிக் காமனை எரித்த கண்ணுதல் அடியிணையை மனத்திலமைத்துத் தவத்தினைப் புரிந்து அமர்ந்திருந்தான்.

## 16. இந்திரன் அருச்சனைப் படலம்

காகவுருக் கொண்ட கணேசப் பெருமானால் கரகத்தினின்றும் கவிழ்க்கப்பட்ட காவிரி நீத்தம் படர்ந்த தன்மை, விடற்கரிதாகிய பாசத்தளையினீக்கி நன்னெறிப் படுத்தலோடும் குருவருளாற்செல்லும் ஆருயிர் போன்றும், தடை வல்லான் பெருங்கடத்துத் தடைப்படுத்திய பாந்தள் அருளுடையான் ஒருவன் அத்தடை நீக்கச் செல்லுதல் போன்றுமிருந்தது. அன்றியும், சந்தனம், அகில், சங்கு, தரளம், கவரி, யானை மருப்பு, பொன், மணி ஆகிய இவற்றை அலைமேற்கொண்டு வந்திழியும் நதியின் தன்மையானது, வருணன் அப்பொருள்களை

யெல்லாம் இந்திரன்பாற்செலவுய்த்தது போன்று இருந்தது. இத்தன்மையோடு அலைகளால் அகல் வான் முட்டி, காவதம் பல பரவிக் காசினியை அளந்து, கீழ்த்திசைச் சென்ற பொன்னி நீத்தம், இந்திரன் இருந்து நோற்கும் இடமான போது நிறைந்த தண்டலை புக்கது. அக்காமர் காவினில் பீடுற எய்திய பொன்னி நீத்தத்தைக் கண்ட ஆகண்டலன் எழுந்து, ஆடியும், நகைத்தும், தங்கோன் அருச்சனை முற்றியதென்று பாடியும், முதல்வன் தாளைப்பரவியும், படர்ச்சி தீர்ந்தான்.

பருவரல் நீங்கிய பாகசாதனன், சூரனை வென்று தன்னரசும் வளமும் அடைந்தாற்போன்று மதர்ப்படைந்தனன். அவன் மனக்களிப்பை உரைப்பவர் யாவர்! அவ்வெள்ளம் பாய்தலும், அம்மலர் வனம், மகவானைப்போல வாட்டம் நீங்கித் தளிர்த்து மாரி காலத்துத் தூவலால் கான் நிறை மரனும் பூடும் வல்லியும் கவினடைந்தாற்போன்று, மேல் நிறைந்த இலைகள் மல்கி, விளிந்த சினைகளும் போதும் மல்கிக் கவின் அடைந்தது. வானளாவிய புன்னைகள் அனைத்தும் வளம் பெற அரும்பிப் பூத்தது, தாரகை நெருங்கி மொய்க்க, விண்ணின் முகிலினம் விளங்கியது ஒத்தது. பண் பயில் வண்டினம் பயிலுறச் சண்பகங்கள் கவர் வனப்பில் தயங்கிப் பூத்தன. வாவியும் கிடங்கரும் வண் டாமரையொடு காவிகள் பூத்துக் கவினைத் தந்தன. இவ்வாறு மரங்களும், கொடிகளும், ஏனையவும் அரும்புதல் மலர்தல் ஆகிய காட்சி, மாலைச் செக்கரும், விண்ணின் மீனும் விரவியது ஒத்தது. இவ்வளம்படப் பூத்த மலர் வனத்தினை இந்திரன் மகிழ்வொடு நோக்கி, விடியற்காலத்து மேவி, வண்டுகள் வீழா, முன்னர்ப் புரையிலாக் கடிமலர் கொய்து கொணர்ந்து, கண்ணுதலடிகளில் ஆகம விதிப்படி அருச்சித்தேத்தினன். அந்நாள் முதல் இவ்வாறாக உம்பர் கோமான் வைகலும் நோற்று அச்சண்பக வனத்தில் தங்கியிருந்தான். இது நிற்க.

## 17. தேவர் புலம்புறு படலம்

சூரபன்மனால் ஏவப்பட்ட இழிந்த ஏவல்களைச் செய்து தளர்ந்த சில தேவர்கள், எக்காலத்தில் அப்புன்மை தம்மை நீங்குமென்று வருந்திப் பொன்னகரை விட்டுப் புவியினிற் போந்து, செந்தமிழ் நாடாகிய மாதின் சிறந்த வதனமெனத்

திகழும் சீர்காழியை நல்லி, அவ்வுழித் தவமுயலும் இந்திரனைக் கண்டு, அடி பணிந்து, "எம்மிறையே, எம்மை நீத்து இவ்வாறு தனித்திருப்பதுந் தகுதியோ? எங்கள் துன்பங்களைத் தீர்க்கக் கருதிலையோ?" என்று பலவாறு இரங்கிக் கூறி வருந்தினர் கள். இறைவனாகிய இந்திரன், அம்மொழிகளைக் கேட்டு அயர்ந்து, வெய்துயிர்த்து, அவர்களை நோக்கி, "சூரன் வீரமா மகம் இயற்றிய ஞான்றே நம் அரசும் வாழ்வும் தொலைந்தன! தயாநிதியாகிய சிவபெருமான் உவக்குந் திறமுடைய தவமே அன்றி உயிர்க்குறுதி மற்றொன்றுண்டோ? ஆகலான், அப் பெருமானைக் குறித்து இதுகாறும் அரிதில் தவமுயன்றேன். யாம் அடைய வேண்டுவன யாவும் அவனருளால் விரைவில் அடைவதற்கு ஓர் உபாயம் யாதெனின், அவ்வுமாபதி அமரும் திருக்கயிலையை ஒருங்கே நண்ணி, அவனைப் பணிந்து நின்று, அவனருள் பெறுவதுதான்," என்று கூறினன். அவ்வாறு கூறிய இந்திரனைத் தேவர் பணிந்து கயிலை செல்ல ஒருப்பட் டனர்.

அப்பொழுது வணங்கி நின்ற தேவர்களை இந்திரன் சற்று அங்கிருக்கச் செய்து, தான் தனித்து அயிராணியின்பால் அணு கினன். எய்திய இந்திரனை அன்னநடையினையுடைய புலோ மசை அடி பணிந்து, அவன் கருத்து யாதெனக் கேட்டனள். அம்மொழியைக் கேட்ட வேந்தன், "சூரன் பணியால் வருந் திப் போந்து இரங்கிய தேவர்களின் இடுக்கணும் நமது துயரும் நீங்க, வரைமகள் கணவனாகிய கறைமிடற்று இறை வன் வைகும் அப்பொருவறு பொருப்பிடைப் புத்தேளிரோடும் போகக் கருத்துடையேன். ஏந்திழாய், ஈது நின்பால் கூறிப் போக வந்தேன்," என்றான், அப்பிரிவுக்குரிய மொழியினைக் கேட்ட அயிராணி அயர்ந்து, மயங்கி, மண்ணிடை வீழ்ந்து, இந்திரன் தேற்றச் சிறிதே தெளிந்து, "பொன்னின் நாடிழந்து புவியிற்போந்து, காடிடமாகக் கவன்றிருப்பார்க்கு உயிர்த்துணை யாகிய நீவிர் அகன்றால், யான் அவுணரால் கற்புமழியப் பெறு வேன்! ஆகலின், நும்மோடு அக்கயிலைக்கேகுவன்," என்றாள்.

அமுதினைபொத்த அவள் மொழி கேட்ட மகபதி, "உன் னைக் காக்கும் திறமுடையான் ஒருவனுளன். அவன் மாசாத்

தன் எனும் பெயருடையான்; விரிசடை அண்ணலும், புனல் துயில்வானும் பொருந்தி அளித்த ஐயன். அவனை அன்பால் விளித்து, யான் கயிலை சென்று இங்கு வருமளவும் காவலை இயம்பி, நின்னை அவன்பாற் கையடையாக்குவன். அஞ்சாதே! ஒன்றும் எண்ணி வருந்தாதே!" என்று மொழிதலும், அயி ராணி, "அன்னவன் சிறப்பினை அறிய எனக்கு மொழிக," என்று வணங்க, இந்திரன் ஐயன் வரலாற்றை எடுத்துக் கூறத் தொடங்கி, "முன்னொரு காலத்தில் தேவர், சிவபெருமான் திருவருளினைப் பெறாது, பாற்கடலைக் கடைந்தனர். அக்கட லிடத்திலிருந்து ஆலகாலமென்னுங் கடிய் விடமெழுந்து, அனை வரையும் வருத்தியது. அதனை அஞ்சிய அவர், ஓடி ஓலமிட்டுத் திருக்கயிலை சென்று, சிவபெருமானை வேண்டிக்கொண்டனர். அப்பெருமான் அவ்விடத்தினைக் கண்டத்தடக்கிப் பின் அக் கடலைக் கடையச் சொன்னான். கடையச் சென்றவர், தந்தி முகத்து எந்தையை வழிபடாமையால், மத்தாகிய மந்தரமலை பாதலத்திலழுந்தியது. அதனை உணர்ந்த திருமால் முதலிய தேவர், கணேசப் பெருமானை வழிபட்டுக் கடைய, ஊறு நீங்கி, அமுதமெழுந்தது. அவ்வமுதத்தினைத் தேவாசுரராகிய இரு பகுதியினரும் கடல் கடைந்த உரிமையால், தம்மால் வந்த அவ்வமிழ்தம் தமக்கே உரியதென்று தம்முள் மாறுகிப் பொர நினைத்தனர். அக்கணம் திருமால், ஒரு மோகினி வடிவங் கொண்டு, சுரரும் அசுரரும் காணும்படி முன்னின்று, 'அமுத மும் உள்ளது; யானும் உள்ளேன்; இவ்விரண்டனுள் நீங்கள் விரும்புவது என்னை?' என்று வினவினன். தவமற்ற அவுணர் கள், 'யாம் விரும்புவது அமுதத்தினுஞ் சிறந்த நின்னையே,' என் றனர். மோகினியாகிய திருமால், நன்றென அமுதினைத் தேவ ருக்களித்து, அவுணரொடு சென்று, அவரை நோக்கி, 'என்னை இன்பொடும் புல்லும் வலியவர் இக்குழுவினுள் ஒருவரும் இல்லையே!' என்றனன். அவ்வவுணக் குழுவில் இருந்த வீரர், 'யான் வன்மையுடையேன்! யான் வன்மையுடையேன்!' என்று தம்முள் முரண்பட்டு ஒருவரோடொருவர் மலைந்து மாண்டனர்.

"அவ்வாறாகிய காலத்தில் சிவபெருமான், மோகினியாகிய திருமால் பெற்றிருந்த மயக்கும் வனப்போடு அவளை அணையுங்

கருத்துடன் அருகிற்செல்ல, மாலாகிய மோகினி அஞ்சி அகன்றனள். அப்பெருமான், 'நால்வகைச் சத்திகளுள் நீ ஒரு சத்தியல்லையோ? ஆதலின், நின்னை அணைய விரும்பினேன்!' என்று கூறினன். மோகினி இசைந்து, சம்புத்தீவில் சால விருக்க நிழலில் மயங்கி உள்ளுருகி, அப்பெருமான் இன்புறுமாறு கலந்தாள். அவ்விருவரும் கலந்த பொழுது, கறுத்த மேனியும், செங்குஞ்சியும், செண்டேறு கையுமாய் உக்கிரத் தோடு ஒரு மகன் பிறந்தனன். முக்கண் எந்தையும் முயக்கினை நீத்து, அக்கணமே 'அரிகரபுத்திரன்' என்னும் பெயரினை அவனுக்கு ஈந்து, உருத்திரர் கணத்தொடும் வைத்து, வரம் பல நல்கிப் புவனமும் நல்கி, அதற்கியையத்தனவும் நல்கி, அமரர் மாதவர் ஆகிய அனைவரும் ஏத்தும் மேன்மையும் கொடுத்தான். பிறகு திருமால் தன தன்மை உருவொடு நின்று தொழவும், அப்புதல்வன் நின்று வணங்கவும், அவர்க்கு விடையளித்துச் சிவபெருமான் தன்னிடஞ் சென்றருளினன்.

"அவ்விருவரும் தந்தமிடஞ் சார்ந்தனர். தனதிடஞ்சார்ந்த அரிகரபுத்திரன், சாரதர் தம்மொடு எஞ்ஞான்றும் இருந்து, எல்லா உலகினையுங் காத்தனன். அத்தன்மையனாகிய மாசாத்தன் என்னிடத்து வைத்த அன்பினால் இங்கு வந்து நின்னைக் காத்தருளுவன்," என்று உரைத்தனன்.

புலோமசை அதற்கு இசைந்து நின்றாள். மாதின் இசைவு அறிந்த இந்திரன், அன்பால் ஐயனை விளித்து, "ஐயனே, இவள் நின் அடைக்கலம். யான் வருந்துணையும், இன்னல் நேராது, இவளைக் காக்க வேண்டும்," என்று மொழிந்து, அவனை அங்கண் விடுத்துத் தேவரோடுங் கயிலையை அடைந்தான். காவலேற்ற ஐயன், தன் வீரருள் வாட்போர் நிரம்பிய வயத்தின் மிக்க மாகாளன் என்னும் வீரனை அருளால் நோக்கி, "இம்மாதினை ஏதம் அடையா வண்ணங் காப்பாய்," என்று ஆணை தந்து அகன்றான்.

திருக்கயிலையைச் சார்ந்த இந்திரன், தேவரோடு ஏகி, நந்தி பண்ணவனை வணங்கிச் சிவ சந்நிதானஞ் செல்ல வேண்டுதலும், அப்பெருந்தகை, "நீங்கள் இப்பொழுது காணுஞ் செவ்வி

னல்லன் அச்சிவபெருமான்; நால்வருக்கும் ஞான முதற் பொருள் காட்டி இருந்தனன்," என்று நவின்றனன்.

இந்திராதியர் மனங்கலன்று, "அடியேம் உலகிற்செல்லுவ மேல், சூராதியர் எம்மைப் பிடித்துச் சிறை செய்குவர். ஆதலின், இவ்விடை ஒருபுடை யாங்கள் இருக்குமாறு அருள வேண்டும்!" என்றனர். அவ்வாறே நந்தி தேவன் அவ்வாயிலின் ஒருபுடை இடங்காட்டியருள, இந்திரன் முதலிய தேவர் கவலை நீங்கி, அங்கிருந்தனர்.

புலோமசையின் செய்கையையும், ஏனையோரது செய்கையையும் இனிக் கவனிப்போம்: இந்திரன் கயிலை சென்றதும், பாங்கரில் அணங்கினர் போற்ற அயிராணி அப்பூங்காவினின் தவம் புரிந்திருந்தாள். இந்திரன் பிரிந்து கயிலைக்கேகி நீண்ட காலஞ் சென்றும் வாராமையால், தவமிழைத்து வருந்திய சசி என்பாள், தன்னுடல் வாடப்பெற்று, கவலையுற்றிருந்தாள். அதுபொழுது, சூரனுக்கு இளையவளும், கற்பிழந்தவளுமாகிய **அஜமுகி** என்னும் பெயரினையுடைய தீயாள், **துன்முகி** என்னுந் தோழியோடுந் திரிந்து வருகையில், சீர்காழியை அடைந்து, அப்பூங்காவினிற்புகுந்து, அதன் கணின் முழுதும் நோக்கிச் செல்லுங்கால், காவல் பூண்டிருந்த மாகாளனாகிய வீரன், அத்தீயாள் வருகையை உணர்ந்து, அவளைத் தண்டித்தல் கருதி, அவள் காணாவகை அங்கு மறைந்திருந்தான். அஜமுகி அழகு மிக்க அயிராணியைக் கண்டு, அவளொருகனைந்து, தன் முன்னோனாகிய சூரபன்மனது தோளினைத் தோய ஒருப்படும்படி அப்புலோமசைக்கு உரைத்து நின்றாள்.

ஆட்டு முகத்து அஜமுகி கூறிய அக்கொடுமொழியை அயிராணி கேட்டு, மனங்கலங்கி, "நன்முறைப்படி அரசு செய்யாதவரும், பிறனில் விழைவாரும் கடுநரகில் விழுதல் திண்ணம். உமது அரசும், வாழ்வும், வீரமும் ஆகிய அனைத்தும் இனிச் சின்னாளில் அழியும். அறிவிலீ, அடாதன சொல்லாதே!" என்றனள்.

உடனே அஜமுகி, இந்திராணியை வலிந்து தன் கரத்தாற் பற்றி ஈர்த்தனள். அவள் கலங்கி, மாசாத்தனை நினைத்து

அழைத்துப் புலம்புதலும், அங்கிருந்த மாகாளன் விரைந்து வந்து அஜமுகியை எதிர்க்க, அவள் சசியைத் தோழியிடஞ் சேர்த்துப் போர் புரிந்து, மீண்டும் சசியைப் பிடித்தலும், மாகாளன், அவளது கரத்தையும் துன்முகியின் கரத்தையும் துணித்துக் காலால் உதைத்துருட்டித் தேய்த்தலும், அவ்விருவரும் புலம்பிக்கொண்டிருந்தனர். அவருளம் மருண்டு பதைபதைத்து மறித்த கையளாகிய அஜமுகி எழுந்து, சசியை நோக்கி, அவளை உண்பதாகக் கூறிச் சென்று, மீண்டும் கை விழுந்த காரணத்தால் பலவாறு கதறினள். பின்னர்த் துன்முகியால் தேற்றமடைந்து, சசியை நோக்கி, "என் முன்னவனால் ஆகாத காரியமில்லை; அவனுக்கு அடங்காதாருமில்லை. அவனை அஞ்சி மறைந்துறையும் உன் கணவனைச் சிறை செய்து, உன்னை அவனுக்கு உரியள் ஆக்குவன் காணடி!" என்று சூளுரைத்துத் தோழியோடு சென்றாள்.

## 18. இந்திரன் மீட்சிப் படலம்

அஜமுகி அகன்ற பின்னர், அங்கு நின்ற வீரமாகாளன், வருத்தமுற்றிருந்த சசியை நோக்கி, "அன்னையே, அசுரரைக் குறித்து நீ சிறிதும் அஞ்சற்க! உன் தலைவனாகிய இந்திரன் வருந்துணையும் உனக்கு இடர் வாராமல் நின்னைக் காப்பேன். நீ இவ்விடையே கவலாது உறைவாய்," என்று கூறிச் சென்ற பின்னர், புலோமசை அப்பூஞ்சோலையின் ஒரு சார் தன் கணவன் ஆக்கத்தினைக் கருதித் தவமியற்றிக்கொண்டிருந்தாள்.

அச்செய்தியை நாரத முனிவன் அறிந்து, வெள்ளி வெற்பினுக்கேகி, காலம் பெறாது இருந்திடும் இந்திரனிடம் வையத்தின்கண் உள்ள புலோமசைக்கு நேர்ந்த இன்னலனைத்தையும் மொழிந்தான். அத்தீமையைக் கேட்ட இந்திரன், பெரிதும் உள்ளங் கவன்று, சிறிதே தேறிச் சீற்றமடைந்து, தன்னை நொந்து, இரங்கிச் சூழ்ந்த தேவரோடு சிவபெருமானைத் துதித்து, நந்தியண்ணலை வணங்கி, "கணக்கிறந்த நாள் செவ்வி நோக்கியும், பரமன், யானிழைத்துள்ள தீமையால் கருணை செய்தானில்லை! ஆகலான், நீலகண்டத்தெந்தையாகிய நிமலனை நோக்கித் தவஞ் செய்து பேறு பெறுதற்குரிய மண்ணுலகத்திற் செல்ல அடியேங்களுக்கு அருள் புரிய வேண்டும்!" என்றான்.

நந்தியம்பண்ணவன் நன்றே செல்லுமாறு கூறவும், இந்திரன் வணங்கித் தேவரொடு புவியிற்போந்து, சீர்காழியை நண்ணி, காவல் பூண்டிருந்த மாகாளனைக் கண்டு, உவகையாற்புல்லி, அன்பால் முகமன் பல உரைத்து, ஐயன்பால் போக விடை அளித்துத் தனது அன்பிற்கு அருங்கலமாகிய அயிராணி நோற்றிருக்குஞ் சூழலிற்சென்று, அவ்வணங்கினைக் கண்டு, அன்பாற் புல்லி, அவள் துயராற்றினன். பின்னர் அவன் சூளுரைத்துச் சென்ற அஜமுகியின் சொற்களைக் கேட்டு நடுக்கமடைந்து, செய்வதென்னென்று மனத்திலுன்னி, இந்திராணியைத் தேவர்களோடு மேருமலையில் கொண்டு போய் மறைத்திருந்தான்.

## 19. சூரன் அரசு செய் படலம்

மகபதியானவன் இங்ஙனம் இருப்ப, முன்னரே சென்ற அஜமுகி, கொடிய துன்முகியொடும் மகேந்திர நகரை அடைந்தாள். அப்பொழுது சூரன் அரசு வீற்றிருந்ததைச் சிறிது அறைகுவோம்: மேலே உயர்கின்ற விண்ணின்றிழிந்த விழுமிய மாநிலப் பரப்பில் ஆயிரங்கோடி கொண்ட அண்டத்தில் உள்ளதும், ஆடகத்தால் திசை முகத்தவர்கள் செய்ததென்ன ஒய்வின்றி விளங்குவதுமான பொற்சபை ஒன்று, ஆயிரயோசனை விசாலம் உள்ளதாய்ச் சூரன் அரசியல் நடாத்துதற்குரியதாயிருந்த அவைக்களத்தில், ஆயிரங்கோடி பத்தியில் நிறுத்திய பொற்றாணம் பரந்துள்ள பெருமையைப் பகர்வார் யாவருளர்! அந்நலம் வாய்ந்த மன்றத்தில் அரியணையின்மிசை வெஞ்சூர மன்னவர் மன்னன் அரசு வீற்றிருந்தான்.

இவ்வாறு சூரபன்மன் அரசு வீற்றிருக்க, அவ்வமயத்து, அந்நகர் அருகில் துன்முகியோடும் அத்திய ஆட்டு முகத்தாள் வந்துற்றாள். அஃது எவ்வாறிருந்ததெனின், மேன்மை தங்கிய மகேந்திரமென்னும் சிறந்த நகரின்கண் கூட்டி வைத்துள்ள பொருளெல்லாம் அழியத் தக்கவையென்னும் மூத்தாள், அடுத்ததொரு துணையொடும் வந்துற்றாற்போல இருந்தது. அவ்வண்ணம் கீழ்த்திசை வாயிலைக் கிட்டிய அஜமுகியின் பழிபடு கரத்தினைப் பார்த்த அவுணர், அழிபடு மனத்தினராய், அக்கொடிய தொழிலை இயற்றினர் யாவரெனச் சீற்றமடைந்தனர். மானம் நீங்கிய அஜமுகி, மகேந்திர நகரம் உறுதுயர்க்கு ஒரு

வழி காட்டுவான் போல உதிரம் ஒழுகச் சென்றதை அங்குள்ள அசுரர்கள் கண்டு ஆருலித்துக் கூடினார்கள்.

மல்லப்போர், ஆட்டுப்போர், சூதுப்போர், வாரணப்போர் முதலிய போர்களை நோக்கி நின்ற அனைவரும் அவற்றை விட்டு விரைந்து வந்து குழுமினர். குதிரை ஏற்றம் முதலிய வாகனப் பயிற்சியை விட்டும், விற்பயிற்சி வாட்பயிற்சி முதலிய ஆயுதப் பயிற்சிகளை நீத்தும், சிலர் அவ்வழி வந்தனர். யாழிசை, குழலிசை, மிடற்றிசை முதலிய இசைப் பேத இனிமையை விட்டு வந்தனர் சிலர். நாடகம் கழைக்கூத்து முதலிய கூத்து வல்லார் இயற்றும் கோட்டிகள் அகன்று குலைந்த மெய்யினராய்க் கூடினர் சிலர். மங்கலப் பொருள் கொண்டு வதுவைகள் நடத்திக் கேளிரொடு குழுமி அளவளாவுதலை நீத்து, அவ்வழிக் கைகுலைத்து அடைந்தனர் சிலர். வாளையொத்த கண்ணினை உடைய மனைவியரோடும், மாடந்தோறும், செய்குன்று தோறும், நடாகந்தோறும், நந்தன வனந்தோறும் ஆடல் பயின்றவர், அவ்வாடலை வெறுத்து அடைந்தனர். இத்தன்மையவாகிய பல வகைக் கூட்டத்தினரும் அறமுனியைக் கண்டு, நீர் ததும்பித் தளிக்குங் கண்ணும், பதைபதைக்கும் நெஞ்சமும், தீயொடு புகையைக் காலும் மூச்சும், முனிவும் ஆகிய இவற்றையுடையராய், "திரிபுரத்தை எரித்தும், தானவரை அழித்தும், தீக்கொடு விடத்தை மிடற்றிடை அடக்கித் தேவரைக் காத்தும், சரபமாகி அரியைப் படுத்தியும், நான்முகன் தலையொன்றை நகத்தாற் கிள்ளியும், தன்னுடை வலியைத் தெரித்துக் காட்டிய சம்புவின் செயல் இது போலும்! நஞ்சினைப் பில்கும் கயிற்றினையுடைய சேடன்மேற்றுயிலும் நாரணன் செயல்கொலோ இது! கஞ்சமாமலர்க் கிழவன் நெஞ்சினும் இதனை இயற்ற நினைவனோ! ஆ! அவன் அஞ்சும் அஞ்சும்! புரந்தரன் சூழ்ச்சியால் புரிந்த செயலோ! அவன் இது செய்யவும் வல்லனோ! நறவினையுண்டு அறிவினை இழந்தார் நாட்டமின்றி இயற்றியதேயோ! பித்தேறினர் தம் பிழை ஓராது செய்த செய்கையோ! இழைத்த நாளெல்லைக்கு இறுதி சென்றார் யாவரோ இத்திறமியற்றினர்! விழுமிய முனிவர் பழுதுரை கூற இயற்றினர்கொல்லோ! யாரிவன் கையை அட வல்லார்! எவனோ ஒருவனை நண்ணினனாகி, அவன்பால் காதல்

ஆற்றவுமுடையளாய், பெண் மதி மயங்கித் தன்னையுன்னாது, சிறிய உறுப்பில் ஒன்றைச் சின்னமாகத் தருவேனென்று, கூறிய வாள்கொடு ஈர்ந்து கொடுத்தனள். இதுதான் உண்மை," என்று கருதினர்.

சிலர், "கேட்டினை அடைந்த இவளைக் கேட்பதெவ்வாறு?" என்றனர். சிலர், "இளையவராகிய நாம் கேட்கில் நம்மையும் முனிவள்! ஆயினும், காடும் புலியும் ஓடியே திரிந்து இதனை அறிவோம்," என்றனர். இனையன உரைத்து, இடும்பையுற்றசூரன் தங்கை தோழியோடு கைபோய்ச் செல்லுதல் கேட்ட அனைய மாதர், எல்லையில் தெருக்களில் வார்ந்த கண்ணீரோடும், செறிந்து சூழ்ந்து திகைத்தனராயினர். இவ்வாறு அந்நகர மாதர் ஆடவர் யாவருங் கலங்கி வருந்த, அவள் அப்பெருந் தொகுதியின் அகன்று, அரசன் வைகும் அவைக்குச் செல்லலாயினள்.

## 20. அசமுகி புலம்புறு படலம்

ஆட்டு முகத்தினையுடைய அத்தியள் அரசவைக்கு அணியளாகி, மாயம் புரியும் அன்னையையும், மருகரையும், திறனுடைய முன்னவரையும் நினைந்து, ஆண்டு நின்ற திருமகன் பயந்து அப்புறஞ் செல்லக் கதறிப் புலம்புதல் செய்தாள். அவள், "அன்னாய், மணம் நிரம்பிய கொன்றைத்தொடையல் அணிந்த மாதொரு பாகன் அருளிய அஞ்ஞான்று நீ வந்து எம்மை நோக்கி, எங்களைப் பிரியாது போற்றித் திரிவேன் என்ற மொழியுந் தவறினையோ? என் கரம் அறுபட்டது அறியாயோ? அஞ்சலென்று கூறினையில்லை! இஃது உனக்குத் தகுதியோ? சிறியேன் பெண் பிறந்து பட்ட துன்பம் என்று தீரும்! ஐயோ! உலகில் தந்தையார் தாம் பெற்ற மைந்தர்களை விரும்பிக் காப்பர். தாயரோ, தாம் பெற்ற மாதரை விரும்பி அருள் செய்வர். இது பண்டைக்காலந்தொட்டு வந்த வழக்கல்லவோ? ஆயினும், நீ என் துயரம் நீக்கினையில்லை. ஐயோ! ஆருமின்றி ஏதிலாரைப்போலத் தனித்த யான், கையிழந்து இவ்வுயிர் கொண்டிருக்கவுந் தகுமோ! நீங்கள் எங்கணும் தடையின்றித் திரிவீரென்று யானெண்ணி அஞ்சாது புலோமசையை வலிதிற் பற்றி எடுத்து வந்தேன். எனது கரத்தைத் துணித்துப்

வேகம்: எமது குறிப்பினைச் செய்ய அஞ்சிய இந்திரன் ஒளித் மறைந்துள்ளான். ஏனைய தேவரோ, இந்திரன் செய்ய நினைக் கவும் வலியரோ. உன் தந்தை கைபுகுந்தபோதினை மாபியோ! இது, 'வெற்றி பெற்ற புதல்வன், வான் தலைவன் இந்திரனைக் கைக் கொண்டனன்,' என்னும் அத்தகுதியே! அன்றி மதி அடைந்து இத்திறம் செய்யினும், அதிதேவர் மெய்யிலர்! அவர் தீ வெருளும் தரத்தரோ? மின் சமர்த்து நின் கடைதோறும் உழன்ற அவ்வானவர், அமிர்தம் ஆண்டதையர் என்பதற்குரி யரோ? எறி புனற்கடை அன்னமே வெருளினும் கண்டு! அன்றி, கறைமலர்க்கமலத்தினை-காடுமேற்றுமின் அத்திருமலை- தீ வெருளினும் இயல்பே! அன்றி, இச்சிறியர்தம்மை நீ வெருளு தல் சிறப்பேயோ? முத்தேவரேயன்றி மற்றையர் உன் வெரு விக்கு எத்துணையர்? உன் இளையர்க்கும் போதியாரோ. ஆத லின், சித்தமுற்றிய வெருளினைத் தீர்ப்பேன்! பான், இம்மன்ன கைத்தலத்தினை இழந்த அவ்விடத்தினைக் குறுகி, விறல வான ளும் காவலையன்றி, தின் மனம் உவக்கச் சசியென்னுந் தையலையும், இந்திரப் பேர்க் கன்னியையும், நடந்தியின்மேற் சிறிதும் பசையிலாத அவ்வமரரையும் பற்றியே கடிதின் கொணர்வேன்! அச்சமும் உற்றிலாரினும், அசலமேக்கழுந் துருவி, அவனைத் தேர்க்கு உணவாக்கி மீள்வேன்! விடைகொடு,' என்றனன்.

"அத்திறங்கேட்ட சூரன், மனம்நேர்ந்து விடையளித்த லும், பானுவின் பகைஞன் அடி தொழுது, தன்னில்லிற்போகி னன். அப்பொழுது சூரபன்மன், உழையரை நோக்கி, 'அந்த நான்முகனைக் கண்டு என் முன்னர்க் கொணர்வீர்,' என்றனன்.

"அவ்வுழையர், நான்முகனை நாடிச்சென்று, இறை மொழி கூறி, அழைத்து வந்து, அரசன் முன் உய்த்தனர். சூரனுந் தீயன், அவனை நோக்கி, 'அரிய சிந்தையால் அகிலமும் படைத்தல் செய்யும் பிரம, பிரியலுற்றிடுதோர் இவர் கரம் படைப்பாய்,' எனலும், பிரமன், 'அங்ஙனே புரிகுவன் அரசே,' என்று கூறி, அவரைக் குறித்து, 'கூடுக இவர் கரம்,' என்றனன். அக்கணமே, அக்கரங்கள் வளர்ந்தன. அவ்விம்பி

தம் நோக்கிய சூரன் மகிழ்ந்து, முகமனுரைத்துப் பிரமனுக்கு மேன்மை அளித்தான்.

"பிறகு சூரபன்மன், அஜமுகத்தியை நகருள் வைத்துத் தன்முகிலைப் பானுகோபன்பாற்செலுத்திப் புலோமசை இருக்கும் இடத்தினைக் காட்டுமாறு கேட்டனன். அதன்பின் உழையர் சிலரை அழைத்து, அவர்களைப் பார்த்து, 'செங் கதிர், தாரகா கணம், கோள்கள் ஆகியவரை இவ்விடைக் கொண்டு வாருங்கள்,' என்றான். அவ்வுழையர் அவ்வாறே அவர்களைப் பற்றி வந்துய்ப்ப, கடுங்கோபத்தினையுடைய சூரன், அவர்களைப் பார்த்து, 'நீவிர் ஒய்வின்றி நாளுமே வானிடைத் திரிவீர். நீவிர் அறிகிலா விஷயம் ஒன்றில்லை. நீவிர் என் தங்கை பின் செங்கரந் துணித்தானைக் கண்டும் வாளாவிருந்ததென்? கரங் குறைத்த இமையவன் உயிரைக் களைந்திலீர்; ஆயினும், அவனைத் தளை செய்து இவ்விடைத் தந்துமிலீர்; அன்றி; அவ் விஷயத்தை வந்து எமக்கு உரைத்துமிலீர். நும் திறம் நன்று நன்று! மறத்தின் திறத்தால் என் தங்கையின் கரத்தைக் குறைத்தவற்கு நீங்கள் அகத்தரேயன்றிப் புறத்தரல்லீர். எனது ஆணையை அஞ்சி இவ்வேவல் புரிகின்றீர். என்மாட்டு அன்பு சற்றும் அகத்துள் கொண்டிலீர். இஃது உங்களுக்கு முறையோ?' என்று கடுகடுத்தான்.

"நீதியற்ற சூரபன்மன் இவ்வாறு குற்றஞ் சுமத்தலும், அருக்கனை முதலிட்டார், 'அரசரே, எங்களை ஏதும் வெகுளல் வேண்டா. உம் தங்கையின் கரங்களைத் துணித்தானைக் கண்டிலேம்; பிறருரைக்கக் கேட்டுமிலேம். வான் வீதியில் யாம் செல்லும் நெறியில், எம் கண்கள் சென்றன,' என்று நடுங்கி உரைத்தனர்.

"அவர் மொழி கேட்ட சூரன், 'துண்டுபட்ட இவள் கரங் கண்டிலாதவாய், வழிமிசைச் சென்றனவா விழிகள்? நன்று நன்று இவர் சூழ்ச்சி! அண்டரான இத்தீயரைச் சிறையில் அடையுங்கள்!' என்று தம் வேலையாட்களிடம் கூறினான். அவ்வாறே, அத்தீயர் பகலவன் முதலிய பண்ணவரைச் சிறை செய்தனர்.

"பின்னர் அவுணர் இறை, சிலரை அழைத்து, 'விரைவிற் சுழலும் மருத்துவர் தொகையைப் பற்றி வாருங்கள்,' என, அவர் விரைந்து ஓடி, அம்மருத்துகளை வலிந்து பற்றி வந்து, சூரன் முன் விடுத்தனர். அவன் அம்மருத்துகளைப் பார்த்து, 'நீங்கள் வானினும், மண்ணினும், மாதிரத்தினும், மீன் திகழ் கடலினும், வியன் பிலத்தினும், ஊனினும், உயிரினும், ஒழிந்த மற்றெவற்றினும் ஒருமையிற்கலந்திருக்கின்றீர். என் வலிய தங்கையின் எழில் கரத்தினை மாணிலாப் பகைவர் வாளால் துணித்ததைக் கண்டிருக்கின்றீர். உமக்கொளித்திருப்பார் ஒருவருமில்லை. ஆயினும், இந்நகர் வந்து மொழிந்தீரல்லீர். பகைவர் சூழ்ச்சியால், தகுவர்க்குப் பழி வருவது நன்றென மகிழ்ந்தீர் போலும்! உமது பெருமிதம் நன்று!' என்று கூறினன்.

"அச்சமடைந்த அவ்வாயுக்கள், எதிர் மொழி கொடாது ஏங்கி நிற்ப, அவரைச் சூரன் கண்டு, கடுஞ்சிறையிடுமாறு ஆணை தந்தான். திரிதரும் மருத்துகளைச் சிறையிலிட்ட பின், சூரன் வினைஞர் சிலரை விளித்து, ஆண்டு, இருது, மதி முதலிய கூறுபாட்டினரை விரைந்து கொண்டு வரும்படி சொன்னன். அவர் அங்ஙனம் விரைந்து சென்று, அன்னாரைப் பற்றி வந்து அரசன்முன் விடுத்தனர். சூரன் அவரை நோக்கிச் சிற்றமிகக் கொண்டு, 'இந்திரன் இயற்றிய சூழ்ச்சி தக்கதேயென்று அதற்கு உவந்து எங்கணும் துன்றிய நீங்கள் எம்மிடம் கூறுதிருந்ததென்? எம் பணி நித்தலும் ஆற்றித்திரிவீர், உம்மாற் பயனென்னை? தேவரைச் சார்ந்த தீக்குணமுடையீர்!' என்று கூறி அத்தேவர்தம்மையும் கடுந்தளையிட்டனன்.

"பின்னர்ச் சூரன் அருகினின்ற உழையரை நோக்கி, 'நீவிர் இப்புவி மன்னர் அனைவரையும் விடாது கொண்டு வாருங்கள்,' என்றான். அவர்கள் அளவற்ற தூதரோடு சென்று, ஆங்காங்குள்ள காவல் மன்னரைத் தேடிப் பிடித்து வந்து அவுணர் மன்னன் முன் நிறுத்த, அம்மன்னர்கள் யாக்கையில் வியர்வும், மனத்தில் அச்சமும், நாணமும், தளர்வுமுடையராய்க் கை தொழுது நடுங்க, அம்மன்னர் தொகுதியை நோக்கிச் சூரன் வெகுண்டு, 'எமது ஏவலை நீங்கி இந்திரன் சசியொடு இவ்வுலகிடை மறைந்துறைகின்றான். விண்ணுலகில் அவனில்லை. அவ்

வாரூக, நீங்கள் இப்புவியைக் காவலியற்றி வருவது மிக நன்றாய் இருக்கின்றது! அன்றியும், அவ்வாசவன் ஆணையைப் போற்றி நின்ற தூதனொருவன், என் தங்கையின் கரங்களை அறுத்த னன். அதுவும் ஓர்கிலிர்; அதற்கேதுவென்னை? கள்ளுண்டு களித்துக் கலங்கியிருந்தீர்கொல்? உறங்கினீர்கொல்? பெருந் திரு வளமையில் பித்துற்றீர்கொல்? மறைந்த என் பகையோடு மனங் கலந்தீர்கொல்? அன்றி அவரை அஞ்சினீர்கொல்? மட வார் மயக்கில் மயங்கியிருந்தீர்கொல்? நீவிர் இருந்த நிலைமை என்ன? மொழியுங்கள்,' என்றான்.

"அக்கடுமொழி கேட்ட புவி மன்னவர், 'எந்தையீர், நீவிர் உரைத்த தன்மையில் யாங்கள் இசைந்திலம்; பண்டு தொட்டு இன்றளவும் பாரினைக் காக்கின்றோம்; பகைஞரைக் கண்டி லோம்; அன்னார் கரந்துறை கதையுங் கேட்டிலோம்; எம் அன்னை அவ்வழித் துன்முகியோடு வந்ததும் அறியோம்; அன் னார் கரங்களற்றதும் அறியோம். இஃதுண்மை! உண்மை! எம்மன்னரே, மாயம் இது!' என்றனர்.

"சூரபன்மன், 'திரண்ட செல்வத்தால் செம்மாந்து மயங்கி, உலகினைப் போற்ற உள்ளங் கொண்டிலீர். என் வயின் இப் பழி எய்தியது உமக்கு மாயையாய்த் தோன்றியது அழகே!' என்று கூறி, கடலிடைக்கிடந்த வடவை வெங்கனல் இறுதியில் மேலெழும் தன்மைபோலத் தன் உட்கிடந்த சினம் மீக் கொள்ள, மருங்கில் நின்ற தானைத் தலைவரை ஏவித் தனித்தனி தண்டஞ் செய்வானயினன்:

"சிலருடைய செங்கையையும் நாவையும் சேதிக்கச் செய் தான்; சிலர் மூக்கையும் செவிகளையும் களைதல் செய்தான்; சிலர் தாள், தோள், சென்னி ஆகியவற்றைச் சேதிப்பித்தான். அவ்வாறு சூரன் புவிமன்னருக்குப் பலவாறகிய தண்டங்களைப் புரிவித்து, வீரமுள்ள இளைஞன் ஏகுமாறு விடை கொடுத்து அமருகையில், மலர்க்கிழவன் வந்து, அவுணர்க்கிறையை நோக்கி, 'மன்னர் மன்ன, கேட்பாயாக: வான் கதி செல்லும் செங்கதிர், உடுக்கள், மற்றையார், இந்நில எல்லைக்காவலர், ஆகிய அனைவரும் உன் ஏவலில் தவருது நிற்பவர். இவரின்றி

உலகம் நடவாது. ஆகலான், பிழைபினைக் கொள்ளாது, இவ்வரைச் சிறை விடுக்க வேண்டினேன்,' என்றான்.

"சூரபன்மன், நன்றென்று இசைந்து, உழையரை நோக்கி, 'நமது சிறைக்களத்துள்ளாரைக் கொணர்மின்,' என்றலும், அவர் ஓடிச்சென்று, அன்னாரைக் கொண்டு வந்து, அரசன் முன் உய்த்தனர். அவ்விறைவன், அப்பண்ணவரை நோக்கி, 'நீங்கள் முன் போல உங்கள் தொழிலைத் தவறாது நடத்தி வாருங்கள்; இந்திரன் பக்கம் சேராதீர்கள்; செல்லுங்கள்,' என்றான். அவர்கள், 'அவ்வாறே செய்குவோம்,' என்று பணிந்து நயமொழி கூறிச்சென்றார்கள். பின்னர்ப் பிரமனுக்கும், புதல்வருக்கும், அமைச்சருக்கும், முனிவருக்கும், படைத் தலைவருக்கும், மற்றையார்க்கும் விடையளித்துச் சூரன் தன் இல்லிற்கேகினான்.

## 22. அமரர் சிறை புகு படலம்

"முன்பு விடை பெற்றுச்சென்ற பானுகோபன் தன் உறைவிடம் சேர்ந்து, போர்க்கோலங்கொண்டு, தும்பைமலரைச் சூடி, உயர்ந்த படைகளைக் கையிற்கொண்டு, வாயிலில் வந்து, தானை வெள்ளஞ்சூழத் தேரேறி விரைவிற்சென்றான். சென்றவன், மகேந்திர நகரை நீங்கிக் கடலைக் கடந்து, நில எல்லையை அடைந்து, அருகில் வந்த துன்முகியைப் பார்த்து, 'உங்கள் கரங்களைத் தடிந்த இடமெது?' என்று கேட்டனன். துன்முகி, 'இந்திராணி தவமியற்றி இருந்த இடமும், மாகாளன் காவலியற்றி எங்கள் கரந்துணித்த இடமும் இதோ தோன்றுகின்ற மலர் வனமே,' என்று தன் விரலாற்சுட்டிக்காட்டியதும், அவன் பன்னிரண்டு திருநாமம் படைத்த சீர்காழி நந்தவனத்தைச் சார்ந்தான்.

"அக்கணமே அவன் முன்சென்ற தூசிப் படை அக்காவினை அழித்து வெள்ளிடையாக்க, அவன் சசி முதலியவரைத் தேடி எங்கணுங் காணாதவனாய்க் கவலையடைந்து, அவ்விடம் விட்டுப் பொன்னாட்டினை நோக்கிப் படையொடும் சென்றான். அவ்விந்திரலோகம் அழியுமாறு நால்வகைச் சேனைகளும் சென்று அந்நகரினை முற்றியதைத் தூதர் அறிந்து, விரைந்து சென்று,

தந்தை தாயவரையும் கேளிராய தேவரையும் பிரிந்து தனித்துச் சில தேவர்களோடும் வருந்தியிருந்த வாசவன் மதலையாகிய சயந்தனிடம் உரைத்தனர். அச்சிறுவன், 'அந்தோ! பெற்றாரையும் உறவினரையும் பிரிந்து, ஆகுலமடைந்து, பகைவரை அஞ்சி, அவரது குற்றேவலை ஆற்றி நாட்கழித்து வரும் எனக்கு இத்தீமையும் வரற்பாலதோ! பானுகோபன் என்மேல் பெரும்பகை கொண்டு என்னுடன் போர் புரிய நண்ணியுள்ளான். ஆனால், யான் தீய அவுணரைப் பணிந்து உயிர் வாழ்தலினும், இன்றே இவனையெதிர்த்துப் போரில் ஒழிதல் நலம்,' என்று தீர்மானித்து, சூழ்ந்திருந்த தேவரைப் பார்த்து, 'நீங்கள் அஞ்சாதீர்கள்! யான் இப்பொழுது இப்பானுகோபனை எதிர்த்து யுத்தஞ் செய்கிறேன். நீங்கள் எனக்குத் துணையாக வாருங்கள்,' என்று கூறினான். தேவர்கள் சயந்தனை நோக்கி, 'எங்களையாளும் இறைவன் நீ. ஆகையால், இப்பொழுது போரில் நன்றேயாயினும் தீதேயாயினும் ஆகுக; நாங்கள் நின் சொல்லைக் கடவோம். அவ்வாறே போருக்குடம்பட்டு வருவோம்,' என்றார்கள். பிறகு அவன் ஐராவதத்தினை நினைத்தான். அஃதுணர்ந்த ஐராவதம் உடனே இந்திரகுமாரனை அடைந்து வணங்கி நின்றது. அவ்வெள்ளை யானையை வாகனமாகக்கொண்டு சயந்தன் போருக்கெழுந்தான். மற்றைத் தேவர்கள், தாங்கள் செல்லுதற்கு வேறு இடமின்மையால், ஒருவாறு துணிந்து, அச்சம் நீங்கினவர்கள் போன்று, பல படைகளுந் தாங்கி வந்து, சயந்தனைச் சூழ்ந்து போருக்கெழுந்தார்கள்.

"பெருமையினையுடைய வெள்ளையானையின் பிளிற்றொலியும், உட்கவலை கொண்ட வானவரின் ஆரவார ஒலியும் ஒன்றாகி எழுந்தது, சொர்க்கலோகம் தனக்கு அழிவு வரப் போகிறதென்று வாய் விட்டு அலறுதல் போன்றிருந்தது. இம்முறை நிகழ, வலிய தெய்வ யானையின்மீது ஏறிச் சென்ற இந்திரகுமாரன், பானுவின் பகைஞனாகிய கொடியவன் சேனையுட் புகுதலோடும், தேவரை வருத்திய அவுணர் கண்டு, 'ஈதென்ன புதுமை! இதுகாறும் மகேந்திரத்து இறைவன் சொன்ன பணி புரிந்து இத்தேவர் திரிந்து கிடந்தனர்; இன்றோ, பானுவின் பகைவன் ஆற்றலெண்ணாது போருக்குத் துணிந்து திரண்டு

வந்துள்ளனரே!' என்று தேவரை இழித்துப் பேசினர். அவ்வழியே தெய்வப்படையும் அசுரப்படையும் கலந்து, வில் யுத்தம், வாள் யுத்தம் ஆகிய பல வகை யுத்தஞ் செய்தன. இரத்த ஆறுகள் ஒடின. இவ்வாறு கடுமையாகிய போர் புரிந்து வருகையில், தேவ சேனைகள் அசுர சேனைகளுக்குத் தோல்வியுற்றுச் சிதறியோடுதலும், அவுணர் தேவரை விடாது பின் தொடர்ந்து பற்றி, வலிவாகக்குத்திக் கயிறுகொண்டு புயங்களைப் பிணித்து, ஈர்த்துச்சென்று, பானுகோபன் முன்னர் விடுத்தனர். அவன், 'இத்தேவர்களை அகலா வண்ணம் காமின்,' என்று உத்தரவு தந்தான். அதை அயிராவதமூர்ந்து சென்ற சயந்தன் அறிந்து, பற்பல தெய்வப்படைகளை ஏவிக் கடும்போர் புரிதலும், அச்சயந்தனை அவுணப்படை நெருங்கிச் சூழ்ந்து, ஆரவாரித்து, அக்களிற்றின்மீதும் சயந்தன்மீதும் அளவிறந்த கணைகளைத் தூர்த்து மறைத்தது. இவ்வாறு பெருமழைபோல அம்புகளைச் சொரிதலோடும், சயந்தன், தன் அம்புகளால் அவற்றைத் தடுத்து, அவர்கள் பிடித்த வில் அம்பு சூலம் முதலிய அனைத்தும் ஒழியும்படி செய்து, தானவர் சேனையில் உள்ள தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை ஆகிய ஒரு நூறு வெள்ளமுடைய சேனைத்தொகுதியை நாசமாக்கினன். அவன் ஏறி வந்த அயிராவதமானது வாலினல் அடித்தும், துதிக்கைகொண்டு வாரி எற்றியும், காலாற்படுத்தும், மருப்பினல் குத்திக் கோத்தும், ஒலிட்டும் போர் புரிந்தது. அக்கடும்போரில் **நீலகேசன்** என்னும் அசுரன், சயந்தனை எதிர்த்துப் பல வகையாலும் வருத்தி, அவனணிந்த கவசத்தையும் வில் முதலியவைகளையும் அழித்த மாத்திரத்தில், ஒன்றுஞ் செய்ய முடியாத நிலையில் தனித்த சயந்தன், தான் முன் பெற்றுள்ள மாயையால் ஒருவருக்கும் தெரியா வண்ணம் பல விதமாகப் போர் புரிதலும், அவுணர் அவனைச் சிறிதும் அடக்க முடியாமல் அழிவெய்தினர். அவுணப் படைத்தலைவர் மெலிந்தொழிந்தும் திறலற்றும் போயினர்.

"இவ்வண்ணம் தோல்வியுற்ற அவுணப் படையினையும், வெற்றியடைந்து வரும் சயந்தனையும் பானுகோபன் கண்டு, 'இவன் மாயையால் யுத்தஞ் செய்கிறன். இவனது மாயையை

இப்பொழுதே அழிப்பேன்!' என்று கருதி, முன்னை நாள் அசுரகுருவாகிய சுக்கிரன் தனக்குதவிய மூல ஞானமந்திரத்தை உள்ளத்திற் செபித்தலோடும், இந்திர குமாரன் கொண்ட பல மாய உருவங்களெல்லாம் அக்கணமே அழிய, அவன் தெய்வக் களிற்றின்மேல் தமியனாய்த் தோற்றினான்.

"அவ்வாறாகிய காலத்துப் பானுகோபன், தனது தேரை அவனெதிரே செலுத்தி நின்று, 'அடா இந்திரன் புதல்வனே, யான் உன்னைக் கருதி வரும் அளவிலேயே உன் மாயை யாவும் தொலைந்தன; இது பொழுது யான் நின்னைப் பற்றிச்சென்று மகேந்திர நகரத்துச் சூரியனைச் சிறை செய்தது போலச் சிறை செய்குவேன்! என்னை எதிர்த்துப் போர் புரிய ஆற்றலுண்டேல் புரிவாய்,' என்றான்.

"சயந்தன், 'வல்லமையுடையார் வெல்வதும், அஃதிலார் தோற்பதும் உறுதியல்ல; முன்னை ஊழ் முறைப்படி முடி வெய்தும். ஆகலான், நின்னை நீ புகழ்தல் தகாதடா!' என்றான்.

"பானுகோபன், 'வலியிழந்தவர் கூறும் பழைய கதை யினைக் கூறி நின்றாய். சுத்த வீரன் இத்திறம் மொழிவனோ?' என்று கூறித் தன் ஆற்றற்கேற்ற பெருஞ்சிலையினைக் குனித்தான். சயந்தனும் கோபமீறித் தன் சிலையினை வளைத்தான்.

"இவ்வாறு சீற்றமிக்க இருவருள் பானுகோபன் அனேக அஸ்திரங்களை மழை போலச் சொரிந்த காலத்து, சயந்தன் அவற்றையெல்லாம் தன் கணைகளாற்றடுத்து, பானுகோபன் மேல் அவ்வாறு பல கணைகளைத்தூவ, அவன் அவற்றைத் தடுக்க, இவ்விதமே ஒருவரோடொருவர் சமயுத்தஞ் செய்து வந்தனர். பின்னர், சயந்தன், பானுகோபனது வில்லின் நாணினை அறுக்க, அவன் சினந்து ஆயிரங்கணைகளைத் தூண்டி, அச்சயந்தன் ஏறி வந்த களிற்றையும் அவனையும் புண்படுத்தி வருத்தினான். அவ்வமயத்து, விண்ணவர் காளையின் உடல் முழுதும் கணை மழைதைத்துச் சோரி நீர் பெருகி ஓடுதலும், அவன் களைப்படைந்து அயர்ந்து அவசமாய்க் கிடந்தான். அது கண்ட வெள்ளை யானை, மனங்கலங்கி, கடுஞ்சினங்கொண்டு எதிரில் நின்ற பானுகோபன்

தேரை மோதி அழித்து நின்றது. அத்தேரினின்றும் கீழே பாய்ந்த பானுகோபன், அவ்வெள்ளை யானையைச் சீறிச்செல்ல, அவ்வேழம் முனிந்து எதிர்த்து, அவ்வவுணன் மார்பில் தன் கொம்புகளால் குத்துதலும், மளமளவென்று அக்கணமே அதன் நான்கு மருப்பும் முரிந்து போதலும், பானுகோபன் அவ்வேழத்தின் துதிக்கையை ஒரு கையினாற் பிடித்து, மற்றொரு கையினால் அதன் கவுளிடைத் தாக்கினான். தாக்குதலும், அத்தெய்வக்களிறு கடலுடைந்த பேரொலி போலக் கதறி வீழ்ந்து அயர்ந்தது. அது பொழுது சிறிதே தெளிந்து தனித்திருந்த இந்திரன் புதல்வனாகிய சயந்தனைத் தானைத்தலைவர் பற்றி, 'இவன் மிக வஞ்சமுடையவன். ஆதலின், இவனை நன்றாய் அடியுங்கள்; குத்துங்கள்; எற்றுங்கள்,' என்று வலிபுறுத்தும் போழ்து, பானுகோபன் அருகில் வந்து, அவர்களைப் பார்த்து, 'யான் ஏவிய கணைகளால் இவன் பெரிதும் உடல் வருந்தியுள்ளான். ஆதலின், இவனைப் பகைவனென்று கருதி மிகுதியும் வருத்தாதீர்கள். இவனைத் தேவர்களோடு சிறைப்படுத்துங்கள்,' என்றான். அவ்வாணை தாங்கிய அவுணர்கள், சயந்தனை வலிய நாணினால் மந்தரகிரியைப் பிணித்தாற்போலத் தோளிரண்டையும் சேரப் பிணித்துத் தேவர் குழுவினில் உய்த்தனர்.

"இத்தொழில் புரிந்த பின்னர், பானுகோபன் அருகில் நின்ற இளைஞரை நோக்கி, 'சயந்தனும் இத்தேவருமேயன்றி, எஞ்சிப் பதுங்கிய தேவரையும் விரைந்து பற்றி வாருங்கள். அதன் பின்னர் அம்மூதூரைச் சாம்பராக்குங்கள்,' என்று கூறினான். கூறி முடித்ததும், அவ்வேவலர் ஏகி வனப்பு மிக்க அந்நகர் திரிந்து தேவராயினர் யாவரையும், அத்தேவர் மகளிரையும் விடாது பற்றி வந்து அரசன் முன் விடுத்தனர்; அதன் பின்பு திருமகள் உறைவிடம் போன்று திகழும் அழகிய அவ்வமரர் பதியினைத் தீக்கொளுவி நீறாக்கினர். ஊழிக்காலத்தன்றி இடையே அழியாத அந்நகரமூதூர் பூழியாய்ப் போயிற்று. புரந்தரன் வறுமை பூண்டான். மற்றைத் தேவர் சிறை புக்கனர். ஆயதால், செல்வமெங்கே? அதனது நிலையுமெங்கே? வண்டுகள் மொய்யா வளவிய மலர்களை நீங்காது என்றும் தரும் கற்பகங்களும் மங்கிய எரியால் மாய்ந்த பின்னர்,

அவ்விடம் கடலே போலக் காணப்பட்டது. அதன் பின்பு பானு கோபன், 'சயந்தனையும் அவனோடு சார்ந்த தேவரையும், மற்றுமுள்ள யாவரையும் நீங்கள் கொண்டு முன்னர் மகேந்திர நகரத்துக்கு ஏகுங்கள்,' என, அவுணர் அவ்வண்ணமே அவர்களை அம்மூதூருக்குக் கொண்டு சென்றனர்.

"பானுகோபன் உடனே அவ்விடம் விட்டு நீங்கித் தன் சேனையோடு நிலவுலகெய்தி, வீரமகேந்திர நகரம் புக்கு, அரண்மனைக்கு முன்னர் ஏகித் தன் இரதத்தின் இழிந்து, சேனையை அவ்விடமே நிறுவி, பிணித்துச் சென்ற தேவரை அவுணர் காவலன் முன் விடுத்து வணங்கி நின்று, 'எந்தையீர், சசியையும், வானோர் காவலனையும் யான் தேடித்திரிந்துங் கண்டிலேன். தேவரோடு சயந்தனைப் பற்றி வந்தேன்; அன்றியும், விண்ணுலகையும் வெங்கனற்கு இரையாக்கினேன்,' என்று கூறினான்.

"சூரபன்மன் அத்தீயவன் கூறியவற்றைக் கேட்டு மகிழ்ந்து, தன் மார்போடு அவனைத் தழுவி, எதிரிலிருந்த தேவரைச் சினத்தானுற்று நோக்கி, வாளேந்திய உழையரைப் பார்த்து, 'குழுமியுள்ள இத்தேவர்களின் உறுப்புகள் யாவற்றையும் துண்டு துண்டாகத் துணியுங்கள்!' என்றான். அவ்வாட்படை வீரர், அஜமுகி காணும் வண்ணம், அத்தேவர் கூட்டத்துட் புகி போலப் பாய்ந்து, அத்தேவர்களின் கரங்கள், தாள்கள், தோள்கள், காதுகள், கண்டம், சிரம் ஆகிய உறுப்புகளைத் துணிக்கவும், அவ்வுறுப்புகள் அறுபட்ட அவ்வப்பொழுதே மீண்டும் பொருந்தலுற்றன. தேவர்கள் முன் தவஞ் செய்து அமிழ்தம் உண்டவர்கள் ஆதலின், அவர்கள் உடல்கள் அழியாத் தன்மை எய்தின. அவர்கள் வலிமையைக் கண்ட சூரபன்மன் வியந்து, அவர்களை முனிந்து, அவர்களைக் கொல்லுதல் அரிதாம் என்று கருதி, அவர்களைக் கொடிய நிரயத்தினையொத்த கடுஞ்சிறையில் இடும்படி ஆணையிட்டனன். அவ்வீரர், அச்சயந்தனையும் ஏனைய தேவரையும் கடிந்து, பிடர் பிடித்து உந்தி, அங்ஙனமே கொண்டு சென்று, சிறைக் களத்திற்கு அணியராகி, அச்சிறை காவலரை நோக்கி, 'நங்கோன் இத்தீயவர்களைச் சிறையிலிட ஆணை தந்தமையால், இவர்களைக்

காவல் புரியுங்கள்,' என்றுகூறி, அச்சிறை காப்பாளர் மாட்டே விடுத்து நீங்கினர்.

"சிறை காவலர், அத்தேவர்களின் காலில் விலங்கு பூட்டிச் சிறைக்களத்து உய்த்தனர். அதன் பின்பு சூரபன்மன், தன் மைந்தனுக்கு விடை அளித்து, அரசவை நீங்கித் தன் தனியில்லம் எய்தினான். கடுஞ்சிறைப்பட்ட வானவர் பெருந்துயரெய்த, அசுரரால் பற்றப்பட்ட அமரர் மாதர், வேடர் கைப்பட்ட மயில் போல உளம் மாழ்கி, அவ்வசுரர் நகரத்தின்கண் காவல் செய்யப்பட்டு, ஏவல் புரிந்து வந்தனர்.

"அவ்விடம் பானுகோபனோடு எதிர்த்துப் போர் புரிந்து தன் மருப்பொடியப் பெற்ற அயிராவதம், அவ்விடமிருந்து வனத்திற்கேகி, முழுமுதற்பொருளாகிய முக்கண் மூர்த்தியைத் தானுவின் உருவொடு தாபித்துப் பின் சிவாகம விதிப்படி அன்பினால் வழிபட்டு வைகும் போது, அதன் இற்ற மருப்பொரு நான்கும் மீண்டுந்தோன்றின. அவற்றைக்கண்ட அக்களிறு பேருவகை கொண்டு அவ்விடமே தங்கியிருந்தது. அக்காலத்தில் சசியொடு மேரு மலை எய்தியிருந்த இந்திரன், தன் நகரமாகிய அமராபதியை நாசமாக்கித் தேவரோடு சயந்தனைப் பற்றிச் சென்ற பானுகோபன் செய்கையைக் கேள்விப்பட்டவனாகிப் பெருந்துயரடைந்து, அம்மேரு மலையின் ஒரு சாரிருந்து, தயா நிதியாகிய சிவபெருமானைக் குறித்துப் பற்பல வருடம் அருந்தவம் ஆற்றியிருந்தான். பன்னெடு நாள் இந்திரன் இயற்றிய பெருந்தவத்திற்கு உவப்பெய்திய சிவபெருமான், அவனுக்குக் காட்சி தந்தருளி, அவன் விரும்பும் பொருள் யாதென்று வினவ, இந்திரன் தளர்ந்த மனத்தோடும் அடிபணிந்து நின்று, கூப்பிய கரத்தொடும் சிவபெருமானை நோக்கி, 'உயிர்தொறும் ஒழிவின்றி உறையும் இறையே, சூரனால் அடியேம் படுந்துயர்க்கு அளவில்லை! ஆதலால், அச்சூரபன்மாதிகளைச் செற்று அடியேம் துயரகற்றி அருள வேண்டினேன்,' என்றான்.

"அவனது துயர் மொழியைக் கேட்டருளிய சிவபெருமான், 'யாம் உமையை மணந்து, ஒப்பற்ற குமரனை உதவுவம். அக்குமரனே சூராதியரை ஒழித்து, உங்கள் வாழ்வினைத் தருவன்; வருந்தற்க,' என்று கூறி மறைந்தருளினான்.

"சிவபெருமான் அருளியதை மகவான் கொண்டு, திருமால் பிரமன் ஆகிய தேவர்களோடு ஆராய்ந்து துணிந்து, மீன கேதனனை அந்த ஞானமூர்த்தியின்பால் மையலுக்கு விடுப்ப, அவன் சிவபெருமானது நெற்றிக்கண்ணினால் நீறாக, அஃது உணர்ந்த தேவர்கள் இறைவனை வேண்ட, அப்பெருமான் அவர்கள் வேண்டுகோளுக்கிரங்கி, அத்தேவர் கூட்டமும் கணத்தலைவரும் சூழ இமாசலஞ் சென்று, உமையை மணந்து, திருக்கயிலையை அடைந்து, எமதிரக்கத்தினைக் கருதி, எந்தையே, நின்னை நெற்றிக் கண்ணினால் தந்தருளினான்.

"என் தந்தையாகிய குமார மூர்த்தியே, நீ திருவவதரித்த பின்னர், திருமால், பிரமன் முதலிய தேவர்களும், முனிவர்களும் மற்றுமுள்ளவர்களும், இழந்த தத்தமுயிரை எய்தியவரை ஒத்துப் பெருங்களிப்படைந்தார்கள். புரந்தரன் முதலிய தேவர்கள், நீ வாழ்வு தர வந்ததறிந்தும், சூரன்பாலுள்ள அச்சத்தினால் மறைந்து, மண்ணிலும் மற்ற இடங்களிலும் அடங்கிக் கிடந்தனர். அப்பொழுது சூரன் விடுத்த ஒற்றர்கள் உலகெங்கும் திரிந்து வருகையில், அவர்களைத் தேவர்கள் காணின், உயிர் நீங்கிய உடலையொத்து அவசமாய்க் கீழே விழுவார்கள். அச்சூரன் பெயரை மொழியினும், கனவிற்காணினும், உண்ணடுங்கி மெய்வியர்த்து, இறந்த தன்மையராய்ப் பின் உயிர் பெறுவர். இவ்வாறு அஞ்சி மறைந்த தேவர்கள் நீங்க, மற்றையவரைப் பற்றிக் கடுஞ்சிறைப்படுத்தி அவரையும் வருத்த அவன் எண்ணமிக்குளான். அச்சூரபன்மனே, பெருந்திருவினாலும், ஓங்கிய திறலினாலும், அழியாத யாக்கையினாலும், தேவரை வருத்தும் ஆற்றலினாலும் நிகரொருவருமின்றித் தனித்து விளங்குகின்றனன். கண்ணுக்குப் புலனாகின்ற இந்த அண்டத்தின் நிலைமை ஈதாகும். மற்றை ஆயிரத்தேழ் அண்டத்தில் நிகழும் செயல்களை யாங்கள் அறியோம்! பரம்பொருளாகிய குமார மூர்த்தியே, நீயன்றி அவன் திறத்தை அறிய வல்லார் யாவர் உளர்? தொடர்ந்த சீரினைப் பெற்ற சூரனது ஆணையென்றால், திருமால் பிரமன் முதலிய வானவர் அனைவரும், முனிவர் அடங்கலும், ஆயிரத்தெட்டு அண்டங்களிலுள்ள உயிர்களும் கடந்து நடவார்களென்னின், அவன் பெருமையை

யாவர் அளவிட வல்லார்? முடிவற்ற இத்தகைய பெருவளங் களைப் பெற்றுள்ள அவனை, அமல மேனிப் பரஞ்சுடராகிய அண்ணலே, நீயன்றி அடுதல் வல்லார் யாவருளர்? பிரமனோ, அவன்பாற் சென்று நித்தலும் அவனை வணங்கிச் செல்லுவன். திருமாலோ, போர் புரிந்து அடங்கினன். சிவபெருமானோ, அவனுக்கு வேண்டிய வரங்களை அளித்துள்ளான். ஆகலான், வெற்றிக்குரிய எந்தையே, நீயே அவனைக் கொன்று அவன் துணைவரையும் புதல்வர்களையும் ஒழித்து, சிறையிலுள்ள சயந் தன் முதலிய தேவர்களையும் விடுவித்து, திசைமுகன், மக வான் முதலியவர் பதங்களை அவ்வவர்க்கு முன் போல அளித் துக் காத்து, அருள் புரிய வேண்டும்.''

இவ்வாறு கூறிய தேவ குருவின் மொழிகளை, மழலைச் சொற்களை மகவின் வாய்க் கேட்டு உவப்பபடையும் பெற்றோ ரைப் போன்று முருகப் பெருமான் கேட்டு மகிழ்ந்து, முகமன் கூற, வியாழன், "எந்தை நீ அறியாததொன்றில்லை. ஆயினும், அடியேம் உய்யுமாற்றால் வினவியருளிய நீ நினைத்த மாத்திரத் தில் சூரபன்மன் கிளையோடு அழிவெய்துதல் திண்ணம். அவ் வாறிருந்தும், அடியேம் முன்னாள் இயற்றிய தவத்தினால் ஓர் ஆடல் கொண்டு இப்பொழுது வருகத்தருளியுள்ளாய். ஏழை யேங்களைக் காத்தருள வேண்டும்!'' என்று அன்பு ததும்பிய மனத்தனாய்த் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.

சண்முகப் பெருமான், அருள் சுரந்து, "நீ என்றும் நம தருளுக்குப் பாத்திரமாவாய்,'' என்று வியாழனைத் தன் அருகில் இருக்கச் செய்து, அன்புடன் அருகில் நின்ற வாசவனை நோக்கி, "நீ மனத்திற்சிறிதுங் கவலை கொள்ளற்க! யான் சூரன் முத லிய அவுணரை முடித்து, விண்ணவரைச் சிறையினின்றும் மீட்டு, விண் பதத்தினை நினக்கு ஆக்குவன். யாதும் ஐயுறல் வேண்டா,'' என்றருள் புரிந்தான். இம்மை மறுமையாகிய இரண்டின் இன்பத்தினையும் உதவும் எழிலுடைய முருகன் இவ்வாறு மொழிதலும், இந்திரன் அன்பொடு வணங்கி, வான வர் தொகுதியோடு பெருமானைப் போற்றி செய்து, இன்னல் நீங்கி, பெருமகிழ்ச்சியோடு ஐயன் பாங்கரில் இருந்தான்.

# III

## மகேந்திர காண்டம்

### 1. வீரபாகு கந்தமாதனம் செல் படலம்

" விரிஞ்சன்மால் தேவ ராலும் வெலற்கரு விறலோ னாகிப்
பெருஞ்சுரர் பதமும் வேத ஒழுக்கமும் பிறவும் மாற்றி [வான்
அருஞ்சிறை அவர்க்குச் செய்த அவுணர்கோன் ஆவி கொள்
பரஞ்சுடர் உருவாய் வந்த குமரனைப் பணிதல் செய்வாம்!"

இந்திராதி தேவர் அனைவருஞ் சூழ்ந்து போற்றச் செந்திமா நகரில் திருக்கோயிலில் அரியணை மீது எழுந்தருளியிருக்கும் குமரக்கடவுள் பேரருள் கொண்டு, "நான்முகன் முதலிய தேவரும் முனிவரும் போல, அவுணரும் எம்மண்ணனுக்குப் புதல்வரேயாவர். ஆயினும், கொடியவரை அழித்தல் வேண்டுமென்பது, நீதி நூல்களது துணிபாம். ஆயினும், சூரபன் மனையும் அவன் கிளைஞரையும் ஒரு சேரக் கொல்லுதல் நீதி அன்று. அவனிடத்துத் தூதுவனொருவனை அனுப்பிச் சிறை வைத்துள்ள சயந்தன் முதலிய தேவர்களை விட்டு இன்னுஞ் சுகமாகவே வாழும்படி தெரிவிப்போம். சென்றுணர்த்துந் தூதுவன் சொல்லினைக் கேட்டு அவன், தேவர்களைச் சிறையினின்றும் விடுப்பனாயின், அவன் உயிரோடு இன்னுஞ் சில பகல் வாழட்டும்; அன்றி, மறுப்பனாயின், அவ்விடம் யாம் சென்று அவன் குழுவையும் அவனையும் அறக் களைகுவம். ஈதே அறத்தாறு," எனத் தனக்குள் எண்ணிக்கொண்டனன்.

இவ்வாறு திருவுளங்கொண்ட குமார மூர்த்தி, திருமால் அயன் முதலிய பண்ணவரைப் பார்த்து, "அவுணர்தங் குழுவையெல்லாம் அழித்தற்கு இங்கிருந்து நாளை ஏகுவேன். அதற்கு முன்னர், சூரன் மனத்தை அறியும்பொருட்டு ஒரு தூதனை அனுப்ப எண்ணினேன்," என்றான்.

முருகன் இத்திறம் பகர, பதுமத்தன், மாயன் முதலியவர் கேட்டு, " அடற்பெரும்போரினை ஆற்றுமுன், சூரனிடம் ஒரு

தூது விடுத்தலே அறத்தாறு," என்று கூறினர். கூறலும், குமாரக்கடவுள், "இப்பெருங்குழுவினுள் சூரனிடஞ் சென்று உறுதி உரைத்து வருந் திறலுடையார் யாவர்?" என்றலும், நான்முகன் அச்சொல்லை ஆராய்ந்து, "அவ்வீர மகேந்திர புரத்துள் நுட்பமாகச் செல்லத் தகுந்த வாயு தேவனும் செல்லுதல் அருமை. என் விஷயமும் அப்படியே. ஆயினும், நம் நவவீரருள் தலைவனாகிய வீரபாகுவே அவ்வூர் புகுந்து, சூரனைக்கண்டு, வருத்துரைத்து வரும் ஆற்றலுடையான்," என்று அறுமுகப் பெருமான் கருத்துக்கிணங்க உரைத்தனன்.

பெருமான் நன்றெனக் கருணை கூர்ந்து, வீரபாகுவை நோக்கி, "நீ நம் ஆணையைத்தாங்கி மகேந்திர நகரை நண்ணி, அமல மூர்த்தியால் கொடுக்கப்பட்ட வாழ்வினையுடைய சூரனைக் கண்டு, 'இந்திர குமாரனாகிய சயந்தனை முதலிட்ட அமரர்களைச் சிறையினின்றும் நீக்கி அறத்தாற்றினின்று பெருஞ்செல்வந் துய்த்து வாழ்வாய்,' என்று சொல்வாயாக. அம்மொழி மறுப்பானாயின், 'அவுணனே, உன் கிளைஞரை முடித்து உன்னையுஞ் சத்தி வேலுக்கிரையாக்க நாளையே எம்மண்ணல் சேனையோடு ஈண்டுறுவான்; இஃதுண்மை,' என்று கூறி மீளுக," என்றனன்.

வீரபாகு தேவன், "முருகப்பெருமானே, அடியேற்கருளிய வண்ணஞ் சென்று, சூரன் மனத்தை அறிந்து வருகின்றேன்," என்று அடி வணங்கித் தொழுது போயினன்.

அவ்வாறேகிய வீரபாகுவின் பின்னே இந்திரன் சென்று, "திறலுடைய வீர, என் புதல்வனாகிய சயந்தன் தேவர்களோடு மகேந்திரபுரியில் சிறை வைக்கப்பட்டுள்ளான். அவன்பாற் சென்று, அவனை முன்னர்த் தேற்றிப் பின்னர் உன் வினையை முடிக்க யான் நின்னை வேண்டிக்கொள்ளுகின்றேன்," என்றனன்.

வீரபாகு தேவன், "அவ்வாறே செய்வேன்; நீ கவலைப் படாதே," என்றுரைத்துப் பின் தொடர்ந்து சென்ற இளைய வீரர்களையும் அன்போடு நன்மொழி புகன்று மார்புறப் புல்லி யருளிப் பூத மன்னரும் அங்கு நிற்க அருள் புரிந்து, இடம் பரந்துள்ள அக்கடற்கரை அருகினிற்சென்றான்.

கடலருகிற்சென்ற வீரபாகு தேவன் கால்களில் வீர கண்டை 'கலீர்,' என்று சத்திக்க, மேரு மலையினும் உயர்ந்துள்ள கந்தமாதன கிரியின் உச்சியில் விரைந்து ஏறி நின்றான். அவ்வீரன் அம்மலையின்மீது நின்ற காலையில், அவனது பாரத்தைப் பொறுக்க மாட்டாது, அது குலைதலுற்றது. அங்குள்ள புலி முதலிய காட்டு மிருகங்கள், ஆங்காங்கு அலைதலுற்றன. அவ்வீரனது நீண்ட தோற்றத்தைக் கண்ட தேவர்கள், அது சூரனையும் அவன் கிளையையும் அறவேயொழித்தற்காம் என்று நிச்சயித்தார்கள். அன்றியும், தேவர் முனிவர் முதலியவர் தத்தம் பதங்களினின்றும் வீரபாகு தேவன் கொண்ட நெடுந் தோற்றத்தில் தத்தமக்கியலும் உறுப்பில் மணம் நிறைந்த மலர்களைத் தூவிக் கை தொழுது, "ஐயனே, கொடிய சூரனது நகரத்திற்சென்று வெற்றியைக்கொண்டு, அடியேம் கொண்ட துயரனைத்தையுந் தவிர்த்து அருளுவாய்," என்று வேண்டினார்கள். வீரபாகு தேவன்,

**"ஆவதோர் காலை, 'எந்தை ஆறிரு தடந்தோள் வாழ்க!**
**மூவிரு வதனம் வாழ்க! முழுதருள் விழிகள் வாழ்க!**
**தூவுடை நெடுவேல் வாழ்க! தொல்படை பிறவும் வாழ்க!**
**தேவர்கள் தேவன் சேயோன் திருவடி வாழ்க!' என்றான்."**

இவ்விதம் அறுமுகம் படைத்த அண்ணலை ஏத்தினவனுடைய கண்களில் அன்பு நீர் வார, மெய்ம்மறந்து நின்றான். இவ்வண்ணம் குமரவேளைப் பேரன்பு கொண்டு தியானித்துத் தன்னை மறந்து நின்ற வீரபாகு தேவன் நிலையைக்கண்டு உலகின்கண் உள்ள உயிர்கள் விம்மிதத்தொடு உவகை அடைந்தன. அவ்வாறு நிகழ, அறுமுகன் திருவருளடைந்த வீரபாகு தேவன், "இவ்வுருவத்துடன் யான் ஏகுவனாயின், உலகத்தின்கண் உள்ள உயிர்கள் மிகுதியும் இறந்துபடும். ஆகலின், இவ்வுருவினைச் சுருக்கித் தகுதியாகிய சிறு உருவத்தைக் கொண்டு செல்லுவேன்," என்று துணிந்து, அதற்கிணங்கிய வடிவங் கொண்டு, கந்தமாதன கிரியினின்றும் கிளர்ச்சியோடும் வானெழுந்து, சிரசில் பொருந்திய மணி மகுடம் அண்டகோளகையில் தாக்க, சீற்றத்தோடு செல்லும் சரபப்பறவையைப்போன்று, வீரமகேந்திரபுரியை நோக்கி, விரைவில் விண்ணுருகப் போயினன்.

அவ்வீரன், தன் கால் வலிக்கு ஆற்றாது பாதலத்திலழுந்திய அம்மலையைக் கண்டு, முன்போல மேலெழுமாறு மொழிதலும், அவ்வாறே அம்மலை மேலெழுந்து முன் போலத் திகழ்ந்தது. ஆற்றலோடு மேலெழுந்து செல்லும் அவ்வீரன் எழுப்பிய காற்றின் விசையால் அருகிலுள்ள மலைகளெல்லாம் பின் தொடர்ந்து சென்ற தோற்றம், பூதவெள்ளத் தலைவரும், இலக்கத்தெண்மரும் அவனோடு போருக்கெழுந்தது போன்றிருந்தது. விரைந்து வான் வழியாகச் செல்லும் வீரனது விசைக்காற்றினால் அண்டங்கள் நிலை குலைந்தன; உயிர்கள் சுழற்சியடைந்தன; நீர் நிறைந்த கடல்கள் சுழன்று கலங்கின; நீருண்டு செறிந்த மேகங்கள் சுழற்சி அடைந்தன. பொலிவமைந்த சிலம்புகள் சத்திக்குந் தாள்களையுடைய வீரன், புவியை அலைத்தும் முனிவர்க்கு அலக்கண் விளைத்தும் விண்ணவர் திருவைக் கவர்ந்தும் கொடுமை மிகப் புரியும் சூரனைக் கிளைஞரோடும் முடித்தற்கு நினைந்து, முருகன் அங்குய்த்த ஒரு தனிச் சுடர் வேலையொத்து ஏகினான். அன்றியும், திருப்பாற் கடலிற்றோன்றிய விடத்தைக் கண்டத்தில் அடக்கிய சிவபெருமானை மீண்டும் அந்த விடமானது வேண்டிக்கொண்டு, அவன் கண்டத்தினின்றும் புறப்பட்டுக் கடல் நோக்கிச் செல்லுதல் போல, அவ்வீரன் சென்றான்.

இவ்வாறு வீரபாகு தேவன் வான் வழியே விசையிற் சென்று, சூரபன்மன் வதியும் மகேந்திரபுரத்தின் வடக்கிலுள்ளதும், யாளி முகன் என்னும் அவுண வீரனால் காக்கப்படுவதுமாகிய இலங்கை என்னும் ஊரைச் சமீபித்தான். அதுபொழுது யாளிமுக அசுரன், சூரபன்மனைக் காண வேண்டிய நிமித்தம் அனேக சேனைகளோடும் அந்நகரை விட்டு மகேந்திர நகரஞ் சென்றிருந்தபடியால், அதிவீரன் என்னும் அவன் புதல்வன் ஆயிர வெள்ளஞ் சேனையோடு அவ்விலங்கையைக் காவல் செய்திருந்தான். அப்பொழுது வீரசிங்கன் என்னும் அவனது சேனைத் தலைவன் ஐஞ்ஞூறு வெள்ளஞ் சேனைகளோடு அந்நகரின் வடதிசை வாயிலில் இருந்தான்.

அதனருகில் வீரபாகு தேவன் அஞ்சாது செல்லலும், அவ்வீரசிங்கன், அத்தகைய துணிவாற்றிப் போதரும் வீரன்

யாவனே என்றும், தன்னை அவன் மதித்தானில்லை என்றும் சீற்றங்கொண்டு, அவனைத் தான் கொல்ல வேண்டுவது அவசிய மென்று கருதினன். ஆதலால், அவன் வடவைத் தீப்போலக் கனன்று, காற்றினும் மனத்தினுங் கடிய வேகத்தையுடைய னாகி, வான் வழி வரும் வீரவாகு முன்னர் அசுரசேனை சூழ எதிர்த்து நின்றான்.

வீரசிங்கன், திறல் புயத்து வீரனைப் பார்த்து, "எனது காவலைக் கடந்து இதுவரையில் இப்படி வந்தவர் ஒருவருமில்லை. தனித்து வந்த நீ யாவன்? உன் உயிர்க்குச் சிறிதும் நட்பில்லாய். நீ கொலைபடு முன்னம் வந்த காரியத்தைப் பகருவாய்," என்றான்.

வீரபாகு தேவன், "யான் சூரன் வைகும் மாநகர் நண்ணிப் பின்னர்த் திரும்பிவிடுவேன். இதனால் நினக்கென்னை? இஃது உனக்குப் பிரியமில்லையாயின், உன்னாலாகும் செயல்களைப் புரிவாய். யான் உனது ஆற்றலைக் காண்பேன்," என்றனன்.

திறலின் மிக்க சிங்கன், வீரபாகு தேவன் கூறிய மொழியைக் கேட்டு, அவன் அவுணர்தம் ஆணையை மதித்தானில்லை என்றும், அவன் வலியன் போலும் என்றும் எண்ணி, அருகில் நின்ற படைஞரை வீரத்தோடு நிற்கும் அவனதுயிரைக் கொள்ளுமாறு கட்டளையிட்டனன். உடனே வேட்டைக் கானம் புகுந்த வேடர்கள் வலிய சிங்கத்தை வளைந்தாற்போல, வீரபாகு தேவனை அவுணர்கள் வளைந்து போர் புரியத் தொடங்கினார்கள்.

அந்த அவுண வீரர்கள் வேல் முதலிய தெய்வப்படைகளால் அமர் புரிகின்ற காலத்து, வீரபாகுவாகிய அண்ணல், அரக்குருவங்கொண்ட மலையகத்து அக்கினிக் கடவுள் நுழைந்து அதனை உருக்கியுடைக்குமாறு போல, நெருக்கமாய் நின்ற அந்த அவுணர் நீத்தம் உடைந்து ஒழியக் கூரிய வாள் ஒன்றினை ஏந்தி, துண்டுதுண்டாகத் துணித்துருட்டினன். பனிப்படலத்தைச் சூரியன் அழிப்பதுபோலச் சூழ்ந்துநின்ற அசுரப்படையைத் தனி வாளினால் தடிந்து, நூறு வெள்ளஞ் சேனையை மாள்வித்தனன். மற்றுமுள்ள அவுணர்கள் மனங்

கலங்கித் தங்கள் உயிரை ஓம்புதல் எண்ணிப் புவியினும் வானி னும் பொள்ளெனப் போய் மறைந்தார்கள். அப்போது வீர சிங்கன், சீற்றம் மிக்கவனுய், மாதிரங்களைக் கடந்து வளர்ந் துள்ள வீரந்தங்கிய தோள்களையுடைய அண்ணலின்மேல் சூல மொன்றினைச் செலுத்தினன். அதனை வீரன் தன் வாளால் இரு துணியாக்கி ஆரவாரித்தான்.

ஆர்த்தலும், சிங்கன் வீரபாகுவின் ஆற்றலை மதித்து, தன் கைக்கண் உள்ள படைகளில் கூரிய குலிசமொன்றினை வீச, அதனையும் வீரன் தன் வாளினுல் மாற்றி, மீண்டும் அவன் படை எடா வண்ணம் அவன் முன்பு சென்று, அவன் கரங்களை யும் முடியையுங் கொய்து, கடல்வாய் எறிந்து, நாந்தகத்தை உறையுட்செறித்து, வெற்றியொடும் அவ்விடம் விட்டுப் பெயர்ந்தான்.

பின்பு, வீரபாகு தேவன் கடலின்மீது மேரு மலை சென் றது போலச் சென்று, அவுணர்களுக்கு இருக்கையாகிய இலங்கைமா நகரின் மூன்று குவடுகளின் இடையதாயுள்ள ஒரு குவட்டில் பாய்ந்தான். மாயைகள் வல்ல நெடுங்கிரியாகிய கிரவுஞ்சத்தை வேற்படையால் துகளாக்கிய அண்ணலால் விடப்பட்ட தூதனெருவன் அவ்விலங்கையில் பாய்ந்த அவ் வளவில், திறலினை உடைய அதிவீரனும் ஏனைய அவுணர்களும் கலங்கி ஏங்கி, இடியுற்ற நாகம் போல மெய் பதைத்துப் பதறி வீழ்ந்தார்கள்.

பெருஞ்செல்வத்தினையுடைய மகேந்திரபுரத்தின் வடக்கே உள்ள இலங்கை, வீரன் வலிக்கு ஆற்ருது, கடலிடை அழுந்தி இன்னல் அடைந்தது. அவ்வாறு ஆற்ருது கடலிடை ஆழ்ந்த அவ்விலங்கை, தந்திமா முகத்துத் தாரகப் பிரமமாம் விநாயகப் பெருமானை வழிபடாமல் சுராசுரர் பாற்கடலைக் கடைந்துழி அரவால் பிணிக்கப்பட்ட அம்மந்தரகிரியானது அக்கடலில் ஆழ்ந்ததை ஒத்தது. அன்றியும், வலியுடை வீரபாகுவின் திரு வடியூன்றுதலால் கடற்கீழ்ப் போகிய இலங்கை, அன்று மக வான் குலிசாயுதந் தொடரக் கடலிடை அஞ்சிப் புக்க மைந் நாகமலையை ஒத்திருந்தது. இவ்வாறு இலங்கை மாநகர் கட லிடத்து ஆழ, அதனிடத்துள்ள அசுரர் கடலின் மூழ்கிப் பரி

தவிக்கலாயினர். இலங்கை நகரைக் காத்து வந்த அதிவீரன் அதை உணர்ந்து, "இவ்வரிய செயல் செய்தவர் யாவர்! சூர பன்மனே! அவன் இளைஞரோ! அன்றி அவன் மைந்தரோ! அவர்களன்றி இச்செயல் புரிவார் யாவர் உளர்! அப்படியெனின், அவர்கள் நம் ஊர்க்குத் தீங்கு செய்தற்கு யாதொரு ஏதுவுமில்லை. மாயையும் இவ்வழிவு செய்தற்கு நினையாள். முத்தேவரும் இச்செயல் செய்தற்கு நினையார். மற்றைத் தேவருள் யாரிது செய்யுந்திறத்தார்! அன்றியும், எல்லாத் தேவரும் நமது சிறையகத்து உள்ளார். மாதிரத்தின் உள்ளாரும், வானின்கண் உள்ளாரும், ஏனைய அனைவரும் நம் இறைவன் ஆணையிலிருந்து நீங்கார். இதனைச் செய்ய அவர்க்கு எண்ணுதலும் இயலுமோ! யான் இந்நகரினைக் காத்த திறம் நன்று! தந்தை நீங்கிய காலத்து, யான் இவ்விலங்கை நகரோடு கடலில் ஆழ்குவனேல், என்னை அவுணர் யாது கூறுர்! யான் தவமியற்றி முன்னுள் நான்முகனிடத்து மாயை வன்மைகளும் படைகளும் பெற்றது எதற்கு! எல்லாம் நகைத்தற்கிடமாயின அல்லவா! மன்னர் மன்னன் இஃதறிகுவனாயின், என்னைத் தண்டிப்பானல்லவா! என் தந்தையும் அவ்வாறு இயற்றுவன். ஏனையர் என்னை எள்ளுவர்," என்று எண்ணி வருந்திப் பின்னர்த் தன் படைஞருட்சிலரைத் தன்னெடு அழைத்துக்கொண்டு, கடலின்மீது சென்று, அங்கு நின்ற வீரபாகுவின் நிலையைக் கண்டு வெகுண்டு, இதழ் கடித்து, நகை செய்து, "ஒடியொளித்து அண்டர் குழுவினைச் சார்ந்த இவ்வீரன், நம் மூதூரை இக்கடலிடை ஆழும் வகை செய்து, அஞ்சாது மேலும் இவ்விடம் நிற்கின்றுன். திக்கெங்கும் கீர்த்தி பெற்ற அசுரர் ஆணை மிக நன்று!" என்று கூறிப் பின்னர்க் கடலில் ஆழும் அசுரர் குழுவின் செயலைக் கண்டு நின்ற வீரபாகுவின் முன் சென்று எதிர்த்து நின்று, போர் செய்ய முயன்றுன்.

அது கண்ட வீரபாகு தேவன், தன் உறையிலிட்ட வாளை உருவிக்கொண்டு, சூழ்ந்து நெருங்கிய அவுணர் படையை ஊனெடு உயிர் சிந்தும்படி விரைந்து அவர்கள் சிரங்களையும், கரங்களையும், புயங்களையும், பதங்களையுங் கொய்தனன். அவுணர் பெரும்போர் அக்கணமே முடிந்தது.

பின்பு தன் படைஞர் இறந்ததை அறிந்த அதிவீரன், பெருங்கோபமுடையனுய், "நொடிப் பொழுதில் உன்னை உண்டு விடுவேன்!" என்று போர் முயன்று, குந்தமென்னும் ஓர் ஆயு தத்தை எடுத்து வீரபாகு தேவன்மேல் எறிந்தனன். அதனை வீரன் தன் கை வாளினுல் இரு துண்டாக்கி நின்றுன். அவு ணன் மற்றும் ஒரு தண்டத்தை அவன் மார்பை நோக்கி விட் டனன். வீரன் அதனை வாளால் தடுக்கவில்லை. ஆனுல், அது மார்பிலேறிய மாத்திரத்தில் அணுக்களாகி ஒழிந்ததைக் கண்ட அவுணன், மனங்கலங்கி மயங்கி நின்றுன்.

அவுணன் அதன் பின்பு பல படைகளாலும் போர் புரிந் தும், ஒரு பயனுமில்லை. பின்னர் அவன், 'இவ்வீரன் உயிரைக் கொள்ளுதல் அரிது!' என்று கவன்று, வாளை ஏந்தி வந்து, வட்டணை புரிந்து, "இவ்வாளாயுதத்தைப் பிரமனிடத்துத் தவ மியற்றிப் பெற்றேன். இதனைப் பேதிக்க வல்லவர் ஒருவருமிலர். இத்தகைய வாளைப் பிடித்தேன். நீ இப்பொழுது இறத்தல் திண் ணம். வருக! வருக!" என்று மிகை மொழி கூறி, வீரபாகு தேவன்முன் சென்றனன்.

வீரபாகு, "நின் ஆற்றல், நன்று நன்று! நம்மை நீ வெல்லு வையேல், நின்னை யாவரும் மதிப்பர். நின்று உரையாடுவது ஏன்? கடிதின் வருவாய்," என்றனன்.

அதிவீரன் அதைக்கேட்டுச் சமீபிக்க, இருவரும் நெடு நேரம் வாட்போரில் சிரத்தைக் குறித்தும், கழுத்தினைக் குறித் தும், செவிகளைக் குறித்தும், இன்னும் பல அங்கங்களை நாடி யும், அவ்வவ்விடங்களில் உய்த்தும், கற்ற வன்மையால் அவ் வவற்றை மாற்றி வட்டணை வந்தும் போர் புரிகையில், வீரபாகு தேவன் இடைப்புகுந்து, அதிவீரனது தாள், சிரம், தோள், ஆகம் ஆகிய உறுப்புகளைத் துணித்து, விரைவில் அவனை நமனுக்கு இரை ஆக்கினுன்.

## 2. மகேந்திரம் செல் படலம்

வீரபாகு தேவன், அதிவீரனைக் கொன்ற பின்னர்த் தன் வாளை உறையிற்செலுத்திப் போரைத் தவிர்த்து, வீரமகேந்திர

புரிக்கு நேரே செல்லக் கருதி, அவ்விலங்கையினின்றும் புறப் பட்டான். அவ்வாறு வீரபாகு மேலெழுதலும், கீழழுந்திய இலங்கை, முன் போல மேலெழுந்தது. சென்ற வீரமொய்ம்பன் சக்கரவாளகிரியைப் போலச் சூழ்ந்துள்ள வீரமகேந்திரபுரத்து மதிலையும், அதன் நாற்புறமும் அமைந்துள்ள கோபுரத்தையும் கூர்ந்து நோக்கினன். அம்மகேந்திரபுரத்து வடதிசையின்கண் உள்ள சமுத்திர வாயிலில், கோபுரப் புறத் திண்ணையின் பக்க மாய்க் கோரன், அதிகோரன் என்னும் இரண்டு வீரர் பெருஞ் சேனையோடு நகரைக் காவல் புரிந்திருந்தனர். ஆயிரவெள்ளந் தேரும், கஜமும், இரண்டாயிர வெள்ளம் புரவிகளும் நெருங்க, அத்தொகை வீரர்கள் காவல் புரிந்து இருப்பதை வீரபாகு தேவன் கண்ணுற்று, விம்மிதங்கொண்டு, பகைவராகிய அவு ணர் ஊர் புகுதற்கு உன்னி, "இவ்வழியே செல்லுவேனாயின், சேனைகள் என்னைச் சூழ்ந்து அமர் புரியும். யானும் அவற் றோடு எதிர்த்துப் போர் புரிய நேரும். அவ்வாறாயினும், இக் குழுவினை முடிக்க ஒரு பகல் கழியும். அவ்வண்ணம் கழியி னும், மீண்டும் நகரினுள்ளிருந்து அளவில்லாத ரதகஜாதிப் படையின் வெள்ளம் வந்தெய்தும். வந்த தானவப் படைகளை எதிர்த்து மலைந்து, எந்தையாகிய முருகவேள் திருவருளால் தமியேன் அழித்து நிற்பினும், இந்நகரின்கண்ணுள்ள அவுணப் படைமுடிவெய்த அளப்பிலாக் காலஞ்செல்லும். அவுணரோ, எளியரல்லர். அளவிலாக் காலஞ் செல்லினுஞ் செல்லுக. யான் அவுணப்படை அடங்கலும் அழிப்பினும், அதன்பின்பு சூரன், தன் துணைவரையும் புதல்வரையும் விடுப்பன். அத்துணைவர் புதல்வர் முதலியவர்களை யான் வெல்லுதல் அரிது. அறுமுகப் பெருமான் அருட்டுணை கொண்டு பற்பகல் போர் புரிந்து வெல்லுவேனெனினும், எவராலும் வெல்லுதற்கரிய சூரன் வந்தெதிர்ப்பன். அவனோடு பன்னாள் போர் புரியினும் அவன் ஆதி மூர்த்தியின்பால் அன்று கொண்ட வரத்தின் மகிமையால் அழிவெய்துபவன் அல்லன். அவனை மால், அயன் முதலியவரே வெல்லுதலரிதாம்; அவர்கள் அவன் ஆணை அஞ்சி, இன்னும் இடர்ப்படுகின்றார்கள். ஆகலான், யான் சமராற்றிச் சூரனைக் கொல்லாமல், வறிதே மீளுவது பழிப்புக்கிடமாம். அன்றியும், அருஞ்சிறைப்பட்ட தேவர் துன்பமும் அகலாது. ஆதலால்,

யான் அமரை ஒழித்துத் தூதனாக வந்த என் கடனை முடிப்பதே தகுதி,'' என்று எண்ணினன்.

இவ்வாறு கருதிய வீரபாகு தேவன் அவ்வாயிலில் அமைந்த சேனைத் தொகுதியையும் காப்பின் வன்மையையும் கண்டு, உட்புகுதற்கு இயலாமையால் மருங்கிலுள்ள கீழ்த் திசை வாயிலை நண்ணுதற்கு அவ்வடக்கு வாயிலை நீத்துக் கிழக்கு வாயிலின் முன்னர் ஏகினான். அவ்விடத்தில் மேதிக் கண்ணன், வீரபானு என்னும் இரண்டு வீரர்கள் வாள் ஏந்திய கையராய்ப் பல்படைத் தொகுதி சூழக் காவல் புரிந்திருப்பதைக் கண்டு வீரமொய்ம்பன் விம்மிதங்கொண்டு, அவ்வாயிலும் தான் உட்புகுதற்கு இயலாத அரிய காப்பினை உடையதாய் இருக்கின்றதென்றெண்ணி, அதன் பாங்கருள்ள தென் திசை வாயிலைக் காண அவ்விடம் விட்டு அப்புறம் ஏகினான்.

அவ்வாறு ஏகுங்காலத்து, ஆயிரமென்னும் கணக்குடைய ஆனை முகத்தொடும், இரண்டாயிரம் கரத்தொகையொடும், கலத்தின்மீது மீகான் அமரும் தோற்றம் போன்று விண்ணிடத்தில் அக்கீழ்த் திசை வாயிலைப் போற்றி இருக்கும் கயமுகன் என்னும் பெயரினையுடையான், அண்டர்கள் அஞ்சும் ஆர்ப்பொடு ஆகாயத்திற்செல்லும் வீரனாகிய அண்ணலைக் கண்டு கனன்று, "என் ஆற்றல் மிக்க காவலைக் கடந்து இவண் வந்த நீ மாயையினும் வல்லையோ? நுண்ணிதின் நுழையும் அக்காற்றும் என் ஆணையை இகந்து உட்புகும் ஆற்றலுடையதோ? வறியராய்த் திரியும் வானவர் உறையும் ஊர் எனக்குறித்து வந்தனை போலும்! எனது ஆணையைச் சிறிதும் அறியாய் போலும்! யான் ஆள்கின்ற இந்நகரத்து நீ வந்தனை! சீறுகின்ற சிங்கம் வாழுமிடத்து, மான் பிணை அஞ்சாது புக்கு, ஆராயச் செல்லுங்கொல்? சிறையிற்பட்டுழல் தேவர் செய்கையை அறியும்பொருட்டு இந்திரன் ஆளாகி அணுகினைகொல்லோ!" என வினவினன்.

பின்னர் அவன் வீரபாகுவை நோக்கி, "நில்லடா! எங்குச் செல்கின்றாய்!" என்று, அவன் அருகே சென்றனன்.

வீரபாகு தேவன், "இவன் நாளுலந்து நம்பால் நண்ணுகின்றனன்," என்று நகைத்து, அவ்வுழியே நிமிர்ந்து நின்றான்.

அக்கயமுகன், கனன்று, பெரியதொரு மலையை அவ்வீரன் தோளின்மிசை எறிந்தனன். அம்மலை, வீரன் தோள் வலிக்காற்றுது துகளாய்ப் போயிற்று. மற்றும் பல மலைகளையும், பல விதப் படைகளையும் கொண்டு அக்கயமுகாசுரன் அண்ணலொடு போர் புரிந்து வருகையில், வீரபாகு தேவன் தன் வாளினை உருவி, அவன் முகத்திலுள்ள துதிக்கை ஆயிரத்தையும், மருங்கிலுள்ள கரம் ஈராயிரத்தையும் துணித்து, மார்பைக் காலால் உதைத்து, அவன் உயிரை நீக்கினன்.

இவ்வண்ணம் இயற்றிய பெரும்பூசலைக் கண்ட அவுணர், பல திசைகளினின்றும் அவ்வலிய போர் இயற்றுவார் யாவர் என்று அறிய விரைவில் அவ்வுழிச் சார்ந்தனர். அவர் வருகையைக் கண்ட வீரபாகு தேவன், இனித் தான் அவ்விடம் இருப்பின் பெரும்போருக்கு இடம் உண்டாகும் என்று எண்ணி, தான் அவர் காணு வண்ணம் வேற்றுருக்கொண்டு, அவ்வாயிற்காவலையும் கடந்து உட்புக வேண்டுமெனத் துணிந்தனன். பின்னர் அவன் அறுமுகத்து அண்ணலின் திருவருளை நினைந்து, ஓர் அணு உருவினைக் கொண்டனன். நோக்கருந்திறத்தால் நண்ணிய உருவங்கொண்ட வீரன், அவ்வடுகளம் நீங்கி, விண்ணிடை எழுந்து, கீழ்த்திசை வாயில் கோபுரத்தின்மீது அமர்ந்து, அம்மகேந்திர நகரத்தின் வளப்பங்களையெல்லாம் கண்ணுற்று வியந்து, "மண்ணினைத் தொடர்ந்துள்ள ஆயிரத்தெட்டு அண்டத்தின்கண்ணுள்ள அரிய பொருள்கள் எண்பதினுயிரம் யோசனைப் பரப்பில் கண்களுக்குப் புலனாகும் வகை நெருங்கியிருப்பது மிக்க இறும்பூதல்லவா! சித்த வீரனாகிய சூரன் அரிதாற்றிய பெருந்தவத்தில் இவையெல்லாம் அடங்கின போலும்! இச்சூரனுக்கு ஈசன் அளித்துள்ள ஆயிரத்தெட்டு அண்டத்தின் அமைந்த எல்லையற்ற சிறப்பையெல்லாம் ஈண்டே தொகுத்து வைத்துளான். இவ்வனைத்தையும் கண்ணாரக் கண்டேன்! ஆனால், அறம், வாய்மை, இரக்கம் ஆகியவற்றை ஈண்டுக் கண்டேனில்லை. அவற்றையும் சூரன் சிறைப்படுத்தினனே! அளவற்ற தேர்கள் தங்குதற்கு இடங்களும், மற்றைப் படைகளுக்கு உரிய இடங்களும், அள்விறந்த யோசனைப் பரப்புள்ளவாயிருக்கின்றன. மேன்மை தங்கிய இம்மகேந்திர

மூதூரைப் படைத்தற்கு ஒரு நான்முகன் ஆற்றலுடையனே! சூரன் பெற்றுள்ள அண்டங்களிலுள்ள அளவற்ற நான்முகப் பண்ணவர் அனைவருங்கூடி இயற்றினார்களோ! மண் மகளின் தவப்பயனென்று கூறுதற்குரிய இம்மகேந்திரபுரத்தின் மிக்க சீரை இரண்டு கண் பெற்றவர் முழுமையுங் காணுவதெங்ஙனம்! இமையா நாட்டத்தவருக்கும் அரிதே! வாழ்வு மிக்க இம் மகேந்திர நகரத்தின் பெருமை,

**"ஆயி ரம்பதி னாயிரம் கோடிநா அளவில்**
**ஆயி ரம்விழி ஆயிரம் ஆயிரஞ் செவிகள்**
**ஆயி ரம்புந்தி கொண்டுளார்க் கல்லதிவ் வகன்சீர்**
**ஆயி ரம்புயங் கண்டுதேர்ந் துரைப்பினும் அடங்கா."**

இவ்வாறாகிய இந்நகரத்தினது அழகு முழுமையும் விடாது நோக்குதற்கு அறுமுகப்பெருமான் அருளின் திறத்தால் அளவிலாப் பேருருக்கொள்ள எண்ணமுடையேன். ஆயினும், பகைவருக்கு என்னைக் காட்டுதல் தகுதியற்றதென்று ஒழிந்தேன்," என எண்ணினன்.

பின்பு அவன் கீழ்த்திசை வாயிலில் நின்ற கோபுரத்தி லிருந்து நீண்ட நகரத்தின் சீரனைத்தையும் நோக்கி, இனித் தான் தாமதிப்பது தகுதியல்லவென்று துணிந்து, அவுணர்க்கிறையாகிய சூரபன்மன் உறையும் நகரினை எய்தும்பொருட்டு, அக் கோபுரத்தினின்றும் இடை வழியாக விண்மீது நடக்கத் தொடங்கினான். அவ்வாறு நடந்த வீரபாகு தேவன், அறுமுகப் பெருமானை மனத்தில் நினைந்து, சூரபன்மனுக்கு முதற் குமாரனாகிய பானுகோபன் உறையும் இடத்தை அடைந்தனன். பின்னர் அவன் அப்பானுகோபனைப் பார்த்து விம்மிதம் அடைந்து, பின்பு அதை விட்டு, அக்கினி முகன், இரணியன் ஆகிய புதல்வர்கள் இல்லங்களுங் கடந்து, மற்றுமுள்ள புதல்வர்களாகிய மூவாயிரவர் உறையும் கோயில்களுங் கடந்தான். பின்னர், அமைச்சருள் தலைமை எய்திய தருமகோபன் என்பவனது மாளிகைச் சிகரத்தில் தங்கிச் சுரர்களும், வாசவன் புதல்வனும் அரக்கர் சூழத் துன்பமுற்றிருக்குஞ் சிறைக் களத்தினைக் கண்டான். அச்சிறைக்களத்தின்கண் பெருந்துயர் எய்தியுள்ள

சயந்தன் முதலிய தேவர்களின் செயல்களைச் சிறிது கவனிப்போம்:

## 3. சயந்தன் புலம்புறு படலம்

திருப்பாற்கடலிற்பிறந்த சசியினையொத்த நுதலினையுடைய அச்சசியின் குமரனாகிய சயந்தன் கால்கள், விற்பயிற்சியால் தழும்படைந்திருக்கும் கரங்களைப்போன்று, பற்பல காலம் விலங்குகள் பூண்ட காரணத்தால், பெருந்தழும்படைந்திருந்தன. அவன் மானம் இகல் முதலியவை தன் உயிரை அலைத்திட, அதனால் துயரமாகிய பெருங்கடலுள் அழுந்திச் சோர்வானாயினன். அச்சிறைக்களத்துள்ள கொடுமையினால் அவன் இறந்திருப்பன்; பல உகங்கள் இடர்க் கடலின் மூழ்கலால், அப்பழியினின்றும் நீங்கத் தானே தன்னுயிரை வலிந்து விட்டிருப்பன்; முன் அமிழ்தமுண்டமையால், அவ்வண்ணமாகாது, உயிர் கொண்டு எஞ்சா இன்னலிடைப்பட்டு இகழப்பட்டிருந்தனன். நீங்காத மாறுபாட்டினையுடைய சூரபன்மனது கடுஞ்சிறையிற்பட்டு, அவுணரால் இடும்பையுற்ற சயந்தன், ஒரு கணப்போதை உகம் பலவாகக்கழித்து வைகுவான். நூற்றெட்டு உகங்களாக இந்திரன் சிறுவன் தனது உடல் வனப்புமாழ்கி அவுணரால் அலைக்கப்பட்டு உய்யுமாறின்றிக் கலங்கிக் கிடந்தான். இந்திரன் சசியொடு மறைந்திருந்த சூழலிற்சென்று அவ்விருவரையும் பற்றிக் கொணர்ந்தனர் என்று சிலர் பொய்யுரை கூற,அவன் அம்மொழியினைக்கேட்டு அயர்ந்து அவசமாய்க் கீழே விழுவன். நறுந்தேன் பிலிற்றும் ஐந்தரு நீழலை ஆர்வத்தொடு எண்ணுவன்; ஆய்ந்த மலரணையை நினைப்பன். தன்னுடைய நேயமங்கையர் புணர்ச்சியை உன்னுவன்; இந்திரத் திருவினை எண்ணிச் சோர்வன்; 'துறக்க நாடிழந்து பண்டு பாரகஞ் சென்ற குரவர் யாண்டையுள்ளார்?' என்பன்; 'சீற்றக் கொடுமையுடைய சூரன் மறச்செயல்களை எடுத்துக்கூறி முறையிடுதற்கு உமாபதி உறையும் திருக்கயிலைக்குச் சென்றனன் கொல்!' என்பன்; 'பானுகோபனோடு பகைத்தெதிர்த்துப் போரியற்றிய காலத்து, அப்போர்க்களத்து மருப்பினைத்தும் இற்று வீழ்ந்த தெய்வதக் களிற்றின் செய்கை என்ன ஆயிற்றோ! அதனை அறிந்திலேன்!' என்பன். அவன் இவ்வாறு

அளவிறந்த எண்ணங்களை எண்ணி எண்ணித் துயருழந்து வெய்துயிர்த்து விம்மி வைகினன். இவ்வண்ணம் மற்றைத் தேவர்களும் சூழ்ந்து துன்பமுற்றிருந்தார்கள். அச்சிறைக் களத்தைக் கண்டகன் முதலிய கொடிய அவுணர் பலர் சூழ மிக் காத்து வந்தனர்.

அக்காப்பாளர், வீரபாகு சென்ற அன்று, தேவரோடு சயந்தனைச் சூழ்ந்து, "நம் இறைவனாகிய சூரபன்மனது ஆணை இகந்து சசியொடு மறைந்த வாசவன் யாண்டையுள்ளான்? விரைவில் கூறின் நீ பிழைப்பாய். அன்றேல், உன் ஆவி போகும். முன்னாள் போன்று இந்நாளைக் கருதாதே. உண்மையைச் சொல்லு," என்று உரைத்தனர்.

அக்காதகர் கடுமொழி கேட்ட சயந்தன், "அன்று என் தந்தையுந் தாயும் வானுலகத்தை விட்டு ஓடியதை அறிவேன்; அன்னார் எங்குச் சென்றனரோ, அறியேன். புண்பட்ட நெஞ்சினேன் யாது கூறுவேன்!" என்று விடை இறுத்தான். மற்றுமுள்ள தேவரும் அவ்வாறே மொழிந்தனர்.

அப்பொழுது அசுர வீரர்கள், "இத்தேவரெல்லாரும் கள்ளத்தனத்தால் ஒன்று கூடி, ஒரே விதமாய்ப் பொய்யே கூறுகின்றனர். இத்தீயரை யாது செய்தால் உண்மை மொழிகுவர்!" என்று எண்ணி, அத்தேவர்களை நஞ்சினும் தீயினும் கொடியவாய சொற்களால் பழிப்பார்கள்; கன்னங்களுடே தோமரம் உய்த்துக் கடைவார்கள்; சின்னப்படுத்துவார்கள் போன்று உடல்முழுதும் சேதிப்பார்கள்; துண்டப்படுத்திய உறுப்புகளெல்லாம் விரைவில் ஒன்றிப் பிண்டத்திற்கூடக் கண்டு கடுங்கோபங் கொண்டு, வாள் ஏந்தி மார்பில் குத்திப் பற்களைக் கடித்து வலிந்து குடைவார்கள்; தண்டத்தினால் தலை கிழியும்படி மோதுவார்கள்; இன்ன தன்மையவாகிய கடுந்துன்பங்களைக் காவலாளர் செய்கையில், சயந்தனும் விண்ணவர்களும் அக் கொடுமையை ஆற்றாராகிக் குலைவெய்தி, விமலனை நினைந்து, "ஓ ஓ!" என்று அரற்றினார்கள். சீற்றமும் வலிமையுமுடைய அவுணர் இயற்றும் கொடுமைகளால், சயந்தன் இறுதி எய்தவில்லை. இவ்வாறு அவர் தண்டம் இயற்றுந்தொறும் உடல் சின்னமடையாமலும், உயிர் நீத்து ஏகாமலும் சயந்தன் அது

பொருது நிகழும் தான்பத்தினை மாத்திரம் அத்தேவரோடு தானும் அடைந்து வந்தான். வாள், தோமரம், எஃகம், தண்டம் முதலிய பல படைகளும் முறிவெய்தவே, காவலாளர் கரங்களின் திறம் குறையவும், அக்காவலாளர் நொந்தவராகி, அமரர்க்குக் கேடு செய்தலை விட்டு, வலி குறைந்து, "இவர் புண்ணியப் பகுதியின் நாளெலாம் இற்ற பின்னர் இறுவரேயன்றி, மற்றொரு வினையால் இடையில் விளிபவரல்லர். அமிழ்தமுண்டவர், தவத்தின் மிக்கவர், நாமியற்றிய தண்ட வன்மையால் நொந்தும் சாதும் உண்மை கூறினரல்லர்," என்று இன்ன பல கூறி, சிப்பபடைந்தனர்.

விண்ணவரை அலைத்த கொடுஞ்செயலால் அவர்கள் கைந்நோவெய்தி, வன்மை நீங்கிக் கவன்று, அத்தேவருக்கு அணியராய் நெருங்கிக் குழுமி, ஒரு சாரிருந்து காவல் போற்ற, எய்ப்படைந்த சயந்தன் விண்ணவரோடு இருந்து, கண்ணுதற்பெருமானாகிய கருணையங்கடலை நினைந்து, "வந்திப்பவர் பவமனைத்தும் நீக்குபவனே, எத்தேவரது சிந்தைக்குமெட்டாத சிவனே, செழுஞ்சுடரே, இப்பிறவி முழுதுந் துயருழக்கச் செய்தனையோ! அந்தி வண்ணத்தண்ணலே, நின் பெருமை அறிய வல்லார் யாவர்? கங்கை முடித்தாய், கண்ணுதலாய், கறைமிடற்றாய், திங்கள் புனைந்தாய், சிவனே, அனைத்துயிரையும் அழித்தல் செய்பவன் நீயென்றே வேதங்கள் கூறுகின்றன. நினது ஆணையால் வந்த இத்தீமை நின்னருளாற்போவதன்றி, மற்று யாவரே இதைத் தவிர்க்க வல்லார்? நாரணற்கும் நான்முகற்கும் நாடுதற்கரிய பெம்மானே, அனைத்துயிர்க்குந் துணைவா, அடியேன் உயிரளிக்க வாராயோ? அமரர் இரிந்தோடத் துரத்திய கொக்குருக்கொண்ட தானவனைத் தடிந்து, அவனது ஒரு சிறையைச் சின்னமாக அணிந்த அருட்பார்வை என் பக்கம் பார்த்திலையோ? கயிலை மலையில் புகல் புகுந்த தேவர்தமை அடல் கருதிச்சென்று அந்தரனைத் திகிரிப்படையால் ஆவி போக்கி, அமரரை அஞ்சலென்றனை அன்றோ? நந்தாருங் கங்கை நதி செறிந்த காசி நகர்தன்னில், தந்தியாம் அவுணன் தவத்தினரைத் துரத்தி வர, அன்னானைச் சினந்து, அவன் தோலுரித்த கருணைக்கு இணை யாது? இள

மதியும், கிளர் வெம்பொறியரவும், ஆற்றினெடு மிலேந்த ஆதி யெம்மண்ணலே, நினதருளால் இவ்விடுக்கண் எனக்கேகின், இழிந்த வளம் யான் வெஃகேன்! நோற்றல் புரிவேன்! தண்ணிய மலர்த்தேன் துளிக்கும் தருநிழற்கீழ் வாழ்வு வெஃகி நண்ணிடேன். விண் பதமும் குற்றமாம்; பிறர் பதமும் நாசமாம். சிவனே, சிவனே, நின் பொற்பதமே வேண்டுவன் யான்!" என்று பற்பல எடுத்து மொழிந்து, இரங்கி, விடமேறிய தொக்க உணர்வெலாம் அடங்க, ஒன்றும் ஓராதவனுய் மயங்கி, உயிர் நீங்கினவர் போன்று கிடந்தான். மற்றைத் தேவரும் சயந்தனேப்போலவே அழுது மாழ்கி, அவசமாய்க் கிடந்தனர்.

## 4. சயந்தன் கனவு காண் படலம்

விண்ணவர்களும் சயந்தனும் வீரமகேந்திரபுரியில் சிறையகத்து வருந்தியதை எண்ணிலா உயிர்தோறும் உற்று இன்னருள் புரியும் குமரேசனும் அறுமுகத்து அமலன் உணர்ந்தான். ஒரு புகலுமின்றியே தனித்தயருஞ் சிறுவரைத் தழுவி அஞ்சலென்று உரைக்கும் ஈன்ற தாயையொத்த அவ்வமலன், கொடிய சிறைத்தலேப்பட்டு அவுணரால் மெலிந்து அறிவு மாழ்கிய அத்தேவரை அருள்வது கருதினன். சிற்றடியினேயுடைய குமரன் போலச் செந்தி மாநகர் வந்து இமையவர் இடுக்கணே அகற்றுவான் இருந்திடும் அப்பரமன், தனது உணர்ச்சி நீங்கி அயர்ந்து கிடந்த சயந்தன் கனவில் அருள் புரியக் கருதினன்.

**"வீறு கேதனம் வச்சிரம் அங்குசம் விசிகம்**
**மாறி லாதவேல் அபயமே வலமிடம் வரதம்**
**ஏறு பங்கயம் அணிமழுத் தண்டுவில் இசைந்த**
**ஆறி ரண்டுகை அறுமுகங் கொண்டுவேள் அடைந்தான்."**

இவ்வாறு தந்தையில்லாதானுகிய பரமனேத் தாதையாக வுடைய கந்தவேள் ஏகி, இனேய தன் உருவினேக் காட்ட, இந்திரன் மகன் நட்ப யாக்கையுள் இருந்த கண்களாற்கண்டு தொழுது, "தொண்டு பூண்டு கிடக்குஞ் சிறியேன் படுந்துன் பத்தைத் தொலேக்க எண்ணிப் பேரருளாற்போந்த நின்னேக் குறித்து உணரின், நீ திருமாலும் அல்லே; பிரமனுமல்லே; அண்டர் நாதனும் அல்லே; இவ்வருட்படிவம் கொண்டு வந்த எந்தை நீ, யானறிய அருளுதல் வேண்டும்," என வேண்டினன்.

அறுமுகம் படைத்த அல்லால், "யான் அக்கொன்றை சூடிய பரஞ்சுடர் குமரன். உன்றன் அல்லலை உணர்ந்து ஈண்டு வந்தேன். உன் தந்தையின் குறை நங்குறை ஆகிய யாவையுங் கூறி வந்து என்னை வேண்டலும், இந்தப் பூமியின்கண் எய்தி, மாயைகள் வல்ல கிரவுஞ்ச மலையையும் சூரனுக்கிளைய தாரகனை யும் கொன்றேன். அத்தாரகனை அட்ட பின் திருச்செந்தூரில் அமர்ந்தேன். வனசத்தவனும், திருமாலும், நின் தாதையும், அமரரும் என் வயின் உறைந்தனர். நின் தங்கை மேரு கிரியில் இருந்தனள். நீ வருந்தற்க. வீரபாகு என்னும் வீரனைத் தூதாக விடுத்திருக்கின்றேன். அன்னான் சூரன் மக்களுள் ஒருவனையும் அளவிறந்த அவுணர்களையுங் கொன்று, இந்நகரையழித்து நீறு படுத்தி, இன்று மாலையே என்னை அடைகுவன். செல்லுகின்ற இப்பகல் நீங்கிய பின் நாளையே அச்செந்தி நகரை விட்டுப் போந்து, இந்நகர்க்கணித்தாய் வைகி, ஐந்திரு தினத்தில் அவு ணர் தந்தொகையும் அல்லலாற்றிய சூரனும் முடிய அடுவேன். சூரனை முடித்த பின்னர் வானவருடன் உன்னைச் சிறையினின்று நீக்கி நந்திருவெலாம் ஈவேன்; ஆகலான், உன் துயர் விட்டிடு வாய்," என்று கூறியருளினன்.

அறுமுகப் பெருமான் உரைத்தருளியவற்றைக் கேட்ட சயந்தன், அகத்திலுள்ள மையல் மாசிருள் நீங்கப்பெற்றுப் பெருமகிழ்ச்சி உடையனாய், உரோமஞ்சிலிர்க்க, விழிநீரொழுக, சையமேயெனத் தோள் உயர, அரிதிற்பெறும் அமிர்தம் எளிதிற் கிடைத்துண்டவர் போன்று, விம்மிதனாய்த் தான் கற்ற சுருதி களாற்பாடியும் ஆடியும் வணங்கினன். அவன் பெற்ற உவகை யின் பெருமையை யாவரே அளவிட வல்லார்! இந்திரன் மதலை அவ்வாறு எம்பிரான் திருவடிகளைப் பன்முறையும் வணங்கித் துதித்து, "புல்லிய அடியேன் புன்கணை வலிந்து தீர்த்தருளி னை. யான் உரைப்பதுமுண்டுகொல்! அடியேம் நின்பால் புகல் புகுந்தனம். எம்மைக் காத்தருளுவாய்!" என்று வணங் கினன்.

சயந்தன் கூறிய மொழியைக் கேட்ட முருகப்பெருமான், "கூறிய நின் குறையை முடிப்பேன். இஃது உறுதி. அன்றியும், இந்நகர்க்கு யான் ஏவிய தூதவன், நின்னையுந் தேவரையுங்

கண்டு நயமொழி கூறி நடக்கவும் செய்வேன். அதனையும் காண்பாய்," என்றருளிப் போயினன்.

அப்பொழுது இறந்து நீங்கிய புலன்களெல்லாம் அறிவுடன் தோன்றலும், அக்கனவினின்றும் அகன்று, விடந் தலைக்கொள்ளச் சாய்ந்தவர் மந்திரத்தால் தெளிந்தெழுமாறு போல, அவன் மெல்ல எழுந்தான். பின்னர் அவன் கனவிடைக் கண்ட யாவையும் நினைந்து, நெஞ்சங் குளிர்ந்து, தமது தீவினையெல்லாம் ஒழிந்தவோ என்று பன்முறையும் பகர்ந்து, சிவகுமாரன் திருவருளை நினைந்து, உவகையென்னும் ஒப்பற்ற கடலுள் அமிழ்ந்தான்.

அப்பொழுது அயர்ந்து அவசமாய்க் கிடந்த வானுளார் கனவுதோறும் சென்று, இந்திரன் புதல்வனுக்கு முன்னருளியவாறு கூறியருளி, "வருந்தலீர்," என்று குமரன் மறைந்தருளினன்.

கொன்றை வேணியன் தந்த குமரகுருபரன் ஏகிய பின்னர், தேவர் கனவின் நீங்கி, விம்மிதமெய்தி விழித்தனர். பின்னர் அவர்கள் ஒருங்கு கூடிப் பெருமகிழ்வு எய்தி, அக்கனத் திறத்தைத் தீயவர் கேட்பரேல் துன்புறுத்துவர் என்று கூற அஞ்சி, இந்திரகுமாரன் மருங்கினிற்சென்று, மெல்ல அவன் கேட்குமாற்றால் விளம்பினார்கள். அத்தேவர்கள் கூறிய விஷயம், முன் தான் கண்ட கனவின் திறத்தை ஒத்திருக்கக் கண்ட சயந்தன், பார் முழுதுமுண்டவனுமென உடலம் விம்மி, உயிர் தோறும் உலாவி நின்ற அறுமுகப்பெருமான் கருணையை நினைந்து, அவன் திருவடியை வழுத்தியிருந்தான்.

## 5. வீரபாகு சயந்தனைத் தேற்று படலம்

இவ்வண்ணம் சயந்தன் தேவர்களோடு சிறையில் இருக்கையில், முன்னர்த் தூது சென்ற வீரபாகு தேவன், தருமகோபனது மாளிகைச் சிகரத்தின்மீது இருந்து, சிறைப்பட்டுள்ள தேவர்களின் பெருந்துன்பத்தை நோக்கினன். அப்பொழுது அவுணர்கள் சிறையினுள்ள தேவர்களைச் சூழ்ந்து காத்திருந்த வன்மையை நோக்கி, "இவ்வவுணர்கள் காணுவண்ணஞ் சென்று சிறையகத்துள்ள சயந்தன் முதலிய தேவர்களைக்

தாள வேண்டும். அதற்கு இதுவே உபாயம்,'' என்றெண்ணி, முருகப்பெருமானை மந்திரத்தால் தியானித்ததும், அச்சிறை காப்பாளர் அம்மந்திரத்தின் வன்மையால் அறிவிழந்து, மயங்கி வீழ்ந்தனர். உடனே வீரபாகு தேவன், சிறைக்களத்துள்ளே புகுந்தான். தனித்துப் புகுந்தவனாகிய வீரபாகு தேவனைப் பார்த்த வாசவன் மதலையை முதலிட்ட வானவர், "நமது கனவில் எழுந்தருளி அருள் பாலித்த வெற்றி வேற்பெருமான் விடுத்த தூதுவன் போலும் இவ்வீரன்! காவலாளரும் அயர்ந்திருந்தனர்,'' என்று தம்முட்கலந்து பேசி, ஆர்வமுற்றிருந்தனர். உட்சென்ற வீரபாகு தேவன், அத்தேவர்களுக்கு அருகே நின்று, அறுமுகம் படைத்த அமலனது திருநாமம் புகல, அத்திருநாமத்தைக் கேட்ட இந்திர குமாரன், முன் அறியாதவன் போன்று தொழுது நின்று, "செந்நிறக் குஞ்சியினையுடைய தூவர் காப்பினிற்றளர்வுறும் எங்கள்பால் நீ வந்த காரியம் யாது? அதனைக் கூறவேண்டும்,'' என்றான். அதைக் கேட்ட அறிவனாகிய வீரபாகு தேவன், "பரமன் தந்த அறுமுகத்து ஐயனுக்குப் பின் வந்தவன் யான்; அன்னான் விடுக்க வந்த தூதன். என் பெயர் வீரபாகு. உங்கள் சிறையை விடும்பொருட்டுச் சூரன் முன் சில நல்லுரை கூறி அறிவிக்கப் போந்தேன்,'' என்றனன்.

அவ்வாறு வீரன் கூறிய மொழியினைக் கேட்ட வாசவன் மைந்தன், 'முன்னம் அறுமுகப்பெருமான் அருளிய வண்ணமே ஆயிற்று!' என்று மகிழ்ச்சிமேல் மகிழ்ச்சி பெற்றவனாகி, "இடும்பை நிறைந்த மனத்தினேம் குறையை வினவுதற் பொருட்டு நீ எய்தினாய். அதனால், இந்த வலிய சிறையினின்றும் நீங்கி யாங்கள் இடர் ஒழிந்து, முத்திப் பேற்றையும் அடைந்தனம்,'' என்று நயமொழி கூறினான். பின்னர்ச் சயந்தனைப் பார்த்து வீரபாகு தேவன், "வெற்றி வேற்பெருமான் விண்ணவராகிய உங்களை வலிந்து ஆள எழுந்தருளியுள்ளான். முன்னிழந்த ஆக்கம் முழுதும் பெறுவீர்கள். பின்னும் வேண்டுவனவற்றையும் பெறுவீர்கள். பிரமனைச் சிறை செய்து அன்று சிருட்டியை நடாத்திய செவ்வேற்கரத்தன் நும் சிறையை நீக்க இவ்விடத்து உற்றான் என்றால், நீங்கள் முன்

செய்துள்ள தவத்தின் பெருமை அளவிடற்பாலதோ? கடும் பாவமும் கையிகந்த தண்டமும் இயற்றும் இவ்வசுரர் நெருங் கிய மூதூரில் அறிஞர் செல்லவும் நினைப்பரோ? எம்பெருமான் அருளிய ஆணையால் யான் அங்ஙனம் செல்வார் போன்று, அகமெலிந்து, ஈண்டு வந்தேன்; உங்களைக் கண்டேன்; அள விலா உவகை எய்தினேன்," என்று மொழிந்தான்.

சயந்தன், "யாங்கள் இச்சிறையிற் படுமுன்னரே என்பெற் றோர் அமராவதியினின்றும் நீங்கினர். அத்தகையார் யாண்டுச் சென்றனரோ! அவரது செய்கை என்னோ! அறிகிலேன்! ஆக லான், வீரனே, நீ அறிகுவையாயின் உணர்த்துவாய்," என்றான்.

அம்மொழி கேட்ட வீரபாகு தேவன், சயந்தன் தந்தை யாகிய இந்திரன் அவன் தாயாகிய சசியோடு விண்ணுலகு நீத்து மண்ணுலகினை எய்தி, பன்னிரு திருநாமம் படைத்த சீகாழியை நண்ணி, கறை மிடற்று அண்ணலைக் கருத்திற் கொண்டு நோற்றது முதல் அறுமுகப் பண்ணவனொடு அலை வாயிற்சென்றது ஈறாக, ஒன்றும் ஒழியாது உரைத்தருளினன். மேலும், "உங்கள் குறையை அறுமுகப்பெருமான் நீக்குவன்; இன்னும் சில பகல் மனக்கவற்சியடையாமலிருங்கள். அன்று தட்சன் சிவாபராதப்பட்டு இயற்றிய அவ்வேள்வியிற்சென்று, நீங்கள் அத்தகுதியற்ற அவியினை நுகர்ந்த பாவம், அஞ் ஞான்றே வீரபத்திரன் உங்களை முறையாற்செற்றும், முடிவு எய்திற்றில்லை. அப்பாவத்தின் எச்சம், உங்களை இதுகாறும் வருத்திற்று. சண்முகப்பெருமான் கிரவுஞ்சகிரியொடு தார கனைத் தடிந்தது, உம்மைத் துன்புறுத்தும் சூரனைக்கொல்ல நாட்கொண்ட தன்மையல்லவா? அம்முருகப்பெருமான், அங்கு அமர்ந்தே தன் சத்தி வேலை ஏவுவனாயின், கடல்களேழும், வரைகள் அளவில்லனவும், உலகனைத்தும் அடங்கிய பல அண் டங்களும் அழிய அவற்றை ஒருகணப் பொழுதில் அவ்வேல் சங்கரித்துவிடும் என்னில், சூரனைத்தொலைப்பது கருதி இவ் விடத்து வருதல் அப்பெருமானுக்கு ஒரு விளையாட்டாவதன்றி வேறாகுமோ? நம்மை ஆளாக உடைய அச்சண்முகப் பெரு மான் கூறி விடுத்த செம்மொழியினை அவுணர்க்கு இறைவன்

